உபதேச சாரம்

21-5

"ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம்"

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு



॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१७








# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

17

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१७

उपदेशसाहस्री ( गद्यप्रबन्धः )



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 17

உபதேச ஸாஹஸ்ரீ (கத்யபாகம்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1965



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

21-5

## பதிப்புரை

ஸ்ரீ தக்ஷிணாம்னாய ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் திவ்யானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவரும் ஸ்ரீ ஜகத்குரு கிரந்த மாலாவில் இது 17-வது மலர்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய வேதாந்த ப்ரகரணங்களில் உபதேசஸாஹஸ்ரீ ஒன்று. இது கத்ய ப்ரபந்தம், பத்யப்ரபந்தம் என்று இரண்டாக பிரிக்கப்பட்டு உள்ளது. கத்யப்ரபந்தத்தில் 116 வாக்யங்களும் பத்ய ப்ரபந்தத்தில் 671 சுலோகங்களும் உள்ளன. இரண்டிலும் சேர்ந்து 787 உபதேசங்கள் உள்ள போதிலும் அநேகம் என்ற அர்த்தத்தில் 'உபதேசஸாஹஸ்ரீ' என்றே பெயர் வழக்கில் ஏற்பட்டுள்ளது. இதில் கத்யபாகம் மட்டும் வழக்கம் போல் பதவுரை கருத்துரைகளுடன் இதில் பிரசுரிக்கப்பட்டு உள்ளது. இதே ரீதியில் பத்யபாகமும் பின்னால் வெளி வரும் இந்நூலில் காணும் விஷயங்களின் ஸாரம் முதலில் காட்டப்பட்டுள்ளது. விஷய அட்டவணையும் சேர்க்கப் பட்டிருக்கிறது. இது ஸ்ரீ சங்கர கிருபா பத்திரிகையில் தொடர்ச்சியாக வந்து இப்பொழுது தனிப் புஸ்தகமாக வெளிவந்துள்ளது.

இந்நூலுக்குப் பதவுரையும் விரிவான கருத்துரையும் எழுதித்தந்துதவிய நம் சங்கர கிருபா உதவி ஆசிரியர் வியாகரணசிரோமணி, வேதாந்த வித்வான் ப்ரஹ்மஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் அவர்களுக்கு நம் கிருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள் அவதரித்த புண்ய ஸ்தலமான காலடி க்ஷேத்திரத்தில் விச்வாவஸு வருஷம்

சித்திரை மாதம் நடைபெற்ற ஸ்ரீ சங்கரஜயந்தி மஹோத்ஸவத்தில் ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீஜகத்குரு அவர்களும் ஸ்ரீ துவாரகா ஜகத்குரு அவர்களும் ஸ்ரீபுரி ஜகத்குரு அவர்களும் விஜயம் செய்துள்ள சமயம் சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹா ஸந்நிதானம் அவர்களின் திவ்ய சரணாரவிந்தங்களில் இம் மூலம் ஸமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

**K. V. சுப்பரத்னம் அய்யர்**

பொதுக்காரியதர்சி

அகிலபாரத சங்கரஸேவாஸமிதி


விஷயாநுக்ரமணிகை

# உபதேச ஸாஹஸ்ரீ ஸாரம்.

(வசனப் பகுதி)

வேதாந்தம் என்று கூறப்படும் உபநிஷத்துக்களுக்கும், அவைகளின் தாத்பர்யத்தைத் தீர்மானிக்க வியாஸரால் அருளப்பட்ட ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கும், பாஷ்யமியற்றியும் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாளுக்கு மனதில் ஸமாதானம் ஏற்படவில்லை. ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்துகொள்ளாததால் ஸம்ஸாரஸாகரத்தில் தத்தளிக்கும் மாந்தர்களை எப்படியாவது கரைசேர்த்துப் பேரானந்த நிலையில் வைப்பதற்காக ஆசார்ய ரூபமாக அவதரித்த கருணாமூர்த்தியல்லவா பகவத்பாதர்! அவர் இயற்றிய பாஷ்யத்தின் உதவியைக்கொண்டு ஒருவாறு உபநிஷத்தின் பொருளைத் தெரிந்துகொண்டபோதிலும் அவைகளால் மட்டும் ஸாமான்ய அதிகாரிகளுக்கு ஆத்மாநுபவம் ஏற்படுவதில்லை. உபநிஷத்துக்கள் மிகவும் விரிவாக இருப்பதாலும் பற்பல விஷயங்களைப்பற்றிப் பேசுவதாலும் அவைகளின் கருத்தைக் கண்டுபிடிப்பது யாவருக்கும் ஸுலபமன்று. மிக்க சிரமப்பட்டு உபநிஷத்துக்களின் கருத்தைத் தெரிந்துகொண்டாலும் கூட இவ்விஷயத்தில் பற்பல ஸந்தேஹங்கள் எழக்கூடுமாதலால், அனுபவத்தில் காணும் பலவித யுக்திகளைக் கொண்டு அவைகளைப் போக்கிக்கொண்டால்தான் நமக்கு நிர்ணயம் ஏற்பட்டு ஆத்மாநுபவம் ஏற்படும். இதையே தான் श्रोतव्यः श्रुतिवाक्येभ्यः मन्तव्यश्चोपपत्तिभिः (ச்ரோதவ்ய: ச்ருதிவாக்யேப்ய: மந்தவ்யச்ச உபபத்திபி:) "உபநிஷத் வாக்யங்களைக்கொண்டு ஆத்ம தத்வத்தை விசாரித்துப் பிறகு யுக்திகளைக்கொண்டு மனனம் செய்யவேண்டும்" என்று பெரியோர்கள் சொல்வார்கள். இதற்காகத்தான் பரம கிருபாநிதியான ஆசார்யாள் அநேகம் பிரகரண நூல்களை இயற்றியுள்ளார்கள். இவைகளெல்லாம் நம் மனதில் எழும் ஸந்தேஹங்களைப் போக்கி உபநிஷதர்த்தத்தை நிர்ணயித்து ஆத்மாநுபவமேற்பட உதவியாக உள்ளவை. இவைகளில் உபதேச ஸாஹஸ்ரீ என்னும் பிரகரணத்தைப்பற்றிச் சிறிது ஆராய்வோம்.

இது இரண்டு பாகமாக அமைந்துள்ளது. முன் பாகம் வசன நடையிலும் பின் பாகம் சுலோக ரூபமாகவும் உள்ளது. உண்மையில் இரண்டும் வெவ்வேறான தனித் தனி நூல்களாகத்தான் காணப்படுகின்றன. ஒன்றின் தொடர்ச்சி மற்றொன்றில் காணப்படவில்லை. ஒரே ஆத்ம தத்வத்தை வெவ்வேறு விதமாக விரிவாகவும் சுருக்கியும் கூறும் பல உபநிஷத்துக்களும் தனித்தனி நூலாக இருப்பது போல் இவையும் தனித்தனி நூல்களே.

கத்யப் பிரபந்தத்தில் கடைசி பதத்தை இருதடவை சொல்லி நூலை உபஸம்ஹாரம் செய்து பிறகு தனியாக மங்களாசரணத்துடன் பத்ய ப்ரபந்தத்தை ஆரம்பிக்கிறார். பத்ய ப்ரபந்தத்தின் ஆரம்பத்தில் உபோத்காத பிரகரணம் காணப்படுகிறது.

பிரஹ்மதத்வமானது மிகவும் ஸூக்ஷ்மமாகவும் புத்திக்கு எட்டாததாகவுமிருப்பதால் நன்கு புரிவதற்காக கதைகள் மூலமும், கேள்வி பதில் ஸம்வாத ரூபமாகவும் உபநிஷத்துக்கள் பல இடங்களில் உபதேசிக்கின்றன. शिष्याचार्यप्रश्न-प्रतिवचनरूपेण कथनं तु सूक्ष्मवस्तुविषयत्वात् सुखप्रतिपत्तिकारणं भवति । ... कश्चित् गुरुं ब्रह्मनिष्ठं विधिवदुपेत्य प्रत्यगात्मविषयादन्यत्र शरणमपश्यन् अभयं नित्यं शिवमचलमिच्छन् पप्रच्छेति कल्प्यते என்று கேனோபநிஷத் பாஷ்யத்தின் ஆரம்பத்தில் காணப்படுகிறது. அதிலும் ஒரு சிஷ்யன் ஆசார்யனிடம் சென்று எவ்வாறு தன் ஸந்தேஹங்களைக் கேட்க வேண்டும் என்பதையும், அவன் ஸந்தேஹங்களைப் போக்கி ஆசார்யர் உபதேசிக்க வேண்டிய முறைகளையும் இந்த கத்ய பிரபந்தத்தில் விளக்குகிறார்.

अथ मोक्षसाधनोपदेशविधिं व्याख्यास्यामः (மிகவும் விரிவான பல நூல்களை இயற்றிய பிறகு, முக்திக்கு ஸாதனமான ஆத்ம தத்வஞானத்தை சிஷ்யனுக்கு உபதேசிக்க வேண்டிய முறையைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் கூறுகிறோம்) என்று இந்நூலை ஸ்ரீ பகவத்பாதர் ஆரம்பிக்கிறார். பிறகு சிஷ்யனுடைய லக்ஷணங்களையும் ஆசார்யனின் லக்ஷணங்களையும் விரிவாகக் கூறி சிஷ்யனை நன்கு பரீக்ஷித்து தன்

உபதேசம் சிஷ்யனின் மனதில் நிலைத்து நிற்கும்வரை திருப்பித்திருப்பி உபதேசிக்கவேண்டுமென்கிறார். 'श्यात् पुनः पुनः यावद्ग्रहणं दृढीभवति।' ஞானம் நிலைப்பதற்கு இடையூறுகளைப்போக்கி ஞான ஸாதனங்களை அனுஷ்டிக்கச் செய்து எவ்விதத்திலும் சிஷ்யனுக்கு அனுபவம் ஏற்படும்படி செய்வது ஆசார்யரின் கடமையாகும். शिष्यस्य ज्ञानाग्रहणं च लिङ्गैर्बुद्ध्वा अग्रहणे हेतून् ... तत्प्रतिपक्षैः अपनयेत्। ... ज्ञानोपायं सम्यग्ग्राहयेत्। தான் உபதேசித்த விஷயத்தை சிஷ்யன் எவ்வாறு தெரிந்துகொண்டிருக்கிறான் என்பதை அவன் வார்த்தையைக்கொண்டே பரீக்ஷித்து அதற்குத்தக்கபடி போதிக்கவேண்டும். அதாவது:—

உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளபடி ஆத்மாவின் லக்ஷணங்களை முதலில் விரிவாக உபதேசிக்கிறார். அதன் பிறகு 'நீ யார்' என்று சிஷ்யனைக்கேட்கிறார். சிறிது விவேகமுள்ள சிஷ்யன் சரீரத்தைக் காட்டிலும் வேறாகத் தன்னைக்கூறியபோதிலும் சரீர தர்மங்களையெல்லாம் தன்னிடமிருப்பதாகக் கூறுகிறான். மேலும் பல கேள்விகளைக் கேட்டு அவன் கூறும் பதிலைக்கொண்டே அவன் நினைப்பது தவறு என்பதை அவனே உணரும்படி செய்கிறார். உலக சிருஷ்டியைக்கூறி சரீரம் ஏற்படும் விதத்தையும் சரீராதிகளின் தன்மையையும் ஆத்மாவின் தன்மையையும் விவரித்து "நீ சரீராதிகளல்ல" என்பதை விளக்கிக் காட்டுகிறார். பரமாத்மாவே உலகை சிருஷ்டித்து சரீரத்தையும் உண்டுபண்ணி அதில் தானே நுழைந்திருப்பதால் 'நீதான் அந்த பரமாத்மா' என்று உபதேசித்து, சிஷ்யன் கூறும் பலவித ஆக்ஷேபங்களுக்கும் அநேக சுருதி வாக்யங்களைக்கொண்டும் தகுந்த பல யுக்திகளைக் கொண்டும் ஸமாதானம் கூறுகிறார். இவ்விஷயத்தில் பிரத்யக்ஷம், லோக வியவஹாரம், சாஸ்திர வியவஹாரம் இவைகளின் விரோதத்தை அவித்யையைக்கொண்டு பரிஹாரம் செய்கிறார்.

இவ்விதமாக 'சிஷ்யாநுசாஸனம்' என்னும் முதல் பிரகரணத்தில் சரீராதிகளைக் காட்டிலும் வேறான ஆத்மா

ப்ரஹ்மமே என்று உபதேசித்துவிட்டு 'கூடஸ்தாத்வயாத்மபோதம்' என்ற இரண்டாவது பிரகரணத்தில் ஆத்மா கூடஸ்தனுகவும் அத்வயனுகவும் இருப்பதால் ப்ரஹ்ம ஸ்வரூபனுக இருப்பதுதான் ஸ்வாபாவிகமென்றும் சரீராதி ஸம்பந்தமெல்லாம் அவித்யையால் நடுவில் தோன்றி மறைந்துவிடுவதால் ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்ததல்லவென்றும் கூறி அத்யாஸத்தையும் விவரித்து சிஷ்யனுடைய ப்ரமத்தைப் போக்கி நித்யோபலப்தி (அழிவற்ற ஞான) ரூபியும் அவஸ்தாத்ரய ஸாக்ஷியாகவுமிருக்கின்ற ஆத்மா கூடஸ்தன், ஒருவித தர்மமும் விகாரமும் அற்றவன் என்பதைக் காட்டி ஜீவ ப்ரஹ்மா பேதத்தை ஸ்தாபிக்கிருர்.

இவ்வாறு ஸ்ரீ ஸத்குருவின் உபதேசத்தால் ஞானம் ஏற்பட்டும், அனுதிகாலமாக உள்ள பேத வாஸனையினுல் சப்தம் முதலான விஷயங்களை அனுபவிக்கும்பொழுது மனதிற்கு சலனம் ஏற்படுமாலுல் அது நீங்கி ஆத்மதத்வ ஞானத்தில் மனம் ஒருமைப்படுவதற்காக 'பரிஸங்க்யானம்' என்ற மூன்ருவது பிரகரணத்தில் அபூர்வமான சில உபதேசங்கள் செய்கிருர். சப்தம் முதலான விஷயங்களுக்கும் தமக்கும் ஒருவித ஸம்பந்தமுமில்லையென்பதை பல யுக்திகளால் காட்டி இதை எப்பொழுதும் அநுஸந்தானம் செய்துவர வேண்டுமென்று உபதேசிக்கிருர். உலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள யாவருமே மனதிற்கு அதிகத் துன்பமேற்படாமலிருக்க இதை அநுஸந்தானம் செய்யலாம்.

இவ்வாறு சிஷ்யன் கேட்கும் கேள்விகளுக்கு ஸமாதானமாக குருவின் பல உபதேசங்கள் அடங்கியிருப்பதால் உபதேச ஸாஹஸ்ரீ என்ற பெயர் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இதில் மூன்று பிரகரணங்கள் அடங்கிய கத்யப் பகுதியின் கருத்தை ஒருவாறு தெரிந்து கொண்டோம். ஆனுலும் பகவத்பாதாளுடைய ஸூக்தியின் ரஸத்தையும் மேலேகண்ட கருத்துக்களையும் இதன் தமிழ் விரிவுரையில் நன்கு காணலாம்.

K. S. வெங்கடராம சாஸ்திரி

॥ श्रीः ॥

# ॥ उपदेशसाहस्री ॥

## (गद्यप्रबन्धः)

# உபதேச ஸாஹஸ்ரீ

## (வசனப்பகுதி)

[ ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளியது ]

अथ मोक्षसाधनोपदेशविधिं व्याख्यास्यामः मुमुक्षूणां श्रद्दधानानां अर्थिनां अर्थाय ॥ १ ॥

**अथ**-பிறகு **मुमुक्षूणां**-மோக்ஷமடைய ஆவல்கொண்டவர்களும் **श्रद्दधानानां**-(சாஸ்திரம்கூறும் விஷயத்தில்) நம்பிக்கை உள்ளவர்களும் **अर्थिनां** - (இதை அறிய) விருப்பமுள்ளவர்களுமான மனுஷ்யர்களின் **अर्थाय**-உபகாரத்திற்காக **मोक्षसाधनोपदेशविधिं** - முக்திக்கு உபாயமான ஞானத்தை உபதேசிக்கும் முறையை **व्याख्यास्यामः** - தெளிவாகக் கூறுகிறோம்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் உபநிஷத்துக்களுக்கும் ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கும் பாஷ்யங்களையும், மற்றும் பல விரிவான வேதாந்த நூல்களையும் இயற்றிய பிறகு, எல்லா உபநிஷத்துக்களின் ஸாரத்தையும் சுருக்கமாகவும் மிகத்தெளிவாகவும் காட்டி சிஷ்யனுக்கு சிரமமன்னியில் ஆத்மானுபவம் ஏற்படுவதற்காக இந்தச் சிறிய நூலை இயற்றுகிறார். ஆரம்பித்த நூல் இடையூறன்னியில் முடிவடைவதற்காக ஆரம்பத்தில் மங்களம் செய்வது என்ற பெரியோர்களின் ஸம்பிரதாயத்தை அனுஸரித்து ஸர்வ மங்களங்களையும் கொடுக்கும் '**अथ**' என்ற பதத்துடன் நூலைத் துவக்குகிறார்.

ओंकारश्चाथशब्दश्च द्वावेतौ ब्रह्मणः पुरा ।
कण्ठं भित्त्वा विनिर्यातौ तस्मान्माङ्गलिकावुभौ ॥

(ஓம்காரமும், 'அத' என்ற சப்தமும் முன்னால் ப்ரஹ்மத்தின் கழுத்திலிருந்து வெளிவந்தவை. ஆகையால் இவ்

விரண்டும் மங்களத்தைக் (கொடுப்பவை) என்பது ஸ்மிருதி வசனம். இந்நூலை வாசிப்பதில் ஊக்கமேற்படுவதற்காக முதல் வாக்யத்திலேயே விஷயம், பிரயோஜனம், ஸம்பந்தம் அதிகாரி (அநுபந்த சதுஷ்டயம்) என்ற நான்கையும் காட்டுகிறுர். பந்தம் நீங்கி சுத்த ப்ரஹ்மமாக இருக்கும் நிலைதான் மோக்ஷமெனப்படும். ஆகவே ப்ரஹ்மம்தான் இந்நூலுக்கு விஷயம். ஞானத்தால் அக்ஞானமும் பந்தமும் நீங்கி ப்ரஹ்மத்தையடைவது பிரயோஜனம். நூல் அறிவிக்கிறது, விஷயம் அறியப்படுகிறது என்பது ஸம்பந்தம். கடைசியாக உள்ள அதிகாரியை (இந்நூலை அறிந்துகொள்ளத் தகுதியுள்ளவனை) **मुमुक्षूणां, श्रद्धानानां, अर्थिनां** என்ற மூன்று பதங்களால் குறிப்பிடுகிறுர். வேறு ஒன்றிலும் ஆசையில்லாமல் மோக்ஷத்தில் மட்டுமே விருப்பமுள்ள முமுக்ஷுக்கள் தான் இதில் தகுதி பெற்றவர்கள். வேறு பொருளில் கொஞ்சமாவது ஆசையிருந்தாலும் அவர்கள் அதிகாரிகளாகமாட்டார்கள். மேலும் இதில் கூறப்படும் விஷயத்தில் மாருத விச்வாஸம் இருக்க வேண்டும். இதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற தீவ்ரமான ஆவல் இருக்கவேண்டும். ஆக முமுக்ஷை (வேறென்றிலும் பற்றற்று மோக்ஷமடைவதில் மட்டும் அபிலாஷை), சிரத்தை, இதை அறிவதில் தீவ்ரமான இச்சை இவைகளுடன் கூடியவர்கள்தான் அதிகாரிகள். இதற்கு மாருக விஷய ஆசையுள்ளவர்கள், சிரத்தையில்லாதவர்கள், அறிந்துகொள்ள வேணுமென்ற எண்ணமில்லாமல் தங்கள் பாண்டித்யத்தையே வெளிப்படுத்த விரும்புகிறவர்கள் இவர்கள் தகுதியற்றவர்கள். இவர்களுக்கு இந்நூலால் ஒருவித பிரயோஜனமும் ஏற்படாது. (1)

(அ) முதலில் சுருக்கமாகக் கூறியதையே அடுத்த வாக்யத்தால் விரிவாகக் கூறுகிறுர்:—

तदिदं मोक्षसाधनं ज्ञानं साधनसाध्यात् अनित्यात् सर्वस्मात् विरक्ताय त्यक्तपुत्रवित्तलोकैषणाय प्रतिपन्नपरमहंसपारिव्राज्याय शमदमदयादियुक्ताय शास्त्रप्रसिद्धशिष्यगुणसंपन्नाय शुचये ब्राह्मणाय विधिवत्

उपसन्नाय शिष्याय जातिकर्मवृत्तविद्याभिजनैः परीक्षिताय ब्रूयात् पुनः पुनः यावद्ग्रहणं दृढीभवति ॥ २ ॥

**तत्**–அந்த (வேறு கிரந்தங்களில் விரிவாகக் கூறப் பட்டதும்) **इदं**–இந்த (இந்த நூலில் சுருக்கமாக கூறப்பட்டுப் போவதும்) **मोक्षसाधनं**–முக்திக்கு ஸாதனமுமான **ज्ञानं**–தத்வ ஞானத்தை, **साधनसाध्यात्**–(கிருஷி, யாகம் முதலான) ஸாதனங்களால் ஸம்பாதிக்கப்படுவதும் (அதனுலேயே) **अनित्यात्**–அழிந்துபோகக் கூடியதுமான **सर्वस्मात्**–(இவ்வுல கிலும் மேலுலகிலுமுள்ள) எல்லாவற்றிலிருந்தும் **विरक्ताय**–ஆசை நீங்கியவனும், **त्यक्तपुत्रवित्तलोकैषणाय**–மக்கள், பொருள் உலகம் இவைகளில் ஆசையை விட்டவனும் **प्रतिपन्नपरमहंस-पारिव्राज्याय**–'பரமஹம்ஸ பாரிவ்ராஜ்ய' மென்னும் உயர்ந்த ஸந்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்துக்கொண்டவனும் **शमदम-दयादियुक्ताय**–சமம் (உட்புலனை அடக்குதல்) தமம் (வெளிப் புலன்களை அடக்குதல்) தயை முதலானவைகளுடன் கூடிய வனும் **शास्त्रप्रसिद्धशिष्यगुणसंपन्नाय**–சிஷ்யனிடம் இருக்க வேண்டிய, சாஸ்திரங்களில் பிரஸித்தமான குணங்கள் நிறைந்தவனும் **शुचये**–உள்ளும் வெளியும் தூய்மைகொண்ட வனும் **ब्राह्मणाय**–பிராஹ்மணனும் **विधिवत्**–சாஸ்திர முறைப் படி **उपसन्नाय**–தன்னை அண்டியவனும் **जातिकर्मवृत्तविद्याभिजनैः परीक्षिताय**–ஜாதி–செய்கை–நடத்தை–கல்வி–குலம் இவை களில் பரீக்ஷிக்கப்பட்டவனுமான **शिष्याय**–சிஷ்யனுக்கு **यावत् ग्रहणं दृढीभवति**–ஞானம் உறுதியாக நிலைபெறும்வரை **पुनः पुनः**–திருப்பித்திருப்பி (ஆசார்யன்) **ब्रूयात्**–உபதேசிக்க வேண்டும்.

இங்கு ஆசார்யனுடைய கடமையைக் கூறி சிஷ்ய னின் லக்ஷணங்களை விரிவாகக் கூறுகிறார். ஆசார்யன் தன்னை வந்தடைந்த சிஷ்யனுக்கு முக்திக்கு ஸாதனமான ஞானத்தை உபதேசிக்க வேண்டும். ஒருதடவை உபதேசித்தால் போதாது. சிஷ்யனின் மனதில் ஞானம் நிலைபெற்று ஆத்மானுபவம் ஏற்படும்வரை திருப்பித்திருப்பி

பலவிதமாகவும் உபதேசம் செய்யவேண்டும். சிஷ்யன் ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள போகங்களில் ஒன்றிலும் சிறிதும் பற்றில்லாதவனாகவும், புலனடக்கம், பொறுமை, சிரத்தை, ஒரே இடத்தில் மனதை நிலைநிறுத்துவது, பிராணி களிடம் தயை, அன்பு, அநஸூயை, ஞானத்தில் ஆவல் முதலிய பல நற்குணங்கள் நிறைந்தவனாகவும் இருக்க வேண்டும். ஞானத்தையடைவதற்காக சிஷ்யன் குருவைத் தேடியடைந்து அவர் பாதங்களில் விழுந்து பிடித்துக் கொண்டு வணங்கி अधीहि भगवः (உபதேசித்தருள வேண்டும்) என்ற மந்திரத்தைச் சொல்லி பிரார்த்திக்க வேண்டும். இதற்குத்தான் 'உபஸத்தி' அல்லது 'உப ஸ்தாம்' என்று பெயர்.

'तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्'

என்று முண்டக உபநிஷத்து உபதேசிக்கிறது. இப்பேற் பட்ட சிஷ்யனுடைய வைராக்யத்தையும், ஜாதி, கர்மா, ஆசாரம், கல்வி, குலம் முதலானவைகளையும் நன்கு பரீக்ஷித்து உத்தமாதிகாரி என்று தீர்மானமாகத் தெரிந்த பிறகுதான் உபதேசிக்கவேண்டும். உபதேசிக்க ஆரம்பித்து விட்டால் பிறகு சிஷ்யன் மனதில் ஞானம் நிலைத்து ஆத்ம அனுபவம் ஏற்படும்வரை பலவித வழிகளாலும் திருப்பித் திருப்பிப் பலதடவை உபதேசித்து அவனையும் தன்னைப் போல் ஞானியாக ஆக்கிவிடுவது ஆசார்யனுடைய முக்யமான கடமையாகும்.

(2)

श्रुतिश्च— 'परीक्ष्य......... तत्त्वतो ब्रह्मविद्यां' इति ।

'பரீக்ஷ்ய' என்று ஆரம்பித்து 'தத்வதோ ப்ரஹ்ம வித்யாம்' என்பது வரையிலுள்ள சுருதியும் (இதையே கூறுகிறது).

முண்டக உபநிஷத்தில் "பிராஹ்மணன் கர்மாவினால் ஸம்பாதிக்கப்பெறும் உலக விஷய போகங்களை பரீக்ஷித்து (உண்மையையறிந்து) 'உலகில் நித்யமானது ஒன்றும் இல்லை. நித்யமான ப்ரஹ்மத்தையடைய விரும்பும் எனக்கு கர்மாவினால் யாது பயன்?' என்று பூர்ணமான

வைராக்யத்தை அடையவேண்டும். அந்த பிரஹ்மத்தை அறிவதற்காக அவன் கையில் ஸமித்துக்களை எடுத்துக் கொண்டு சுரோத்ரியனையும் ப்ரஹ்மநிஷ்டனையுமுள்ள குருவையே அடையவேண்டும். புலன்களையும் மனதையும் நன்கு அடக்கி தன்னை உபஸத்தி பண்ணின, அந்த சிஷ்யனுக்கு அக்ஷர புருஷனை அறிவிக்கும் ப்ரஹ்ம வித்யையை குரு உபதேசிக்கவேண்டும்'' என்ற வாக்யம் இதே அபிப்பிராயத்தைக் காட்டுகிறது. இந்த இடத்தில் முடிவில் பாஷ்யகாரர் கூறுகிறார் :—' முறைப்படி தன்னிடம் வந்து வேண்டும் சிஷ்யனை அவித்யை என்னும் பெரும் கடலிலிருந்து கரையேற்றுவது ஆசார்யனுக்கு ஓர் முக்கிய மான கடமையாகும் '.

दृढगृहीता हि विद्या आत्मनः श्रेयसे सन्तत्यै च भवति । विद्यासन्ततिश्च प्राण्यनुग्रहाय भवति नौरिव नदीं तितीर्षोः ।

दृढगृहीता-உறுதியாக அறிந்துகொள்ளப்பட்ட, विद्या हि-ஞானமல்லவா, आत्मनः-தன்னுடைய, श्रेयसे-(முக்திஎன்னும்) சிரேயஸ்ஸுக்கும், सन्तत्यै च-சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரைக்கும் (உபகாரமாக) भवति-ஆகிறது नदीं-நதியை, तितीर्षोः-கடந்து அக்கரை செல்லவிரும்புபவனுக்கு, नौरिव-ஓடம் போல, विद्यासन्ततिश्च-ஞானிகளின் பரம்பரையானது, प्राण्यनुग्रहाय-பிராணிகளின் அநுக்ரஹத்தின் பொருட்டு भवति-ஆகிறது.

ஆசார்யன் சிஷ்யனுக்கு உபதேசம் செய்து தன்னைப் போல அவனையும் ஞானியாகச் செய்வதன்மூலம் அவனுக்கு மட்டுமல்ல, உலகிற்கே பேருதவி செய்தவனாக ஆகிறான். அந்த சிஷ்யனும் ஆசார்யனாக இருந்து மற்றொருவனுக்கு உபதேசம் செய்கிறான். இவ்வாறு குருபரம்பரையானது தாங்கள் கரையேறுவதுடன் மற்றவர்களையும் கரையேற்று விக்கிறது. ஒவ்வொரு ஆசார்யரும் தன் சிஷ்யனை ஆசார்ய னாகச் செய்வதன்மூலம் இவ்வுலகில் ஞானி பரம்பரை மறைந்துபோகாமல் காப்பாற்றி வரவேண்டும்.

शास्त्रं च—'यद्यप्यस्मा इमामद्भिः परिगृहीतां धनस्य पूर्णां दद्यादेतदेव ततो भूयः' इति ।

अस्मै—இவருக்கு (ஆசார்யருக்கு,) अद्भिः—ஸமுத்திரங்களால், परिगृहीतां-சூழப்பட்டதும், धनस्य पूर्णां-பணத்தால் நிரம்பியதுமான, इमां- இந்த பூமியை, यद्यपि दद्यात्-(ஒருவன்) கொடுத்தாலும்கூட, एतदेव-இந்த ஞான தானம் தான், ततः-அதைவிட भूयः—மேலானது इति शास्त्रं—என்பது சாஸ்திரம்.

எல்லாவித ஐசுவர்யங்களுடன்கூட பூமண்டலம் முழுவதையும் கொடுத்தாலும்கூட முன் குறிப்பிட்ட சிஷ்ய குணங்களில்லாத அதிகாரிக்கு ஆத்ம வித்யையை உபதேசிக்கக் கூடாது. அந்த பூதானத்தைக் காட்டிலும் ஞானதானம் எவ்வளவோ மடங்கு மேலானது.

अन्यथा च ज्ञानप्राप्त्यभावात् 'आचार्यवान् पुरुषो वेद' 'आचार्याद्धैव विद्या विदिता' 'आचार्यः प्लावयिता सम्यग्ज्ञानं प्लव इहोच्यते' इत्यादिश्रुतिभ्यः, 'उपदेक्ष्यन्ति ते ज्ञानम्' इत्यादिस्मृतेश्च ॥

'आचार्यवान्—ஆசார்யனோடுகூடிய, पुरुषः—மனிதன், वेद-அறிவான்.' 'आचार्यात्-ஆசார்யரிடமிருந்து, विदिता-அறிந்து கொள்ளப்பட்ட, विद्या एव-ஞானம் தான், साधिष्ठं प्रापत्-நன்மையைக் கொடுக்கும்.' 'आचार्यः—ஆசார்யன், प्लावयिता—தாண்டிவைப்பவன். सम्यग्ज्ञानं—தத்வஞானமானது, प्लवः—ஓடம் (என்று), इह—இங்கு, उच्यते-சொல்லப்படுகிறது.' इत्यादिश्रुतिभ्यः-இதுமுதலான சுருதிகளாலும், 'ते—உனக்கு, ज्ञानं-ஞானத்தை, उपदेक्ष्यन्ति—உபதேசிப்பார்கள்.' इत्यादिस्मृतेश्च—இதுமுதலான ஸ்மிருதியினாலும், अन्यथा—வேறு விதமாக, ज्ञानप्राप्त्यभावात्-ஞானத்தை அடைய முடியாததால்.

சுருதிகளும் ஸ்மிருதிகளும் ஆசார்யனிடமிருந்தே ஞானத்தைப் பெறவேண்டுமென்று வற்புறுத்திக் கூறுகின்றன. எவ்வளவு புத்திமானுயிருந்தாலும் ஆசார்ய உபதேசமில்லாமல் தன் புத்தி பலத்தாலோ, தானுக கிரந்தங்களைப் பார்ப்பதாலோ வேறு எந்த வழியிலும் தத்வஞானம் அடைய முடியாது. ஆத்மானுபவமும ஏற்படாது. ஆகையால் சிஷ்யகுணங்கள் யாவற்றையும் கைக்கொண்டு குருவைத் தேடியடைந்து முறைப்படி ஸேவித்து கிருபையால் அவர் உபதேசத்தால்தான் ஞானமடைந்து முக்தியடைய முடியும்.

(அ) பலதடவை உபதேசிப்பதுடன் சிஷ்யன் மனதில் உபதேசம் நிலைப்பதற்குச் செய்யவேண்டிய உபாயங்களைக் கூறுகிறார்:—

शिष्यस्य ज्ञानाग्रहणं च लिङ्गैः बुध्वा अग्रहणे हेतून् अधर्म-लौकिकप्रमादनित्यानित्यविवेकविषयासंजातदृढपूर्वश्रुतत्वलोकचिन्तावेक्षण-जात्याद्यभिमानादीन् तत्प्रतिपक्षैः श्रुतिस्मृतिविहितैः अपनयेत् अक्रोधादिभिः अहिंसादिभिश्च यमैः ज्ञानाविरुद्धैश्च नियमैः ॥ ४ ॥

**शिष्यस्य**—சிஷ்யனுக்கு **ज्ञानाग्रहणं च**—ஞானம் ஏற்படாததையும் (விபரீதமாகத் தெரிந்துகொண்டிருப்பதையும்) **लिङ्गैः**-(முகத்தின் அடையாளம், பேச்சு முதலிய) அடையாளங்களால் **बुध्वा**- அறிந்துகொண்டு, **अग्रहणे**-ஞானம் ஏற்படாததற்கு **हेतून्**—காரணமான **अधर्म**—(முன்னால் செய்த) பாபம், **लौकिक**-லௌகிக கார்யங்கள், **प्रमाद**-கவனக் குறைவு, **नित्यानित्यविवेकविषयासञ्जातदृढपूर्वश्रुतत्व**—முன்னால் நன்கு கேட்டிருந்தும் இது நித்யம், இது அநித்யம் (இது சேதனம், இது அசேதனம், இது உண்மை, இது பொய்) என்று பிரித்துத் தெரிந்துகொள்ளும் விஷயத்தில் உறுதியான ஞானம் ஏற்படாமை, **लोकचिन्तावेक्षण**—(தனக்கு உலகில் மதிப்பு ஏற்படுவதற்காக) உலக வியவஹாரங்களில் அதிகமாக ஈடுபடுவது, **जात्याद्यभिमानादीन्**—ஜாதி, குலம், கல்வி முதலியவற்றால் கர்வம் (இதனால் பிறரை அவமதித்தல்) முதலியவைகளை **तत्प्रतिपक्षैः**-அவைகளுக்கு எதிரிடையானதும் **श्रुतिस्मृति-विहितैः**-ச்ருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் உபதேசிக்கப்பட்டதுமான **अक्रोधादिभिः**—கோபங்கொள்ளாமை முதலியவைகளாலும் **अहिंसादिभिः**—அஹிம்ஸை முதலிய **यमैश्च**-யமங்களாலும் **ज्ञानाविरुद्धैः**-ஞானத்திற்கு விரோதமில்லாத **नियमैश्च**-நியமங்களாலும் **अपनयेत्**—போக்கடிக்க வேண்டும்.

अमानित्वादिगुणं च ज्ञानोपायं सम्यग्ग्राहयेत् ॥ ५ ॥

**ज्ञानोपायं**—ஞானத்திற்கு உபாயமான **अमानित्वादिगुणं च**—

அமானித்வம் முதலான குணங்களை सम्यक्-நன்கு ग्राहयेत्-கைக்கொள்ளும்படி செய்யவேண்டும்.

ஆசார்யன் சிஷ்யனுக்கு ஆத்மதத்வ ஸம்பந்தமான விஷயங்களை உபதேசிப்பதோடு நிற்காமல் தான் செய்யும் உபதேசம் சிஷ்யன் மனதில் நிலைபெறுகிறதா, சரியாகப் புரிந்துகொள்கிறனா என்பதை அவன் முக அடையாளத்தி லிருந்தும் அவன் கூறும் பதிலிலிருந்தும் தெரிந்துகொள்ள வேண்டும். சிஷ்யன் மனதில் உபதேசம் நிலைபெறுமலோ, விபரீதமாகத் தெரிந்துகொண்டோ இருந்தால் அதன் இடையூறுகளைக் கண்டுபிடித்து அவைகளைப் போக்கி ஞானம் ஏற்படுவதற்குவேண்டிய உபாயங்களையும் அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டும். அவ்விடையூறுகளில் பாபத்தை ஈசுவர உபாஸனை செய்து போக்கும்படி செய்ய வேண்டும். யதிகளின் தர்மங்களை உபதேசித்துக் கடைப் பிடிக்கச்செய்து கவனக்குறைவைப் போக்கவேண்டும். பலவித யுக்திகளைக் காட்டி நித்யாநித்ய விவேகம் நிலை பெறும்படி செய்யவேண்டும். தோஷங்களைக் காட்டி லோக வியவஹாரங்களில் ஈடுபடுவதை நிறுத்தவேண்டும். த்வம்பதார்த்தமான ஜீவஸ்வரூபத்தைக் காட்டி ஜாதி, குலம், வித்யை முதலியவைகளால் சரீரத்தை ஒட்டி ஏற்படும் அஹங்காரத்தைப் போக்கவேண்டும். பொதுவாக எல்லா தோஷங்களும் விலக அக்ரோதம் (கோபமில்லாமை) அகாமம் (ஒன்றிலும் ஆசையில்லாமை) முதலியவைகளையும் யமங்களையும், ஞானத்திற்கு இடைஞ்சலில்லாத நியமங் களையும் கைக்கொள்ளும்படி செய்யவேண்டும். அஹிம்ஸை, ஸத்யம், பிறர் பொருளைத்திருடாமலிருப்பது, ப்ரஹ்மசர்யம் வஸ்துக்களைச் சேர்க்காமலிருப்பது இவ்வைந்தும் யமங்கள் எனப்படும். உள்ளும் புறமும் தூய்மை, திருப்தி, தவம், மந்திரஜபம், ஈசுவர உபாஸனம் இவ்வைந்தும் நியமங்கள் எனப்படும். ஆனல் குரு சுச்ரூஷை, வேதாந்த விசாரம், உபதேசம் பெறுதல், ஞானம் இவைகளுக்கு இடைஞ்சலாய் உள்ள தீர்த்த யாத்திரை, சாந்த்ராயண உபவாஸம் முதலான நியமங்களை கைக்கொள்ளக்கூடாது.

இவ்வாறு ஞானத்தின் இடையூறுகளை அதற்கு எதிரிடையான குணங்களால் போக்கி ஞானத்திற்கு உபாயமாக கீதையில் கூறப்பட்ட அமானித்வம் முதலான குணங்களைக் கைக்கொள்ளும்படி செய்யவேண்டும். அவை களாவன:— தற்புகழ்ச்சி, டம்பம், ஹிம்ஸ இவைகள் இல்லாமை, பொறுமை, நேர்மை, ஸத்குருஸேவை, உள்ளும் புறமும் தூய்மை, உறுதி, ஆத்மாவை (சரீரத்தை) அடக்குதல் (எங்கும் தன் இச்சைப்படி செல்வதைத் தடுத்து நல்வழியிலேயே நிலைநிறுத்தல்) விஷயங்களில் வைராக்யம், கர்வமின்மை, பிறப்பு இறப்பு, மூப்பு, வியாதி இவைகளில் துன்பம் என்னும் தோஷத்தை சிந்தித்தல், விஷயங்களில் ப்ரீதியின்மை, தனயன், மனைவி, வீடு முதலியவைகளில் ஈடுபடாதிருத்தல், இஷ்டமோ, அநிஷ்டமோ எது கிடைத் தாலும் எப்பொழுதும் மனதை ஒரே நிலையில் நிறுத்தி வைத்தல், ஈசுவரனிடம் மாறுபாடடையாத அநந்யபக்தி, தனிமையான இடத்தில் இருத்தல், பாமர ஜனக்கூட்டத்தில் சேர ஆசையின்மை, ஆத்மாவைப்பற்றி அறிந்து கொள்வதில் ஈடுபடுதல், தத்வ ஞானத்தின் பயனான மோக்ஷத்தைப்பற்றி சிந்தித்தல் இவைகள் எல்லாம் ஞானத்திற்கு உபாயங்கள். இவற்றிற்கு எதிரிடையான வைகள் அஞ்ஞானத்தை வளர்க்கும். கீதையில் 12வது அத்யாயத்தில் 'अद्वेष्टा सर्वभूतानां' என்று ஆரம்பித்து கூறப் பட்ட குணங்களையும் ஞானோபாயமாக சேர்த்துக்கொள்ள வேண்டும். இவைகளையெல்லாம் சிஷ்யனிடம் ஏற்படும்படி செய்து ஆசார்யர் உபதேசம் செய்தால் ஞானானுபவம் ஏற்படும். (4–5)

(அ) இவ்வாறு ஆசார்யருடைய கடமைகளைக்கூறி விட்டு அவருடைய லக்ஷணத்தையும் உபதேசிக்கும் முறையையும் கூறுகிறார்:—

आचार्यस्तु ऊहापोहग्रहणधारणशमदमदयानुग्रहादिसंपन्नः लब्धागमः दृष्टादृष्टभोगेषु अनासक्तः त्यक्तसर्वकर्मसाधनः ब्रह्मवित् ब्रह्मणि स्थितः अभिन्नवृत्तः दम्भदर्पकुहकशाठ्यमायामात्सर्यानृताहंकारममत्वादिदोषविवर्जितः

केवलपरानुग्रहप्रयोजनः विद्योपयोगार्थी पूर्वमुपदिशेत् 'सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम्' 'यत्र नान्यत्पश्यति' 'आत्मैवेदं सर्वं' 'आत्मा वा इदमेक एवाग्र आसीत्' 'सर्वं खल्विदं ब्रह्म' इत्याद्याः आत्मैक्य-प्रतिपादनपराः श्रुतीः ॥ ६ ॥

**आचार्यस्तु**–ஆசார்யனே வெனில், **ऊह**–(சிஷ்யன் நேரிடையாகக் கேட்காததையும், அவன் புரியும்படியான யுக்திகளையும்) ஊஹிக்கும் திறமை, **अपोह**–அவனுடைய விபரீத ஞானத்தைப்போக்கும் திறமை, **ग्रहण**–சிஷ்யனுடைய கேள்விகளையும் ஆக்ஷேபங்களையும் உடனேயே புரிந்துகொள்ளும் ஸாமர்த்யம், **धारण**–புரிந்துகொண்டதை பின்னால் பதில் சொல்லும்பொழுது ஞாபகப்படுத்திக் கொள்வது **शम**–மனதை அடக்குதல் **दम**–வெளிப்புலன்களை அடக்குதல் **दया**–இரக்கம் **अनुग्रहादिसंपन्नः**–அனுக்ரஹம் முதலியவைகளுள்ளவராகவும் **लब्धागमः**–(தன் குருவினிடமிருந்து) ஞானோபதேசம் பெற்றவராகவும் **दृष्टादृष्टभोगेषु**–இவ்வுலகிலும் மேலுலகிலும் உள்ள போகங்களில் ஆசையற்றவராகவும் **त्यक्तसर्वकर्मसाधनः**–எல்லா கர்மாக்களுக்கும் ஸாதனமான பணம், மனைவி, சிகை, யஜ்ஞோபவீதம் முதலியவைகளை தியாகம்செய்தவனும் **ब्रह्मवित्**–ப்ரஹ்மத்தை அறிந்தவனும் **ब्रह्मणि स्थितः**–ப்ரஹ்மத்திலேயே இருப்பவனும் (அதாவது நானே ப்ரஹ்மம் என்ற அபரோக்ஷானுபவத்தை யடைந்தவனும்) **अभिन्नवृत्तः**–சிஷ்டாசாரத்தை மீறாதவனும் **दम्भ**–டம்பம் (வெளிவேஷம்) **दर्प**–திமிர் **कुहक**–பிறரை வஞ்சித்தல் **शाठ्य**–ரஹஸ்யமாகத் தீங்கு செய்தல் **माया**–பிறரை மயங்கவைத்தல் **मात्सर्य**–பிறரிடம் தோஷங்களை ஆரோபம் செய்தல் **अनृत**–பொய் **अहंकार**–தானென்ற கர்வம் **ममत्वादि**–தன்னுடையது என்ற அபிமானம் இதுமுதலான **दोषविवर्जितः**–தோஷங்களற்றவனும் **केवलपरानुग्रहप्रयोजनः**–பிறருக்கு அநுக்ரஹம் செய்வது (ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கடைத்தேற்றுவது) ஒன்றையே பிரயோஜனமாகக் கொண்டவனும் **विद्योपयोगार्थी**–(தன்னிடமுள்ள) ஞானத்தை விநியோகம் செய்வதில் விருப்பமுள்ளவனாகவும் இருப்பான்.

இந்த ஆசார்யர்,

[1]सदेव सोम्य इदं अग्रे आसीत् एकं एव अद्वितीयं-ஸிருஷ்டிக்கு முன் இந்த பிரபஞ்சமெல்லாம் இரண்டற்ற ஒரே ஸத் வஸ்து வாகவே இருந்தது. [2]यत्र नान्यत् पश्यति – எதில் வேறு ஒன்றையும் பார்க்கவில்லையோ (அது பூமா) [3]आत्मैव इदं सर्वं- இது எல்லாம் ஆத்மா தான். [4]आत्मा वा इदं एक एवाग्र आसीत्- ஸிருஷ்டிக்கு முன் இப்பிரபஞ்சமெல்லாம் ஒரே ஆத்மவஸ்து வாகவே இருந்தது. [5]सर्वं खल्विदं ब्रह्म-இது எல்லாம் பிரஹ்மம் इत्याद्याः-இது முதலான आत्मैक्यप्रतिपादनपराः-ஆத்மாவின் ஒருமையை விளக்கும் श्रुती-சுருதிகளை पूर्वं-முதலில் उपदिशेत्- உபதேசிக்க வேண்டும்.

சிஷ்யனுக்கு உபதேசம் செய்யும் ஆசார்யருக்கு முக்யமாக சிஷ்யன் மனத்தில் ஏற்படும் ஸந்தேஹங்களையும் அவன் கேட்கும் கேள்விகளையும் உடன் புரிந்துகொண்டு ஞாபகத்தில் வைத்துக்கொள்வதுடன் தகுந்த யுக்திகளைக் கொண்டு ஸமாதானம் சொல்லும் திறமையும் வேண்டும். பிறர் படும் துக்கத்தைக் கண்டு மனது பொறுக்காமல் தயவினுல் அவனுக்கு அநுக்ரஹம் செய்யவேண்டும். 'हिंसानुग्रहयोरनारम्भी' 'न व्याख्यानपरो यतिः' (ஸன்யாஸி பிறருக்கு ஹிம்ஸையோ அநுக்ரஹமோ செய்யக்கூடாது பாடபிரவசன காரியத்தில் ஸந்யாஸி ஈடுபடக்கூடாது. என்ற தர்மசாஸ்திர வசனம் புகழ், லாபம், கௌரவம் இவை களை உத்தேசித்து அவ்வாறு செய்வதைத் தடுக்கிறதே யொழிய கருணையினுல் கைம்மாறு கருதாமல் சிஷ்யன் கடைத்தேறுவதற்காகச் செய்வதைத் தடுக்கவில்லை. ஆசார்யரும் குருவின் உபதேசத்தால் ஞானம் பெற்றவராக இருக்கவேண்டும். சாஸ்திர மரியாதையும் லோக மரியாதையும் மீருமல் ஸதாசாரஸம்பன்னராக இருக்க வேண்டும். இப்படியில்லாவிட்டாலும் ஞானிக்கு ஒரு தோஷமுமில்லை. ஆனுல் அந்த ஆசார்யனைப் பார்த்து

---

1. சாந். 6-2-1 2. சாந். 7-24 3. சாந் 7-25
4. ஐதரேயம் 1-1 5. சாந். 3-14-1

அவ்விதமே சிஷ்யனும் நடந்து வீணுகக் கெட்டுப்போய் விடுவான். கீதையில் பகவான் 'நான் செய்யவேண்டியதோ அடையவேண்டியதோ ஒன்றுமில்லை. ஆனாலும் என் கடமையைச் சரிவரச் செய்து வருகிறேன். நான் செய்யா விட்டால் என்னைப்பார்த்து மற்றவரும் செய்யாமல் விட்டு விடுவார்கள். தனக்காக இல்லாவிட்டாலும் உலகத்திற்காக வாவது ஞானியும் கர்மாவைச் செய்யவேண்டும்' என்று உபதேசிக்கிருர். ஆகையால்தான் 'सद्विद्वान् उपसद्यते' என்று ஸ்ரீ பகவத்பாதர் உடதேசிக்கிருர். வேறு ஒன்றையும் எதிர்பாராமல் தனக்குக்கிடைத்த ஞானத்தை சரியான பாத்திரத்தில் விநியோகம் செய்யவேண்டியது ஒன்றையே கருதி உடதேசிக்கவேண்டும். ஸர்வத்தையும் த்யாகம் செய்யும்படி சாஸ்திரம் உபதேசிப்பதால் ஞானத்தையும் த்யாகம் செய்யவேண்டும். ஞானத்தின் பயனைத் தான் அடைந்துவிட்டபடியால் யோக்யனை சிஷ்யனுக்கு ஞானத்தை உடதேசிப்பதுதான் இங்கு ஞான த்யாகம் எனப்படும்.

இங்கு கூறியுள்ள ஆசார்ய லக்ஷணங்களைக்கொண்டு, இவ்வித லக்ஷணமுள்ளவன்தான் ஞானி, மற்றவர் ஞானி அல்ல என்று தீர்மானிக்கக்கூடாது. ஞானாநுபவம் ஏற்பட்ட மாத்திரத்திலேயே அவன் கிருதார்த்தனுகிவிட்ட படியால் அவனுக்கு ஒருவிதக் கட்டுப்பாடும் கிடையாது. ஆனால் சிஷ்யன், தான் கிருதார்த்தனுவதற்காக ஞானி களுக்குள் இவ்வித லக்ஷணங்களுள்ள ஆசார்யனையே தேடியடையவேண்டும். ஆசார்யன், முதலில் எல்லாம் பிரஹ்ம ஸ்வரூபம் அது ஒன்றுதான் என்ற பொருளுள்ள உபநிஷத் வாக்யங்களை உபதேசித்து அதன் தாத்பர்யத்தை விளக்கவேண்டும்.

கீழே காட்டிய சுருதிகளில் 'ஸத், பூமா, ஆத்மா, ப்ரஹ்ம' என்ற பதங்களெல்லாம் ஒரே ப்ரஹ்மவஸ்துவைக் குறிக்கின்றன. அந்த ப்ரஹ்மம் ஒன்றே உண்மையான பொருள். நாம் காணும் பிரபஞ்சமெல்லாம் அதைக் காட்டிலும் வேறு அல்ல, வாஸ்தவமல்ல என்ற கருத்தைத் தெரிவிக்கின்றன. (6)

उपदिश्य च ग्राहयेत् ब्रह्मणो लक्षणम्, '[1]य आत्माऽपहतपाप्मा' '[2]यत्साक्षादपरोक्षात् ब्रह्म' '[3]योऽशनायापिपासे' '[4]नेति नेति' '[5]अस्थूलमनणु' '[6]स एष नेति नेति' '[7]अदृष्टं द्रष्टृ' '[8]विज्ञानमानन्दम्' '[9]सत्यं ज्ञानमनन्तम्' '[10]अदृश्येऽनात्म्ये' '[11]स वा एष महानज आत्मा' '[12]अप्राणो ह्यमनाः स बाह्याभ्यन्तरो ह्यजः' '[13]विज्ञानघन एव' '[14]अनन्तरमबाह्यम्' '[15]अन्यदेव तद्विदितादथो अविदितात्' '[62]आकाशो वै नाम' इत्यादिश्रुतिभिः ॥ ७ ॥

**उपदिश्य च** – (சுருதிகளைக்கொண்டு ஆத்மைக்யத்தை முதலில்) உபதேசித்துவிட்டு (பிறகு) **इत्यादिश्रुतिभिः**– (பின் காணும்) இது முதலான சுருதிகளால் **ब्रह्मणः**–பிரஹ்மத்தின் **लक्षणं**– லக்ஷணத்தை **ग्राहयेत्** – அறிவுறுத்தவேண்டும். அவையாவன :—

**य आत्मा अपहतपाप्मा**–பாபம், ஜரை, மிருத்யு, சோகம், பசி, தாகம் இவைகளற்றதும் ஸத்யமான காம ஸங்கல்பங்கள் உள்ளதுமான ஆத்மாவைத் தேடி அறிந்துகொள்ள வேண்டும். **यत्साक्षात् अपरोक्षात् ब्रह्म** – நேரிடையாக பிரத்யக்ஷமாக விளங்கும் ப்ரஹ்மம் எல்லாவற்றிற்கும் உள் இருக்கும் ஆத்மா. **योऽशनायापिपासे** –அந்த ஆத்மாவுக்கு பசி, தாகம், சோகம், மோஹம், மூப்பு, மரணம் இவை கிடையாது. **नेति नेति** – ப்ரஹ்மத்தில் ஒரு தர்மமுமில்லாத தால் அதை இதுவல்ல இதுவல்ல என்றுதான் உபதேசிக்கமுடியும். **अस्थूलं अनणु** – பருமனல்ல, சிறியது அல்ல, குட்டையுமல்ல, நீளமுமல்ல இதுபோல் மற்ற

(1) சாந். 8-7-1. (2) பிருஹ. 3-4-1. (3) பிருஹ. 3-5-1. (4) பிருஹ 2-3-6. (5) பிருஹ. 3-8-8 (6) பிருஹ. 3-9-26. (7) பிருஹ 3-8-11. (8) பிருஹ. 3-9-28 (9) ஆனந்தவல்லி. (10) ஆனந்த. 7. (11) பிருஹ. 4-4-22. (12) முண். 2-1-2 (13) பிருஹ. 2-4-12. (14) பிருஹ. 2-5-19 (15) கேந. 1-3. (16) சாந். 8-14-1.

ஒருவித தர்மமுமற்றது ப்ரஹ்மம். अदृष्टं द्रष्टृ—ஒன்ருலும் பார்க்கப்படாதது, எல்லாவற்றையும் பார்க்கிறது. विज्ञानं आनन्दं—அறிவும் ஆனந்தமுமே வடிவாகக்கொண்டது. सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म—முக்காலமும் அழிவற்றது. சித்ரூபம், தேசம், காலம், வஸ்து இவைகளின் எல்லைக்கு உட்படாதது. अदृश्ये अनात्म्ये अनिरुक्ते—அறியப்படாததும் சரீரமில்லாததும் சொல்லமுடியாததும் ஆதாரமில்லாததுமான ப்ரஹ்மத்தில் நிலைநின்றவன் பயம் நீங்கப்பெற்று முக்தியடைகிருன். स वा एष महानज आत्मा—இச்சரீரத்தைக்காட்டிலும் வேருன இவைகளை பிரகாசப்படுத்துகிற ஸ்வயம் ஜ்யோதி ஸ்வரூபனுன இந்த ஆத்மா மிகப்பெரியவன் பிறப்பு அற்றவன் अप्राणो हि अमनाः शुभ्रः सबाह्याभ्यन्तरः—அக்ஷரமான பரமாத்மாவுக்கு பிராணனும் மனதும் கிடையாது. ஒளி வடிவமுள்ளவன். உள்ளும் வெளியும் எங்கும் இருப்பவன் विज्ञानघन एव—ஞானமே ஸ்வரூபமாக உள்ளவன் अनन्तरं अबाह्यं—தன்னைக்காட்டிலும் வேருக உள் வெளியில்லாதவன் अन्यदेव तद्विदितात् अथो अविदितादधि—அறியப்பட்டவனுமல்ல அறியப்படாதவனுமல்ல, आकाशो वै नाम—ஆகாசம் என்று கூறப்படும் ப்ரஹ்மம் நாமரூபங்களைக்காட்டிலும் வேறு பட்டது. அவைகளை வெளிப்படுத்துவது.

மேலே காட்டப்பட்ட சுருதி வாக்யங்களை அந்தந்த உபநிஷத்துக்களில் முன்னும் பின்னும் ஆராய்ந்து நன்கு பரிசீலித்தால் ப்ரஹ்மத்தின் லக்ஷணம் தெரியவரும். ஸச்சிதானந்த ஸ்வரூபம். ஸ்வயம்பிரகாசம் வியாபகம். மாயையால் பிரபஞ்சமாகத்தோன்றுகிறது. சரீராதிகளோ, அவைகளின் தர்மங்களோ அற்றது. ஆகவே சுத்தமான ஆத்மாவே ப்ரஹ்மம். இந்த லக்ஷணங்களை உபதேசிப்பதன் மூலம் முதலில் சொன்ன ஆத்மைக்யம் நன்கு விளக்கப்படுகிறது. (7)

(அ) இவ்வாறு சுருதிகளைக்கொண்டு ப்ரஹ்ம லக்ஷணத்தை உபதேசித்துவிட்டு ஸ்மிருதிகள் மூலமும் உபதேசிக்கவேண்டும் என்கிருர் :—

स्मृतिभिश्च— '[1] न जायते म्रियते' '[2] नादत्ते कस्यचित् पापं' '[3] यथाऽऽकाशस्थितो नित्यम्' '[4] क्षेत्रज्ञं चापि मां विद्धि' '[5] न सत्तन्नासदुच्यते' '[6] अनादित्वान्निर्गुणत्वात्' '[7] समं सर्वेषु भूतेषु' '[8] उत्तमः पुरुषस्त्वन्यः' इत्यादिभिः श्रुत्युक्तलक्षणाविरुद्धाभिः परमात्मासंसारित्वप्रतिपादनपराभिः तस्य सर्वेणानन्यत्वप्रतिपादनपराभिश्च ॥ ८ ॥

**न जायते म्रियते**-ஆத்மாவிற்குப் பிறப்பு இறப்பு முதலான விகாரம் கிடையாது; **नादत्ते कस्यचित्**-பரமாத்மா ஒருவரின் பாபத்தையோ புண்ணியத்தையோ, ஏற்றுக்கொள்வதில்லை **यथाऽऽकाशस्थितो नित्यं**-ஆகாசத்தில், எங்கும் எப்பொழுதும் ஸஞ்சரிக்கும் வாயு இருப்பதுபோல் எங்குமுள்ள என்னிடம் ஒட்டாமலேயே எல்லா பூதங்களும் இருக்கின்றன; **क्षेत्रज्ञं चापि मां विद्धि**-எல்லா சரீரங்களிலுமிருக்கும் க்ஷேத்ரக்ஞனை ஜீவனை என் ஸ்வரூபமாக (பரமாத்ம ஸ்வரூபமாக) அறிந்து கொள்; **न सत्तन्नासदुच्यते**-ப்ரஹ்மம் ஸத் என்றோ அஸத் என்றோ சொல்லமுடியாது. (இந்திரியங்களுக்கும் மனதிற்கும் எட்டாதது. அறியப்படும் வஸ்துவல்ல.); **अनादित्वात् निर्गुणत्वात्**-பரமாத்மாவுக்குக் காரணமும் குணமுமில்லாததால் அழிவற்றது; **समं सर्वेषु भूतेषु**-அழியக்கூடிய எல்லாப் பிராணிகளிடமும் ஒரே மாதிரியாக தான் அழியாமல் இருக்கும் பரமேசுவரனை அறிந்தவன்தான் உண்மையான ஞானி; **उत्तमः पुरुषस्त्वन्यः**-க்ஷரம் அக்ஷரம் இவ்விரண்டைக் காட்டிலும் வேறான பரமாத்மா உத்தம புருஷன் என்று சொல்லப்படுகிறான். **इत्यादिभिः**-இதுமுதலான **श्रुत्युक्तलक्षणाविरुद्धाभिः**-உபநிஷத்தில் கூறப்பட்ட லக்ஷணத்திற்கு விரோதமில்லாததும் **परमात्मासंसारित्वप्रतिपादनपराभिः**-தேஹாதிகளைக்காட்டிலும் மேலான ஆத்மா அஸம்ஸாரி என்பதை விளக்குகின்றதும், **तस्य**-அந்த ஆத்மாவுக்கு **सर्वेण**-எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமான ப்ரஹ்மத்துடன் **अनन्यत्वप्रतिपादनपराभिः**-வேறுபடாமல் ஒன்றாயிருக்கும் தன்மையைக்

(1) கீதை அத். 2-20 (2) 5-15, (3) 9-6, (4) 13-2, (5) 13-12 (6) 13-31, (7) 13-27, (8) 15-17

காட்டுகின்றதுமான स्मृतिभिश्च–ஸ்மிருதிகளைக்கொண்டும், ப்ராஹ்மலக்ஷணத்தை சிஷ்யன் அறியும்படி செய்யவேண்டும்.

உபநிஷத்துக்களின் மூலம் ப்ராஹ்மத்தின் லக்ஷணம் தெரிந்துகொண்டதை உறுதிப்படுத்துவதற்காக ஸ்மிருதி களின் மூலமும் ப்ராஹ்ம லக்ஷணத்தை விளக்கவேண்டும். மேலே கீதையிலிருந்து சில வாக்யங்கள் காட்டப்பட்டிருக் கின்றன. இதேபோல் வேறு பல ஸ்மிருதிகளிலிருந்தும் வாக்யங்களைக்காட்டி ப்ராஹ்ம லக்ஷணத்தை உபதேசிக்க வேண்டும். ஆனால் அந்த ஸ்மிருதிகள் உபநிஷத்திற்கு விரோதமாயிருக்கக்கூடாது. மேலும் தேஹாதி விலக்ஷண மான ஜீவனின் ஸ்வரூபத்தையும், அதுவும் ப்ராஹ்மமும் ஒன்று என்பதையும் விளக்கக்கூடியதாக இருக்கவேண்டும்.

एवं श्रुतिस्मृतिभिः गृहीतपरमात्मलक्षणं शिष्यं संसारसागरात् उत्तितीर्षुं पृच्छेत् — कस्त्वमसि सोम्येति ॥ ९ ॥

एवं–இவ்வாறு श्रुतिस्मृतिभिः–ச்ருதிகளாலும் ஸ்மிருதி களாலும் गृहीतपरमात्मलक्षणं – ஆத்மாவின் லக்ஷணத்தை அறிந்துகொண்டவனும் संसारसागरात् – ஸம்ஸாரமென்னும் ஸமுத்திரத்திலிருந்து उत्तितीर्षुं–கரையேர விரும்புபவனுமான शिष्यं–சிஷ்யனை पृच्छेत्–கேட்கவேண்டும். 'सोम्य–அப்பா! त्वं–நீ कोऽसि–யாராயிருக்கிறாய்' इति–என்று.

இவ்வாறு முதலில் ஜீவப்ரஹ்மைக்யத்தைக் காட்டும் சுருதி வாக்கியங்களை உபதேசித்து இந்த வாக்கியங்களின் அர்த்தம் நன்கு விளங்குவதற்காக அநேகம் சுருதிகளாலும் ஸ்மிருதிகளாலும் சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தை சிஷ்யன் அறிந்துகொள்ளும்படி செய்யவேண்டும். இதற்குப் பிறகு தான் உபதேசித்த விஷயங்களை சிஷ்யன் ஸந்தேஹமோ, விபரீதமோ இல்லாமல் தெளிவாக நன்கு தெரிந்துகொண்டு இருக்கிறானா என்பதைப் பரீக்ஷிப்பதற்கும், பின்னால் மாறாமல் உறுதியான ஞானமேற்படுவதற்கும் சிஷ்யனிடம் "நீ யார்" என்று ஆசார்யன் கேட்கவேண்டும். அவன் கூறும் பதிலிலிருந்து அவன் ஞானத்தைத் தீர்மானித்து

அக்ஞானமோ, ஸந்தேஹமோ, விபரீதமோ இருந்தால் அதைப் போக்கவேண்டியது ஆசார்யனுடைய கடமை ஆகும். (9)

स यदि ब्रूयात् — ब्राह्मणपुत्रः अदोऽन्वयः ब्रह्मचारी आसम्, गृहस्थो वा । इदानीं अस्मि परमहंसपरिव्राट् संसारसागरात् जन्ममृत्यु-महाग्राहात् उत्तितीर्षुः इति ॥ १० ॥

ब्राह्मणपुत्रः-(நான்) பிராமணருடைய பிள்ளை अदोन्वयः-இன்ன வம்சத்தில் பிறந்தவன் ब्रह्मचारी आसम्-ப்ரஹ்மசாரியாக இருந்தேன். गृहस्थो वा-அல்லது கிருஹஸ்தனாக இருந்தேன். इदानीं-இப்பொழுது परमहंसपरिव्राट्-பரமஹம்ஸ ஸந்யாஸியாகி, जन्ममृत्युमहाग्राहात् - பிறப்பு, இறப்பு என்னும் பெரிய முதலை, அல்லது திமிங்கிலங்களுடன் கூடிய संसारसागरात्-ஸம்ஸாரக் கடலிலிருந்து उत्तितीर्षुः-கரையேற விருப்பமுள்ளவனாகவும் अस्मि-இருக்கிறேன் इति-என்று सः-அந்த சிஷ்யன் यदि ब्रूयात्-பதில் சொல்வானேயானால்,

आचार्यो ब्रूयात् — इहैव तव सोम्य मृतस्य शरीरं वयोभिः-रद्यते मृद्भावं वा आपद्यते । तत्र कथं संसारसागरात् उद्धर्तुमिच्छसीति । नहि नद्याः अवरे कूले भस्मीभूते नद्याः पारं तरिष्यसीति ॥ ११ ॥

सोम्य-அப்பா! मृतस्य-இறந்த तव-உன்னுடைய शरीरं-தேஹமானது इहैव-இங்கேயே वयोभिः-(கழுகு முதலிய) பக்ஷிகளால் अद्यते-தின்னப்படுகிறது. वा-அல்லது मृद्भावं-மண்ணின் தன்மையை आपद्यते-அடைகிறது. तत्र-அதில் कथं-எவ்வாறு संसारसागरात्-ஸம்ஸாரக்கடலிலிருந்து उद्धर्तुं-கடைத்தேற इच्छसि-விரும்புகிறாய். नद्याः-நதியின் अवरे कूले - இக்கரை भस्मीभूते-சாம்பலாகப்போன பிறகு नद्याः-நதியின் पारं-அக்கரையை न हि तरिष्यसि-கடந்துசெல்லப் போவது இல்லை इति-என்று आचार्यः - ஆசார்யர் ब्रूयात्-சொல்லவேண்டும்.

அஹம் (நான்) என்னும் பதத்திற்குப்பொருளாயுள்ளது தான் ஆத்மா. இதுவே ப்ரஹ்மம் என்பதை ஆசார்யர் பிரமாணங்களைக்காட்டி உபதேசித்தார். ஆனாலும் சரீராதிகளுடன் சேர்ந்தே ஆத்மா தோன்றுவதாலும் சரீராதிகளையே நான் என்று எண்ணிக்கொண்டிருப்பதாலும் முன்காட்டிய ஆசார்யரின் உபதேசத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்றுவித சரீரங்களும் ஆத்மாவல்ல. நான் (அஹம்) என்ற பதத்திற்கு சரீர விலக்ஷணமான ஆத்மாதான் பொருள் என்று சரீராதிகளை விலக்கி சுத்தமான ஆத்மஸ்வரூபத்தை தெரிந்துகொண்டால்தான் அதை ப்ரஹ்மஸ்வரூபமாக அறிந்துகொள்ளமுடியும். இதற்காகவேதான் ஆசார்யர் முதலில் சிஷ்யனுடைய ப்ரமத்தைப் போக்குவதற்காக, ஸ்தூல தேஹம் ஆத்மாவன்று என்பதை சிஷ்யன் தானாகத் தெரிந்துகொள்வதற்காக, "நீ யார்" என்று கேட்டார். எல்லோரும் எண்ணிக்கொண்டிருப்பதுபோல் சிஷ்யனும் ஸ்தூல தேஹத்தையே ஆத்மாவென்று நினைத்து அதனைச் சேர்ந்ததான வர்ணம், ஆச்ரமம் முதலான தர்மங்களுடன் கூடினவனாகத் தன்னைக் கூறுகிறான். ஆனாலும் ஸம்ஸாரக் கடலைக்கடந்து அக்கரை சேர்வதில் தனக்குள்ள விருப்பத்தையும் கூறுகிறான். உடன் ஆசார்யர் ஸ்தூல தேஹம் ஆத்மாவல்ல என்பதை விளக்கிக்காட்டுகிறார். அதாவது பிராஹ்மணன் என்றும் பிரஹ்மசாரி என்றும் கிருஹஸ்தன் என்றும், ஸன்யாஸி என்றும் கூறப்படுவது இந்த ஸ்தூல தேஹமே. ஜனங்களில்லாத நடுக்காட்டில் இறந்தால் ஸந்யாஸி தேஹம் பக்ஷிகளால் சாப்பிடப் படுகிறது. கிராமத்தில் மரணம் ஏற்பட்டால் சிஷ்யர்களால் புதைக்கப்பட்டு அந்த தேஹம் மண்ணாக ஆகிவிடுகிறது. மரணமோ தவிர்க்க முடியாதது. இரண்டு விதத்திலும் ஸ்தூல தேஹமென்ற ஆத்மா அழிந்து போய்விடுகிறான். எஞ்சியிருப்பது ஒன்றுமில்லை. ஆகவே ஸம்ஸாரக்கடலைக் கடந்து அக்கரை சேர்ந்து மோக்ஷமடைபவன் யார் என்று ஆசார்யர் கேட்கிறார். (10-11)

(அ) இவ்விதம் ஆசார்யன் சொன்னதைக் கேட்டு சிஷ்யன் நன்கு ஆலோசித்துப் பார்த்து ஸ்தூலதேஹம் ஆத்மாவல்ல என்பதைத் தெரிந்துகொண்டு கூறுகிறான் :—

स यदि ब्रूयात्-अन्योऽहं शरीरात्। शरीरं तु जायते, म्रियते, वयोभिरद्यते, मृद्भावमापद्यते, शस्त्राग्न्यादिभिश्च विनाश्यते, व्याध्यादिभिश्च प्रयुज्यते। तस्मिन् अहं स्वकृतधर्माधर्मवशात् पक्षी नीडमिव प्रविष्टः, पुनः पुनः शरीरविनाशे धर्माधर्मवशात् शरीरान्तरं यास्यामि, पूर्वनीडविनाशे पक्षीव नीडान्तरम्। एवमेवाहमनादौ संसारे, देवमनुष्यतिर्यङ्निरयस्थानेषु स्वकर्मवशात् उपात्तमुपात्तं शरीरं त्यजन्, नवं नवं चान्यदुपाददानो जन्ममरणप्रबन्धचक्रे घटीयन्त्रवत् स्वकर्मणा भ्राम्यमाणः क्रमेणेदं शरीरमासाद्य, संसारचक्रभ्रमणादस्मान्निर्विण्णो भगवन्तमुपसन्नोऽस्मि संसारचक्रभ्रमणप्रशमाय। तस्मात् नित्य एवाहं शरीरादन्यः। शरीराणि आगच्छन्ति अपगच्छन्ति च वासांसीव पुरुषस्येति ॥ १२ ॥

अहं-நான், शरीरात् – (ஸ்தூல) சரீரத்தைக் காட்டிலும், अन्यः-வேறானவன். शरीरं तु-சரீரமோ எனில், जायते-பிறக்கிறது, म्रियते-மரணமடைகிறது, वयोभिः-பறவைகளால், अद्यते-தின்னப்படுகிறது. मृद्भावं-மண்ணின் தன்மையை, आपद्यते-அடைகிறது. शस्त्राग्न्यादिभिश्च-ஆயுதம், நெருப்பு முதலியவைகளாலும், विनाश्यते-அழிக்கப்படுகிறது. व्याध्यादिभिश्च-பிணி முதலியவைகளுடனும், प्रयुज्यते-சேர்க்கப்படுகிறது. तस्मिन्-அந்த சரீரத்தில், अहं-நான், स्वकृतधर्माधर्मवशात्-(முற்பிறவிகளில்)தான் செய்த புண்யபாபங்களுக்கு அதீனமாக, पक्षी-பறவை, नीडमिव-கூட்டில் (நுழைவது) போல், प्रविष्टः-நுழைந்தவனாக, पूर्वनीडविनाशे-முந்தின கூடு அழிந்ததும், पक्षी-பறவை, नीडान्तरमिव-வேறு கூட்டை (அடைவது)போல், पुनः पुनः-திரும்பித்திரும்பி, शरीरविनाशे-சரீரம் அழிந்ததும், धर्माधर्मवशात्-புண்யபாபவசமாக, शरी॰

रान्तरं-வெவ்வேறு சரீரத்தை, यास्यामि-அடைவேன். एवमेव-இவ்விதமாகவே, अहं-நான், अनादौ-அநாதியான, संसारे-ஸம்ஸாரத்தில், देवमनुष्यतिर्यङ्निरयस्थानेषु-தேவர், மனிதர், மிருகம், நரகம் இந்த இடங்களில், स्वकर्मवशात्-தன் கர்மாவின் அதீனமாக, उपात्तं उपात्तं-அடிக்கடி எடுத்துக்கொண்ட, शरीरं-சரீரத்தை, त्यजन्-விடுகிறவனாய், नवं नवं-புதிது புதிதான, अन्यत्-வேறு சரீரத்தை, उपाददानः-எடுத்துக்கொள்கிறவனாய், जन्ममरणप्रबन्धचक्रे-பிறவி மரணங்களின் கூட்டமாகிற சுழலில், घटीयन्त्रवत्-ராட்டினம்போல், स्वकर्मणा-தன் கர்மாவினால், भ्राम्यमाणः-சுற்றுகிறவனாய், क्रमेण-முறையாக, इदं शरीरं-இந்த சரீரத்தை, आसाद्य-அடைந்து, अस्मात्-இந்த, संसारचक्रभ्रमणात्-ஸம்ஸாரச்சுழலில்சுற்றுவதிலிருந்து, निर्विण्णः-வெறுப்பு அடைந்தவனாக, संसारचक्रभ्रमणप्रशमाय-ஸம்ஸாரச்சுழலில் சுற்றுவது நீங்குவதற்காக, भगवन्तं-பூஜ்யரான தங்களை, उपसन्नोऽस्मि-சரண் அடைந்திருக்கிறேன். तस्मात्-ஆகையால், अहं-நான், शरीरात्-சரீரத்தைக்காட்டிலும், अन्यः-வேறானவன், नित्य एव-அழிவற்றவன் தான், पुरुषः-[illegible], वासांसीव-ஆடைகள்போல, शरीराणि-[illegible]கள், आगच्छन्ति-வருகின்றன, अपगच्छन्ति च-போகின்றன-[illegible], सः-அவன் (சிஷ்யன்), यदि ब्रूयात्-சொல்வானேயாகில்.

(12)

(அ) ஆசிரியர் கூறுகிறார் :—

आचार्यो ब्रूयात्-साधु अवादीः, सम्यक् पश्यसि। कथं मृषा अवादीः ब्राह्मणपुत्रः अदोन्वयः ब्रह्मचारी आसम् गृहस्थो वा, इदानीं अस्मि परमहंसपरिव्राट् इति ॥ १३ ॥

साधु-நன்றாக, अवादीः-சொன்னாய். सम्यक्-நன்றாக, पश्यसि-அறிந்திருக்கிறாய் (ஆனால்), ब्राह्मणपुत्रः-பிராஹ்மணனுடைய குமாரன், अदोन्वयः-இன்னகுலத்தில் பிறந்தவன், ब्रह्मचारी-ப்ராஹ்மசாரியாகவோ, वा-அல்லது, गृहस्थः-கிருஹஸ்தனாகவோ, आसम्-இருந்தேன். इदानीं-இப்பொழுது,

परमहंसपरिव्राट्-பரமஹம்ஸ ஸந்யாஸியாக, अस्मि-இருக்கிறேன். इति-என்று, मृषा-பொய்யாக, कथं-எப்படி, अवादीः-சொன்னாய்? इति-என்று, आचार्यः-ஆசார்யர், ब्रूयात्-கேட்பார்.

ஆசார்யர் ஸ்தூல சரீரத்தைப் பற்றிச் சிறிது விளக்கிக் காட்டியதும் தான் சரீரமல்ல, அந்தக் காட்டிலும் வேறான வன் என்பதை சிஷ்யன் நன்கு தெரிந்துகொண்டான். சரீரத்தில் பலவித மாறுபாடுகள் ஏற்படுகின்றன. அவைகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிந்துகொள்கிறான் த்ருச்யமான (அறியப்படும்) சரீரத்தைவிட த்ரஷ்டாவான (அறிகின்ற) ஆத்மா வேறானவன். மேலும் மாறி மாறி வரும் பொருள்களைவிட மாறாமல் தொடர்ந்து வரும் பொருள் வேறானது. என்பதை உலகில் கண்டிருக்கிறோம் अनुवृत्तं व्यावृत्तात् भिन्नम् । பலவித பூக்களால் கட்டப்பட்ட மாலையில் மாறி மாறி வரும் பூக்களைக் காட்டிலும் எல்லாப் பூக்களிலும் தொடர்ந்து வரும் நூல் வேறானது. ஒவ்வொரு நாளும் வெவ்வேறான ஆடைகளை அணிந்துகொள்கிறான். எல்லா ஆடைகளையும் அணிந்துகொள்ளும் உடல் ஒன்றே. அந்த ஆடைகளைவிட உடல் வேறானது. அதுபோல் மனிதன், மிருகம் முதலான பல சரீரங்கள் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கின்றன. எல்லா சரீரங்களிலும் தொடர்ந்து வரும் ஆத்மா சரீரத்தைவிட வேறானவன். இவ்வாறு தெரிந்துகொண்ட போதிலும் சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளாததால் அவித்யையும், அதனால் காமமும், அதனால் புண்யபாப ரூபமான கர்மாவும் ஏற்படுகிறது. இந்த கர்மாக்களை ஒட்டி சரீரமும், அதில் அபிமானத்துடன் பூர்வ வாஸனையால் மேலும் கர்மாக்களைச் செய்வதால் இந்த சரீரம் போனவுடன் மற்றொரு சரீரம் என்ற ரீதியில் பிறப்பு இறப்பு என்னும் சுழலில் தவிப்பவன் தைவவசமாக வெறுப்புற்று ஆசார்யனை அடைந்து இதிலிருந்து விடுபட ப்ரார்த்திக்கிறான். இங்கு வேதாந்த விசாரத்தின் ஸாதனமான நித்யாநித்யவஸ்து விவேகம் (இது நித்யம் இது அநித்யம் என்று பிரித்துத் தெரிந்துகொள்வது) தனக்கு ஏற்பட்டதாக சிஷ்யன் கூறுகிறான். ஆசார்யர் சிஷ்யன்

रान्तरं-வெவ்வேறு சரீரத்தை, यास्यामि-அடைவேன். एवमेव-இவ்விதமாகவே, अहं-நான், अनादौ-அநாதியான, संसारे-ஸம்ஸாரத்தில், देवमनुष्यतिर्यङ्निरयस्थानेषु-தேவர், மனிதர், மிருகம், நரகம் இந்த இடங்களில், स्वकर्मवशात्-தன் கர்மாவின் அதீனமாக, उपात्तं उपात्तं-அடிக்கடி எடுத்துக்கொண்ட, शरीरं-சரீரத்தை, त्यजन्-விடுகிறவனாய், नवं नवं-புதிது புதிதான, अन्यत्-வேறு சரீரத்தை, उपाददानः-எடுத்துக்கொள்கிறவனாய், जन्ममरणप्रबन्धचक्रे-பிறவி மரணங்களின் கூட்டமாகிற சுழலில், घटीयन्त्रवत्-ராட்டினம்போல், स्वकर्मणा-தன் கர்மாவினால், भ्राम्यमाणः-சுற்றுகிறவனாய், क्रमेण-முறையாக, इदं शरीरं-இந்த சரீரத்தை, आसाद्य-அடைந்து, अस्मात्-இந்த, संसारचक्रभ्रमणात्-ஸம்ஸாரச்சுழலில்சுற்றுவதிலிருந்து निर्विण्णः-வெறுப்பு அடைந்தவனாக, संसारचक्रभ्रमणप्रशमाय-ஸம்ஸாரச்சுழலில் சுற்றுவது நீங்குவதற்காக, भगवन्तं-பூஜ்யரான தங்களை, उपसन्नोस्मि-சரண் அடைந்திருக்கிறேன். तस्मात्-ஆகையால், अहं-நான், शरीरात्-சரீரத்தைக்காட்டிலும், अन्यः-வேறானவன், नित्य एव-அழிவற்றவன் தான், पुरुषस्य-மனிதனுக்கு, वासांसीव-ஆடைகள்போல், शरीराणि-சரீரங்கள், आगच्छन्ति-வருகின்றன. अपगच्छन्ति च-போகின்றன. इति-என்று, सः-அவன் (சிஷ்யன்), यदि ब्रूयात्-சொல்வானேயாகில். (12)

(அ) ஆசிரியர் கூறுகிறார் :—

आचार्यो ब्रूयात्-साधु अवादीः, सम्यक् पश्यसि । कथं मृषा अवादीः ब्राह्मणपुत्रः अदोन्वयः ब्रह्मचारी आसम् गृहस्थो वा, इदानीं अस्मि परमहंसपरिव्राट् इति ॥ १३ ॥

साधु-நன்றாக, अवादीः-சொன்னாய். सम्यक्-நன்றாக, पश्यसि-அறிந்திருக்கிறாய் (ஆனால்), ब्राह्मणपुत्रः-பிராஹ்மணனுடைய குமாரன், अदोन्वयः-இன்னகுலத்தில் பிறந்தவன், ब्रह्मचारी-பிரம்மசாரியாகவோ, वा-அல்லது, गृहस्थः-கிருஹஸ்தனாகவோ, आसम्-இருந்தேன். इदानीं-இப்பொழுது,

परमहंसपरिव्राट्–பரமஹம்ஸ ஸந்யாஸியாக, अस्मि–இருக்கிறேன். इति–என்று, मृषा–பொய்யாக, कथं–எப்படி, अवादीः–சொன்னாய்? इति–என்று, आचार्यः–ஆசார்யர், ब्रूयात्–கேட்பார்.

ஆசார்யர் ஸ்தூல சரீரத்தைப் பற்றிச் சிறிது விளக்கிக் காட்டியதும் தான் சரீரமல்ல, அதைக் காட்டிலும் வேறானவன் என்பதை சிஷ்யன் நன்கு தெரிந்துகொண்டான். சரீரத்தில் பலவித மாறுபாடுகள் ஏற்படுகின்றன. அவைகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிந்துகொள்கிறான் த்ருச்யமான (அறியப்படும்) சரீரத்தைவிட த்ரஷ்டாவான (அறிகின்ற) ஆத்மா வேறானவன். மேலும் மாறி மாறி வரும் பொருள்களைவிட மாறாமல் தொடர்ந்து வரும் பொருள் வேறானது. என்பதை உலகில் கண்டிருக்கிறோம் अनुवृत्तं व्यावृत्तात् भिन्नम्। பலவித பூக்களால் கட்டப்பட்ட மாலையில் மாறி மாறி வரும் பூக்களைக் காட்டிலும் எல்லாப் பூக்களிலும் தொடர்ந்து வரும் நூல் வேறானது. ஒவ்வொரு நாளும் வெவ்வேறான ஆடைகளை அணிந்துகொள்கிறான். எல்லா ஆடைகளையும் அணிந்துகொள்ளும் உடல் ஒன்றே. அந்த ஆடைகளைவிட உடல் வேறானது. அதுபோல் மனிதன், மிருகம் முதலான பல சரீரங்கள் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கின்றன. எல்லா சரீரங்களிலும் தொடர்ந்து வரும் ஆத்மா சரீரத்தைவிட வேறானவன். இவ்வாறு தெரிந்துகொண்ட போதிலும் சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளாததால் அவித்யையும், அதனால் காமமும், அதனால் புண்யபாப ரூபமான கர்மாவும் ஏற்படுகிறது. இந்த கர்மாக்களை ஒட்டி சரீரமும், அதில் அபிமானத்துடன் பூர்வ வாஸனையால் மேலும் கர்மாக்களைச் செய்வதால் இந்த சரீரம் போனவுடன் மற்றொரு சரீரம் என்ற ரீதியில் பிறப்பு இறப்பு என்னும் சுழலில் தவிப்பவன் தைவவசமாக வெறுப்புற்று ஆசார்யனை அடைந்து இதிலிருந்து விடுபட பிரார்த்திக்கிறான். இங்கு வேதாந்த விசாரத்தின் ஸாதனமான நித்யாநித்யவஸ்து விவேகம் (இது நித்யம் இது அநித்யம் என்று பிரித்துத் தெரிந்துகொள்வது) தனக்கு ஏற்பட்டதாக சிஷ்யன் கூறுகிறான். ஆசார்யர் சிஷ்யன்

கூறியவற்றைப் புகழ்ந்து, இவ்வித விவேகமிருந்தும் பொய்யாக சரீரத்தை நான் என்று கூறுகிறாயே அதனால் உனக்கு இன்னமும் ப்ராந்தி நீங்கவில்லை என்று கூறுகிறார்.

स यदि ब्रूयात् – भगवन्, कथमहं मृषाऽवादिषमिति ॥ १४ ॥

तं प्रति ब्रूयादाचार्यः – यतस्त्वं भिन्नजात्यन्वयसंस्कारं शरीरं जात्यन्वयसंस्कारवर्जितस्य आत्मनः प्रत्यभ्यज्ञासीः ब्राह्मणपुत्रोऽदोन्वय इत्यादिना वाक्येनेति ॥ १५ ॥

**भगवन्**-சிறந்தவரே, **अहं**-நான், **कथं**-எப்படி, **मृषा**-பொய்யாக, **अवादिषम्**-சொன்னேன், **इति**-என்று, **सः**-அந்த சிஷ்யன், **यदि ब्रूयात्**-சொல்வானேயாகில், **तं प्रति**-அவனைக் குறித்து, **आचार्यः**ஆசிரியர், **ब्रूयात्**-கூறவேண்டும். **यतः**-ஏனெனில், **त्वं**-நீ, **ब्राह्मणपुत्रः**-பிராமணரின் பிள்ளை, **अदोन्वयः**-இன்ன வம்சத்தில் பிறந்தவன், **इत्यादिना**-இதுமுதலான, **वाक्येन**-வார்த்தையால், **जात्यन्वयसंस्कारवर्जितस्य**-ஜாதி, குலம், (ஜாதகர்மா முதலான) ஸம்ஸ்காரம் இவைகளற்ற, **आत्मनः**-ஆத்மாவிற்கு, **भिन्नजात्यन्वयसंस्कारं**-வேறான ஜாதி, வம்சம், ஸம்ஸ்காரங்களுடன் கூடிய, **शरीरं**-சரீரத்தை, **प्रत्यभ्यज्ञासीः**-ஞாபகப்படுத்தித் தெரிந்துகொண்டாய்.

நீ யார் என்று ஆசிரியன் கேட்டதற்கு நான் பிராமணன், இன்ன குலத்தவன், இன்ன ஆச்ரமத்தில் இருந்தேன். இப்பொழுது இன்ன ஆச்ரமத்திலிருக்கிறேன் என்று பதில் கூறினான். இங்கு ஜாதி, வம்சம் ஸம்ஸ்காரம் இவைகளெல்லாம் சரீரத்திற்கு ஏற்பட்டதே தவிர ஆத்மாவிற்கு கிடையாது. ஆத்மாவில் இல்லாததும் சரீரத்தைச் சேர்ந்ததுமான இந்த தர்மங்களுடன் கூடினவனாகத் தன்னைக் கூறிக்கொள்வதால் சரீரத்தையே ஆத்மாவாகத் தெரிந்துகொண்டிருக்கிறான் என்பதும் சரீரத்தை காட்டிலும் வேறான ஆத்மாவை அறிந்துகொள்ளவில்லை யென்பதும் தெரிகிறது. ஆகவே ஆத்ம விஷயத்தில் ப்ராந்தி இன்னும் நீங்கவில்லை. (14-15)

स यदि पृच्छेत् — कथं भिन्नजात्यन्वयसंस्कारं शरीरम्, कथं वा अहं जात्यन्वयसंस्कारवर्जित इति ॥ १६ ॥

आचार्यो ब्रूयात् — शृणु सोम्य यथेदं शरीरं त्वत्तो भिन्नं भिन्नजात्यन्वयसंस्कारम्, त्वं च जात्यन्वयसंस्कारवर्जितः इत्युक्त्वा तं स्मारयेत् — स्मर्तुमर्हसि सोम्य परमात्मानं सर्वात्मानं यथोक्तलक्षणं श्रावितोऽसि 'सदेव सोम्येदम्' इत्यादिभिः श्रुतिभिः स्मृतिभिश्च. लक्षणं च तस्य श्रुतिभिः स्मृतिभिश्च ॥ १७ ॥

**शरीरं**-சரீரமானது **कथं**-எப்படி **भिन्नजात्यन्वयसंस्कारं**-வேறான ஜாதி, வம்சம், ஸம்ஸ்காரங்களுடன் கூடியது? **अहं**-நான், **कथं वा**-எப்படி **जात्यन्वयसंस्कारवर्जितः**-ஜாதி, வம்சம் ஸம்ஸ்காரங்கள் அற்றவன்? **इति**-என்று, **सः**-அந்த சிஷ்யன் **यदि पृच्छेत्**-கேட்பானேயாகில் **आचार्यः**-ஆசிரியன் **ब्रूयात्** சொல்வான்.

**सोम्य**-அப்பனே! **भिन्नजात्यन्वयसंस्कारं**-வேறான ஜாதி, வம்சம், ஸம்ஸ்காரங்களுடன்கூடிய **इदं शरीरं**-இந்த சரீரம் **त्वत्तः**-உன்னைக்காட்டிலும் **भिन्नं**-வேறானது (என்பதும்) **त्वं च**-நீ **जात्यन्वयसंस्कारवर्जितः**-ஜாதி, வம்சம், ஸம்ஸ்காரங்கள் அற்றவன் (என்பதும்) **यथा**-எப்படி என்பதை **शृणु**-கவனித்துக்கேள் **इति**-என்று **उक्त्वा**-சொல்லி **तं**-அவனை **स्मारयेत्**-ஞாபகப்படுத்த வேண்டும். **सोम्य**-அப்பனே **सदेव सोम्येदं**-ஸதேவ ஸோம்யேதம் **इत्यादिभिः**-இது முதலான **श्रुतिभिः**-ச்ருதிகளாலும், **स्मृतिभिश्च**-(அதற்கு அநுகூலமான) ஸ்மிருதிகளாலும் **यथोक्तलक्षणं**-முன் கூறப்பட்ட ஸ்வரூபத்துடன் கூடியதும் **सर्वात्मानं**-எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பதுமான **परमात्मानं**-பரமாத்மாவையும், **श्रुतिभिः**-(ய ஆத்மா அபஹதபாப்மா முதலான) சுருதிகளாலும் **स्मृतिभिश्च**-(ந ஜாயதே முதலான) ஸ்மிருதிகளாலும் **तस्य**-அந்த ஆத்மாவின் **लक्षणं च**-லக்ஷணத்தையும் **श्रावितोऽसि**-கேட்டு

அறிவுறுத்தப்பட்டிருக்கிறாய், (அதை) स्मर्तुमर्हसि-நினைவு படுத்திக்கொள்வாய்.

சிஷ்யன், ப்ரஹ்மஸ்வரூபத்தையோ, அதன் லக்ஷணங்களையோ, அந்தப் பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்பதையோ தெரிந்துகொள்ளவில்லை. இது தெரிந்தால் தான் ஜாதி முதலியவை தேஹத்தைச் சேர்ந்தவை என்றும் ஆத்மாவுக்குக் கிடையாது என்றும் அவனுக்கு விளக்க முடியும். அதற்காக ஆரம்பத்தில் 6, 7, 8 பாராக்களில் கூறப்பட்ட விஷயங்களை ஞாபகப்படுத்திக்கொள்ளும்படி சிஷ்யனிடம் ஆசார்யர் கூறுகிறார் :— (16–17)

(அ) இனி ஜாதி முதலியவை சரீரத்தைச் சேர்ந்தவை என்பதை விளக்குவதற்காக ஆத்மாவைப்பற்றி முன் சொல்லப்பட்ட சுருதி வாக்கியங்களின் அர்த்தத்தைக் காட்டி அந்த ஆத்மாவிலிருந்து சரீரம் உண்டாகும் விதத்தை உபதேசிக்கிறார் :—

लब्धपरमात्मलक्षणस्मृतये ब्रूयात् — योऽसौ आकाशनामा नामरूपाभ्यां अर्थान्तरभूतः, अशरीरः, अस्थूलादिलक्षणः, अपहतपाप्मादिलक्षणश्च, सर्वैः संसारधर्मैः अनान्वितः, यत्साक्षादपरोक्षात् ब्रह्म य आत्मा सर्वान्तरः, अदृष्टो द्रष्टा, अश्रुतः श्रोता अमतो मन्ता, अविज्ञातो विज्ञाता, नित्यविज्ञानस्वरूपः अनन्तरः अबाह्यः विज्ञानघन एव परिपूर्णः आकाशवत्, अनन्तशक्तिः, आत्मा सर्वस्य, अशनायादिवर्जितः आविर्भावतिरोभाववर्जितश्च, स्वात्मविलक्षणयोः नामरूपयोः जगद्बीजभूतयोः स्वात्मस्थयोः तत्वान्यत्वाभ्यां अनिर्वचनीययोः स्वयंवेद्ययोः सद्भावमात्रेण अचिन्त्यशक्तित्वात् व्याकर्ता अव्याकृतयोः ॥

लब्धपरमात्मलक्षणस्मृतये-பரமாத்ம லக்ஷணத்தை நினைவு படுத்திக்கொண்ட (சிஷ்யனுக்கு) ब्रूयात्-கூறவேண்டும்.

यः असौ-பல்வேறு உபநிஷத்துக்களில் பல்வேறு இடங்களில் கூறப்பட்ட ஆத்மா, आकाशनामा-ஆகாசம் என்ற பெயருள்ளவர், (ஆனாலும்) नामरूपाभ्यां-நாம, ரூபம்

இவைகளைக்காட்டிலும் अर्थान्तरभूतः-வேருன தத்வமாக இருப்பவர், अशरीरः-சரீரமற்றவர், अस्थूलादिलक्षणः-பருமன் இல்லாதது முதலியவற்றை லக்ஷணமாகக் கொண்டவர், अपहतपाप्मादिलक्षणश्च-பாபமற்றவர் முதலியதையும் லக்ஷணமாகக்கொண்டவர், सर्वैः संसारधर्मैः-ஸம்ஸார தர்மங்கள் எல்லாவற்றுடனும் अनागन्धितः-ஒட்டாதவர், यत्साक्षात् अपरोक्षात्-நேரிடையாக ப்ரத்யக்ஷமாக விளங்குபவர், ब्रह्म-எல்லாக் காலங்களிலும் எங்கும் நிறைந்து காலம், தேசம், வஸ்து இவைகளின் எல்லையற்றவர், य आत्मा सर्वान्तरः-எல்லாவற்றிற்கும் உள்ளே ஆத்மஸ்வரூபமாக இருப்பவர், अदृष्टः-பார்க்கப்படாதவர் (ஆனால் எல்லாவற்றையும்) द्रष्टा-பார்க்கிறவர், अश्रुतः-கேட்கப்படாதவர், श्रोता-கேட்பவர், अमतः-நினைக்கப்படாதவர், मन्ता-நினைக்கிறவர், अविज्ञातः-அறியப்படாதவர், विज्ञाता-அறிகிறவர், नित्यविज्ञानस्वरूपः-அழிவற்ற அறிவு ஸ்வரூபமாயிருப்பவர், अनन्तरः अबाह्यः-உள்ளும் வெளியுமில்லாதவர், विज्ञानघन एव-சைதன்யம் ஒன்றினாலேயே நிறையப்பெற்றவர், आकाशवत्-ஆகாசம்போல், परिपूर्णः-எங்கும் நிறைந்தவர், अनन्तशक्तिः-அளவற்ற சக்தியுள்ளவர், अशनायादिवर्जितः-பசி முதலியவைகள் அற்றவர், आविर्भावतिरोभाववर्जितश्च-உத்பத்தி, நாசமற்றவர், स्वात्मविलक्षणयोः-தன் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறுபட்ட தன்மை உள்ளதும் (ஜடமானதும்), जगद्बीजभूतयोः-உலகிற்குக் காரணமானதும், स्वात्मस्थयोः-தன்னிடத்திலேயே இருப்பதும், तत्त्वान्यत्वाभ्यां अनिर्वचनीययोः-ஆத்ம ஸ்வரூபம் என்றோ, அதைக்காட்டிலும் வேறு என்றோ விளக்கிக்கூற முடியாததும், स्वसंवेद्ययोः-தன்னாலேயே அறியக்கூடியதும், अव्याकृतयोः-ஸூக்ஷ்மமானதுமான, नामरूपयोः-நாமரூபங்களை अचिन्त्यशक्तित्वात्-ஆலோசிக்கவே முடியாத சக்திகள் உள்ளவராதலால், सद्भावमात्रेण-தான் இருப்பதனாலேயே, व्याकर्ता-வ்யக்தமாக (ஸ்பஷ்டமாக) ஆக்குகிறவர், (அவர்) सर्वस्य आत्मा-எல்லோருக்கும் ஆத்மாவாக விளங்குபவர்,

ஜாதி, ஸம்ஸ்காரம் முதலியவை சரீரத்தைச் சேர்ந்ததே யொழிய ஆத்மாவுக்குக் கிடையாது என்பதைச் சிஷ்யன் புரிந்துகொள்வதற்காக உபநிஷத்துக்களில் ஆங்காங்கு கூறப்பட்ட பிரஹ்மலக்ஷணங்களையெல்லாம் ஒருங்கு சேர்த்துக்காட்டி, அந்த பிரஹ்மமே எல்லா சரீரங்களிலும் ஆத்மாவாக விளங்குகிறுர் என்பதையும் கூறி அவரிட மிருந்து சரீரம் உண்டாகும் விதத்தையும் கூறுகிறுர். எங்கும் நிறைந்திருப்பதாலும் ஒன்றிலும் ஒட்டாததாலும் ப்ரஹ்மத்தையும் ஆகாசம் என்று கூறுவது உண்டு. ஆனாலும் நாமரூபங்களுக்கு உட்பட்ட பூதாகாசத்திற்கும் அதிஷ்டானமாயிருப்பதால் அதைக்காட்டிலும் வேறுனவர். அவருக்கு சரீரம் இந்திரியம் முதலியவை கிடையாது. பிரபஞ்சத்தில் காணும் தர்மங்கள் ஒன்றும் அவரிடம் கிடையாது. நம் சரீரத்தில் எல்லாவற்றிற்கும் உள்ளே எப்பொழுதும் நேரிடையாக விளங்கிக்கொண்டிருக்கும் ஜீவாத்மா அவரே. நம் சரீரத்தில் மட்டுமல்ல, எல்லா சரீரங்களிலும் அவர் ஒருவரே தான் ஆத்மாவாக பிரகாசிக் கிறுர். கண், காது, புத்தி முதலியவைகளைக்கொண்டு அவரை அறியமுடியாது. அழிவற்ற சைதன்யத்தையே வடிவமாகக்கொண்ட அவரால்தான் எல்லாம் பிரகாசிக் கிறது. மாயையின் எண்ணற்ற சக்திகளைக்கொண்டு எல்லாவற்றையும் பார்க்கிறவராகவும், கேட்கிறவராகவும் கூறப்படுகிறுர். எங்கும் நிறைந்திருப்பதால் அவருக்கு உள் வெளி கிடையாது. பசி, தாகம், உத்பத்தி, விநாசம் முத லான சரீர தர்மங்கள் அற்றவர். இவ்வித ஆத்மாவானவர் தன் ஸங்கல்பத்தினுலேயே மாயையில் அடங்கி அவ்யக்த மாக இருந்த பிரபஞ்சத்திற்கு பெயரும் உருவமும் கொடுத்து வெளிப்படுத்துகிறுர். இவை ஜடம், ஆத்மாவிலேயே உள் ளது. விசாரித்துப் பார்த்தோமானுல் இவை ஆத்ம ஸ்வ ரூபத்தில் சேர்ந்தவை என்றோ அல்லது அதைவிட்டுத்தனி யாக இருப்பவை என்றோ கூறமுடியாது. ஆகவே பொய் யானவை. இதை ஸிருஷ்டிப்பதற்காக ஆத்மா விசேஷ பிரயத்னம் ஒன்றும் செய்வதில்லை. காந்தத்தின் முன் இரும்பு இழுக்கப்படுவதுபோல் ஆத்மா இருப்பதாலேயே ஸகல கார்யங்களும் நடைபெறுகின்றன. (18)

ते नामरूपे अव्याकृते सती व्याक्रियमाणे, तस्मात् एतस्मात् आत्मनः आकाशनामाकृती संवृत्ते। तच्च आकाशाख्यं भूतं, अनेन प्रकारेण परमात्मनः संभूतं, प्रसन्नादिव सलिलात् मलमिव फेनम्। न सलिलं, न च सलिलात् अत्यन्तभिन्नं फेनम्, सलिलव्यतिरेकेणादर्शनात्। सलिलं तु स्वच्छं अन्यत् फेनात् मलरूपात्। एवं परमात्मा नामरूपाभ्यां अन्यः फेनस्थानीयाभ्यां, शुद्धः प्रसन्नः तद्विलक्षणः। ते नामरूपे अव्याकृते सती व्याक्रियमाणे फेनस्थानीये आकाशनामाकृती संवृत्ते ॥ १९ ॥

**अव्याकृते**-அவ்யக்தமாக, **सती**-இருக்கின்ற, **ते नामरूपे**-அந்த நாம ரூபங்கள், **व्याक्रियमाणे**-ஸ்பஷ்டமாக்கப்படும் பொழுது அவை, **तस्मात् एतस्मात् आत्मनः**-அந்த இந்த ஆத்மா விடமிருந்து, **आकाशनामाकृती**-ஆகாசம் என்ற பெயரும் உருவமும் உடையதாக, **संवृत्ते**-ஆய்விட்டன. **प्रसन्नात्**-தெளிவான **सलिलादिव**-நீர்போன்றதான, **परमात्मनः**-பரமாத்மாவிடமிருந்து, **मलं**-அழுக்கான, **फेनमिव**-நுரைபோன்ற, **तच्च आकाशाख्यं भूतं**-அந்த ஆகாசமென்ற பூதமானது, **अनेन प्रकारेण**-இவ்விதமாக **संभूतं**-உண்டானது. **फेनं**-நுரையானது **न सलिलं**-ஜலஸ்வரூபத்தைச் சேர்ந்ததல்ல **सलिलव्यतिरेकेण अदर्शनात्**-ஜலத்தைவிட்டுத் தனியாகக் காணப்படாததால், **न च सलिलात् अत्यन्तभिन्नम्**-ஜலத்தைக்காட்டிலும் மிகவும் வேறுபட்ட பொருளும் அல்ல. **स्वच्छं**-தெளிவான, **सलिलं तु**-ஜலமோவெனில், **मलरूपात्**-அழுக்கான, **फेनात्**-நுரையைக் காட்டிலும், **अन्यत्**-வேறானது. **एवं**-இவ்விதம், **परमात्मा**-பரமாத்மா, **फेनस्थानीयाभ्यां**-நுரைபோன்றதான, **नामरूपाभ्यां**-நாமரூபங்களைக்காட்டிலும், **अन्यः**-வேறானவர், **शुद्धः**-பரிசுத்தர், **प्रसन्नः**-கலக்கமற்றவர், **तद्विलक्षणः**-அதைக் காட்டிலும் மாறுபட்ட ஸ்வரூபமுள்ளவர். **अव्याकृते सती**-அவ்யக்தமாக இருக்கின்ற, **ते नामरूपे**-அந்த நாமரூபங்கள், **व्याक्रियमाणे**-வ்யக்தமாக்கப்பட்டு, **फेनस्थानीये**-நுரைபோன்ற

தான், आकाशनामाकृती-ஆகாசம் என்ற பெயரும் உருவமும் உள்ளவைகளாக, संवृत्ते-ஆய்விட்டன.

இங்கு ஸ்ருஷ்டியைக்கூறும் முறையாலேயே பிரபஞ்சம் பொய் என்பதையும் பிரஹ்மம் விவர்த்த உபாதான காரணம் என்பதையும் விளக்கிக்காட்டுகிறார். பரமாத்மா அவ்யக்த மென்னும் மாயையுடன் சேர்ந்து சிருஷ்டி செய்ய ஆரம்பிக்கிறார். ஸ்ருஷ்டி என்பது நாமரூபங்களை ஸ்தூலமாக வெளிப்படையாகக் காட்டுதல்: முதலில் உண்டானது ஆகாசம் என்னும் பெயரும் உருவமும்: இந்த ஆகாசமானது ப்ரஹ்மத்தைவிட்டுத் தனியாக நிற்கவில்லை. ஸத்ரூபமாக மட்டும் இருந்தபிரம்மம் மாயையால் ஆகாசம் என்றபெயரும் உருவமும் உள்ளதாக ஆகிவிட்டது. இதுதான் மாயையின் வியக்கத்தக்க சக்தி. இந்த ஆகாசம் ஜடமானதால் ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகக் கூறமுடியாது. ப்ரஹ்மஸ்வரூபமில்லாமல் அதற்குத் தோற்றமே இல்லாததால் அதைக் காட்டிலும் வேறான தனிப்பொருள் என்றும் கூறமுடியாது. ஆகவே ஆகாசம் என்ற பெயரும் வடிவமும் வெறும் தோற்றமே தவிர உண்மைப்பொருளல்ல அதாவது பொய். ப்ரஹ்மமே நமக்கு ஆகாச வடிவமாகத் தோற்றுகிறது. ஆகாசம் என்ற பெயரால் ப்ரஹ்மத்தையே கூறுகிறோம். நீரில் அழுக்கின் சேர்க்கையால் உண்டாகும் நுரையானது நீரும் அல்ல. நீரைக்காட்டிலும் வேறும் அல்ல. நீரிலேயே சிறிது நேரம் தோன்றி மறைந்துவிடுகிறது. நீரைத்தவிர வேறு இடத்தில் அதைக் காணவும் முடியாது. இதுபோல் தான் ப்ரஹ்மத்தில் தோன்றும் ஆகாசமும். அழுக்கான நுரையைக் காட்டிலும் வேறாக சுத்த நீர் இருப்பதுபோல ஆகாசத்தைக்காட்டிலும் வேறாக ப்ரஹ்மம் உண்மையாக இருக்கிறது இங்கு ஆகாசத்தில் காட்டிய நியாயத்தையே வாயு முதலான பிரபஞ்சம் எல்லாவற்றிலும் பார்த்துக் கொள்ளவேண்டும். இவ்வாறு தன் ஸ்வரூபத்தில் சிறிதும் மாறுபாடு இல்லாமல் தன்னிடத்திலேயே பலவித பிரபஞ்சத் தோற்றங்களை வெளிக்காட்டுவதால் ப்ரஹ்மம் விவர்த்த உபாதான காரணம் ஆகிறது. (19)

(அ) முதலில் ஆகாசத்தின் ஸிருஷ்டியைக் கூறிவிட்டுப் பிறகு வாயு முதலியவைகளின் ஸிருஷ்டியைக் கூறுகிறார் :—

ततोऽपि स्थूलभावमापद्यमाने नामरूपे व्याक्रियमाणे वायुभावमापद्येते । ततोऽप्यग्निभावम्, अग्नेरब्भावम्, ततः पृथ्वीभावम्, इत्येवंक्रमेण पूर्वपूर्वानुप्रवेशेन पञ्च महाभूतानि पृथिव्यन्तान्युत्पन्नानि । ततः पञ्चमहाभूतगुणविशिष्टा पृथ्वी । पृथ्व्याश्च पञ्चात्मक्यो व्रीहियवाद्या ओषधयो जायन्ते । ताभ्यो भक्षिताभ्यो लोहितं शुक्रं च स्त्रीपुंसशरीरसंबन्धि जायते । तदुभयमृतुकाले अविद्याप्रयुक्तकामखजनिर्मथनोद्भूतं मन्त्रसंस्कृतं गर्भाशये निषिच्यते । तत् स्वयोनिरसानुप्रवेशेन विवर्धमानं गर्भीभूतं नवमे दशमे वा मासि सञ्जायते ॥ २० ॥

**नामरूपे**-(ஆகாசரூபமாக இருந்த) நாமரூபங்கள், **व्याक्रियमाणे**-(ஆத்மாவினால்) வியக்தமாக ஆக்கப்படுபவைகளாய், **ततोऽपि**-அந்த ஆகாசத்தைக் காட்டிலும், **स्थूलभावं**-ஸ்தூலமாயிருக்கும் தன்மையை, **आपद्यमाने**-அடைந்து, **वायुभावं**-வாயுத்தன்மையை, **आपद्येते**-அடைகின்றன. **ततोऽपि**-அதிலிருந்து, **अग्निभावं**-அக்நித்தன்மையையும், **अग्नेः**-அக்னியிலிருந்து, **अब्भावं**-ஜலத்தன்மையையும், **ततः**-அதிலிருந்து, **पृथ्वीभावं**-பிருதிவித்தன்மையையும், **इति**-என்று, **एवंक्रमेण**-இவ்வாறு வரிசையாக, **पूर्वपूर्वानुप्रवेशेन**-முந்தைய முந்தைய பூதத்தின் பிரவேசத்தினால், **पृथिव्यन्तानि**-பிருதிவிவரையிலுமுள்ள, **पञ्च महाभूतानि**-ஐந்து மஹாபூதங்கள், **उत्पन्नानि**-உண்டாயின. **ततः**-பிறகு, **पञ्चमहाभूतगुणविशिष्टा**-ஐந்து மஹாபூதங்களின் குணங்களுடன் கூடிய, **पृथ्वी**-பூமி (உண்டானது), **पृथ्व्याश्च**-பிருதிவியிலிருந்து, **पञ्चात्मक्यः**-பஞ்சீகரணம் ஆகி ஐந்து பூதங்களின் அம்சமும் கலந்ததான, **व्रीहियवाद्याः**-நெல் யவை முதலான, **ओषधयः**-தாவரங்கள், **जायन्ते**-உண்டாகின்றன, **भक्षिताभ्यः**-சாப்பிடப்பட்ட, **ताभ्यः**-அவைகளிலிருந்து, **स्त्रीपुंसशरीरसंबन्धि**-ஸ்திரீகளுடையவும் புருஷர்களுடையவும் சரீரத்தின் ஸம்பந்தத்தைப்பெற்று, **लोहितं शुक्रं च**-சோணித

மும் சுக்லமும், जायते-உண்டாகிறது. तत् उभयं-அவ்விரண்டும், ऋतुकाले-ருதுகாலத்தில், अविद्याप्रयुक्तकामखजनिर्मथनोद्भूतं-அக்ஞானத்தால் ஏற்பட்ட காமம் என்னும் மத்தினுல் கடையப்பட்டு வெளிப்பட்டு, मन्त्रसंस्कृतं-வேதமந்திரங்களால் ஸம்ஸ்காரத்தை அடைந்து, गर्भाशये-கர்பாசயத்தில், निषिच्यते-விடப்படுகிறது. तत्-அது, स्वयोनिरसानुप्रवेशेन-தனக்குக் காரணமான அன்னரஸத்தின் சேர்க்கையால், गर्भीभूतं-கர்பமாக ஆகி, विवर्धमानं-வளர்கிறதாய், नवमे दशमे वा मासि-9-வது அல்லது 10-வது மாதத்தில், सञ्जायते-பிறக்கிறது.

நிர்குணமான ப்ரஹ்மம் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குண வடிவான மாயையுடன் சேருகிறது. இப்பொழுது ஸூக்ஷ்மமாயிருந்தது. தன் ஸங்கல்பத்தினுல் ஸிருஷ்டி செய்ய ஆரம்பித்ததும் சப்தம் என்னும் ஒரு குணமுள்ள ஆகாசமாக ப்ரஹ்மம் ஆகிவிட்டது. சப்த குணம் ஏற்பட்டதால் முந்தியதைவிட இது ஸ்தூலம். பிறகு சப்தம், ஸ்பர்சம் என்ற இரண்டு குணங்களுள்ள வாயு; சப்தம், ஸ்பர்சம், ரூபம் என்று மூன்று குணங்களுள்ள தேஜஸ்; சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம என்ற நான்கு குணங்களுள்ள ஜலம்; சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்று ஐந்து குணங்கள் கொண்ட பிருதிவி என்ற முறையில் ஸிருஷ்டி ஏற்படுகிறது. இங்கு ப்ரஹ்மமே எல்லாமாகவும் ஆவதால் ஆகாசமாக ஆன ப்ரஹ்மம் வாயுவுக்குக் காரணம். வாயுவாக ஆன ப்ரஹ்மம் தேஜஸ்ஸுக்குக் காரணம் என்ற முறையில் க்ரமமாக ஸிருஷ்டி ஏற்பட்டாலும் எல்லாவற்றிற்கும் ப்ரஹ்மமே காரணமாகிறது குணங்கள் அதிகமாகச் சேரும்பொழுது மேலும் மேலும் ஸ்தூலமாக ஆகின்றன. ஐந்து குணங்கள் கொண்ட பிருதிவீ மிக ஸ்தூலமாக ஆகிறது. ஆனுலும் இவைகளுக்கு ஸூக்ஷ்ம பூதங்கள் என்று பெயர். இவை பஞ்சீகரண முறையால் ஒன்றுடன் ஒன்று கலந்ததும் எல்லாவற்றிலும் எல்லா பூதங்களின் அம்சமும் சேர்ந்து விடுகிறது. பிறகு உணவு வகைகள் ஏற்பட்டு அவைகளிலிருந்து கர்ப்பத்தில் இந்த சரீரம் உண்டாகி அந்த அன்னத்தினுலேயே வளர்ந்து வெளிவருகிறது. (20)

(அ) இவ்வாறு சரீரம் உண்டாவதைக் கூறிவிட்டு, ஜாதி, வம்சம், ஸம்ஸ்காரம் இவை சரீரத்தைச் சேர்ந்தவை என்பதைக் காட்டுகிறார் :—

तज्जातं लब्धनामाकृतिकं जातकर्मादिभिः मन्त्रसंस्कृतं पुनः उपनयनसंस्कारयोगेन ब्रह्मचारिसंज्ञं भवति। तदेव शरीरं पत्नीयोगसंस्कारयोगेन गृहस्थसंज्ञं भवति। तदेव वनस्थसंस्कारेण तापससंज्ञं भवति। तदेव क्रियानिवृत्तिनिमित्तसंस्कारेण परिव्राट्संज्ञं भवति। इत्येवं त्वत्तो भिन्नं भिन्नजात्यन्वयसंस्कारं शरीरम् ॥ २१ ॥

**तत्**-அந்த சரீரம், **जातं**-பிறந்து, **लब्धनामाकृतिकं**-பெயரும் உருவமும் அடைந்து, **जातकर्मादिभिः**-ஜாதகர்மா முதலிய கர்மாக்களால், **मन्त्रसंस्कृतं**-மந்திரபூர்வமாக ஸம்ஸ்காரத்தை யடைந்து, **पुनः**-மறுபடியும், **उपनयनसंस्कारयोगेन**-உபநயனம் என்னும் ஸம்ஸ்காரத்தைப்பெற்று, **ब्रह्मचारिसंज्ञं भवति**-'பிரஹ்மசாரி' என்ற பெயரை உடையதாக ஆகிறது. **तदेव शरीरं**-அதே சரீரம், **पत्नीयोगसंस्कारयोगेन**-விவாஹம் என்ற ஸம்ஸ்காரத்தின் சேர்க்கையால், **गृहस्थसंज्ञं भवति**-கிருஹஸ்தன் என்ற பெயரை அடைகிறது. **तदेव**-அதே சரீரம், **वनस्थसंस्कारेण**-வானப்ரஸ்தனின் ஸம்ஸ்காரத்தால், **तापससंज्ञं भवति**-தாபஸன் என்ற பெயருடையதாக ஆகிறது. **तदेव**-அதே, **क्रियानिवृत्तिनिमित्तसंस्कारेण**-எல்லாக் கர்மாக்களையும் விடுவதன் மூலம் ஏற்பட்ட ஸந்யாஸம் என்ற ஸம்ஸ்காரத்தால், **परिव्राट्संज्ञं भवति**-பரிவ்ராட் என்று பெயருள்ளதாக ஆகிறது. **इति**-என்று, **एवं**-இவ்வாறு, **शरीरं**-சரீரமானது **त्वत्तः**-உன்னைக்காட்டிலும், **भिन्नं**-வேறானது, **भिन्नजात्यन्वयसंस्कारं**-வேறான ஜாதி, வம்சம் ஸம்ஸ்காரம் இவைகளுடன் கூடியது.

சரீரம் பிறந்த பிறகு முறையே ஜாதகர்மா, நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம் என்னும் ஸம்ஸ்காரங்களைச் செய்து பின் உபநயனம் செய்விக்கிறார்கள். அப்பொழுதுதான் ப்ரஹ்மசாரி என்ற பெயரை அடைகிறான்.

பிறகு விவாஹம் ஆனதும் கிருஹஸ்தன் என்ற பெயரையும் காட்டிற்குச் சென்றபின் வானப்ரஸ்தன் என்ற பெயரையும் அடைகிறான். கடைசியில் எல்லாக் கர்மாக்களையும் விடுவதன் மூலம் ஸந்யாஸி என்ற பெயரையும் அடைகிறான். ஒருவனுடைய ஜாதியையும் வம்சத்தையும் அவன் தந்தையைக்கொண்டுதான் தீர்மானிக்கிறோம். ஆகையால் தந்தையிடமிருந்து உண்டான ஸ்தூல சரீரத்திற்குத்தான் ஜாதியும் வம்சமும். ஸம்ஸ்காரமும் அதற்குத்தான். ஆகையால் ஸ்தூல சரீரம் ஆத்மாவல்ல. (21)

(அ) இவ்வாறு ஸ்தூல சரீரத்தைப்பற்றிக் கூறி விட்டு இனி ஸூக்ஷ்ம சரீரத்தைப்பற்றிக் கூறுகிறார்:—

मनश्च इन्द्रियाणि च नामरूपात्मकान्येव 'अन्नमयं हि सोम्य मनः' इत्यादिश्रुतिभ्यः ॥ २२ ॥

**अन्नमयं हि सोम्य मनः**–அப்பா! மனம் அன்னமயம், **इत्यादिश्रुतिभ्यः**–இது முதலான சுருதிகளால், **मनश्च**–மனமும், **इन्द्रियाणि च**–இந்திரியங்களும், **नामरूपात्मकान्येव**–பௌதிகங்கள்தான்.

காது, த்வக், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்து ஞானேந்திரியங்களும் முறையே ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம் பிருதிவி என்னும் ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களின் ஸத்வாம்சத்திலிருந்து உண்டானவை. ஐந்தின் ஸத்வாம்சங்களும் சேர்ந்து அந்தக்கரணம் ஏற்பட்டது. ஐந்து பூதங்களின் ராஜஸ அம்சங்களிலிருந்து முறையே வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்கள் உண்டாயின. ஐந்தின் ராஜஸ அம்சங்களும் சேர்ந்து ஏற்பட்டவை பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்னும் ஐந்து பிராணன்கள். இவைகள் அடங்கியதுதான் ஸூக்ஷ்ம சரீரம். ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து உண்டானதால் தான் இவைகளுக்கு ஸூக்ஷ்ம சரீரம் என்று பெயர். இவ்வாறு பௌதிகமானதால் ஸூக்ஷ்ம சரீரமும் ஆத்மாவல்ல. மேலும் பூதங்களாலேயே இது வளர்ச்சியடைகிறது. அன்னத்தின் ஸாரம் மனதை

அடைவதாகவும், ஜலத்தின் ஸாரம் பிராணனை அடைவதாகவும், தேஜஸ்ஸின் ஸாரம் வாக்கை அடைவதாகவும் சாந்தோக்யம் ஆறுவது அத்யாயத்தில் சுவேதகேதுவுக்கு ஆருணி உபதேசிக்கிறார். (22)

(அ) சரீரம் ஜாதி - வம்ச - ஸம்ஸ்காரங்களுடன் கூடியது என்பதைக் கூறிவிட்டு ஆத்மாவுக்கு அவைகள் இல்லை என்பதைக் கூறுகிறார் :—

कथं चाहं भिन्नजात्यन्वयसंस्कारवर्जितः इत्येतत् शृणु— योऽसौ नामरूपयोर्व्याकर्ता नामरूपधर्मविलक्षणः स एव नामरूपे व्याकुर्वन् सृष्ट्वा इदं शरीरं स्वयं संस्कारधर्मवर्जितो नामरूपे इह प्रविष्टः अन्यैरदृष्टः स्वयं पश्यन् तथा अश्रुतः शृण्वन् अमतो मन्वानः अविज्ञातो विजानन् 'सर्वाणि रूपाणि विचित्य धीरो नामानि कृत्वाऽभिवदन्यदास्ते' इति। अस्मिन्नर्थे श्रुतयः सहस्रशः [1] 'तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्' 'अन्तः प्रविष्टः शास्ता जनानाम्' [2] 'स एष इह प्रविष्टः' [3] 'एष त आत्मा' [4] 'स एतमेव सीमानं विदार्य एतया द्वारा प्रापद्यत' [5] 'एष सर्वेषु भूतेषु गूढोत्मा' [6] 'सेयं देवतैक्षत हन्ताहमिमास्तिस्रो देवताः' इत्याद्याः श्रुतयः २३ ॥

अहं–நான், कथं–எப்படி, भिन्नजात्यन्वयसंस्कारवर्जितः–வெவ்வேறான ஜாதி, வம்சம், ஸம்ஸ்காரங்கள் அற்றவன், इत्येतत्–என்ற இந்த விஷயத்தை, शृणु–கேள் (சொல்லுகிறேன்), नामरूपयोर्व्याकर्ता–நாமரூபங்களை வெளிப்படுத்துகிறவரும், नामरूपधर्मविलक्षणः–நாமரூபங்களின் தர்மங்கள் அற்றவருமான, योऽसौ–எந்த அந்தப் பரமாத்மாவோ, स एव–அவரே, नामरूपे–நாமரூபங்களை, व्याकुर्वन्–ஸ்பஷ்டமாக்குகிறவராக, इदं शरीरं–இந்த சரீரத்தை, सृष्ट्वा–ஸிருஷ்டித்து, स्वयं–தான், संस्कारवर्जितः–(சரீரத்தின்)

1. தைத்திரீயம் 2-6 2. பிருஹ 1-4-7 3. பிரு 3-7-3 4. ஐதரே 3-12 5. கட 3-12 6. சாந்தோக்யம் 6-3.

ஸம்ஸ்காரம், தர்மம் இவைகளற்றவராகவே, **इह**-இங்கு, **नामरूपे**-நாமரூபாத்மகமான சரீரத்தில், **प्रविष्टः**-நுழைந்த வராய், **अन्यैः**-பிறர்களால், **अदृष्टः**-பார்க்கப்படாதவராகவே **स्वयं**-தான், **पश्यन्**-பார்த்துக்கொண்டும், **तथा**-அவ்விதமே, **अश्रुतः**-கேட்கப்படாதவராய், **शृण्वन्**-கேட்டுக்கொண்டும், **अमतः**-நினைக்கப்படாதவராய், **मन्वानः**-நினைத்துக்கொண்டும், **अविज्ञातः**-அறியப்படாதவராய், **विजानन्**-அறிந்துகொண்டும், **धीरः**-எல்லாம் அறிந்தவராக, **सर्वाणि रूपाणि**-எல்லா உருவங் களையும், **विचित्य**-ஸிருஷ்டித்து (அவைகளுக்கு), **नामानि**-பெயர்களையும், **कृत्वा**-இட்டு, **अभिवदन्**-வியவஹாரம் செய்து கொண்டு, **यदास्ते**-இருக்கிறார். **इति**-என்ற, **अस्मिन्नर्थे**-இந்த விஷயத்தில், **सहस्रशः**-ஆயிரக்கணக்கான, **श्रुतयः**-சுருதிகள் (இருக்கின்றன.)

எல்லாவற்றிற்கும் (காரணமான ஆத்மா), **तत्**-அந்த ஜகத்தை, **सृष्ट्वा**-ஸிருஷ்டித்து, **तदेव**-அந்த ஜகத்திலேயே **अनुप्राविशत्**-உள்ளே புகுந்தது. **जनानां**-எல்லா ஜனங் களையும், **शास्ता**-அடக்கி ஆள்பவர். **अन्तः प्रविष्टः**-உள்ளே புகுந்து இருக்கிறார். **स एषः**-அந்த இந்த காரணமான ஆத்மா **इह**-இங்கு (எல்லா சரீரங்களிலும்), **प्रविष्टः**-நுழைந் திருக்கிறார். **एषः**-இவர், **ते**-உன்னுடைய, **आत्मा**-ஸ்வரூபம் **सः**-அந்த பரமாத்மா, **एतमेव सीमानं**-இந்த எல்லையையே, (சிரஸில் கேசங்கள் பிரியும் இடத்தை), **विदार्य**-பிளந்து, **एतया द्वारा**-இந்த வழியாக, **प्रापद्यत**-சரீரத்திற்குள் புகுந்தார். **एषः**-இந்த பரமபுருஷன், **सर्वेषु भूतेषु**-எல்லா பிராணி களிடமும், **गूढोत्मा**-மறைந்திருக்கும் ஆத்மா, **सा**-அந்த, **इयं**-இந்த, **देवता**-'ஸத்' என்ற காரணவஸ்து, **हन्त**-இப்பொழுது, **अहं**-நான், **इमाः**-இந்த, **तिस्रो देवताः**-தேஜஸ், ஜலம், பிருதிவி என்ற மூன்று தேவதைகளிலும் இந்த ஜீவஸ்வரூபமாக உள்ளே புகுந்து உலகை ஸிருஷ்டிக் கிறேன் என்று ஸங்கல்பம் செய்தது.

ஆத்மாவுக்கு ஏன் ஜாதி, ஸம்ஸ்காரம் முதலியவை இல்லை என்பது சிஷ்யனின் கேள்வி. இதற்கு ஸமாதான மாக பல சுருதிகளைக் காட்டுகிறார். மேலே காட்டிய உபநிஷத் வாக்யங்களெல்லாம் பிரஹ்மமும் ஜீவனும் ஒன்று என்பதை ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றன. அதாவது ஸச்சிதானந்தமான பிரஹ்மமேதான் சிருஷ்டித்த பிரபஞ்சத் திற்குள் புகுந்து, சரீரத்திற்குள்ளும் புகுந்து, ஜீவன் என்ற பெயருடன் எல்லா வியவஹாரமும் செய்கிறது. இந்திரியங் களுக்கும் மனதிற்கும் சக்தியைக் கொடுப்பது ஆத்மா தான். ஆதலால் ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை இந்திரியங்களாலும் மனதாலும் அறியமுடியாது. உண்மை யில் பார்ப்பது கேட்பது எல்லாம் ஆத்மாதான். ஆகாசம் போல் அஸங்கமான ப்ரஹ்மத்திற்கு பிரபஞ்ச ஸம்பந்தமோ அதன் தர்மங்களோ ஒன்றும் கிடையாது என்பது முன்னாலேயே கூறப்பட்டிருக்கிறது. அந்த பிரஹ்மமே சரீரத்திற்குள் ஜீவஸ்வரூபமாக விளங்குவதால் ஜீவனுக்கும் ஜாதி ஸம்ஸ்காரம் முதலான தர்மங்கள் கிடையாது. (23)

स्मृतयोऽपि — ‘आत्मैव देवताः सर्वाः’ [1] ‘नवद्वारे पुरे देही’ [2] ‘क्षेत्रज्ञं चापि मां विद्धि’ [3] ‘समः सर्वेषु भूतेषु’ [4] ‘उपद्रष्टाऽनुमन्ता च’ [5] ‘उत्तमः पुरुषस्त्वन्यः’ [6] ‘अशरीरं शरीरेषु’ इत्याद्याः । तस्मात् जात्यन्वयसंस्कारवर्जितस्त्वमिति सिद्धम् ॥ २४ ॥

**सर्वाः देवताः**-எல்லா தேவதைகளும், **आत्मैव**-ஆத்மா தான். **नवद्वारे**-ஒன்பது துவாரங்களுள்ள, **पुरे** - பட்டணம் போன்ற சரீரத்தில், **देही**-ஆத்மா (ஒன்றும் செய்யாமலும் செய்விக்காமலும் ஸுகமாக இருக்கிறான்.) **क्षेत्रज्ञं चापि**- ஜீவனையும், **मां**-என்ஸ்வரூபமாக, **विद्धि**-அறிந்துகொள். **सर्वेषु भूतेषु**-எல்லா பிராணிகளிடமும், **समः**-ஸமமாக இருப்பவர். **उपद्रष्टा**-சரீரத்தில் நடக்கும் காரியங்களில் தான் ஸம்பந்தப் படாமல் அருகிலிருந்து பார்ப்பவர், **अनुमन्ता**-அதன்

(1) கீதை 5-13 (2) 13-3 (3) 13-28 (4) 13-23 (5) 15-17 (6) கடோபநிஷத் 2-21

காரியங்களைத்தடுக்காமல் ஸாக்ஷியாயிருந்து கவனிப்பவர் **उत्तमः पुरुषः**-உத்தம புருஷனை பரமாத்மா, **अन्यः**-பிரபஞ்சம் மாயை இவ்விரண்டைக் காட்டிலும் வேறுபட்டவர். **शरीरेषु**-சரீரங்களில் (இருந்தபோதிலும்), **अशरीरं**-சரீர மற்றவர், **इत्याद्याः**-இது முதலான, **स्मृतयोपि**-ஸ்மிருதிகளும் **तस्मात्**-ஆகையினால், **त्वं**-நீ, **जात्यन्वयसंस्कारवर्जितः**-ஜாதி, வம்சம், ஸம்ஸ்காரம் இல்லாதவன், **इति**-என்பது, **सिद्धम्**-தீர்மானம்.

மேலே கண்ட ஸ்மிருதிகளில், சரீரத்தில் இருந்த போதிலும் ஜீவன் பரமாத்மா தான் என்று தெளிவாகக்கூறப் பட்டிருக்கிறது. ஆகவே தேஹத்தைக் காட்டிலும் வேருக வும் தேஹ தர்மங்கள் அற்றவராகவும் அஸங்கராகவும் உள்ள ஆத்மாவுக்கு ஜாதியோ, வம்சமோ ஸம்ஸ்காரமோ ஒன்றும் கிடையாது. (24)

स यदि ब्रूयात् अन्य एवाहमज्ञः सुखी दुःखी बद्धः संसारी, अन्योऽसौ मद्विलक्षणः असंसारी देवः, तमहं बल्युपहारनमस्कारादिभिः वर्णाश्रमकर्मभिश्च आराध्य संसारसागरादुत्तितीर्षुरस्मि। कथमहं स एवेति ॥ २५ ॥

आचार्यो ब्रूयात् — नैवं सोम्य प्रतिपत्तुमर्हसि, प्रतिषिद्धत्वात् भेदप्रतिपत्तेः। कथं प्रतिषिद्धा भेदप्रतिपत्तिरित्यत आह — '[1] अन्योऽसावन्योऽहमस्मीति न स वेद' '[2] 'ब्रह्म तं परादात् योऽन्यत्रात्मनो ब्रह्म वेद' '[3] मृत्योस्स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति' इत्येवमाद्या ॥

एता एव श्रुतयो भेदप्रतिपत्तेः संसारगमनं दर्शयन्ति ॥ २७ ॥

**अज्ञः**-அறியாதவனும், **सुखी**-ஸுகமுள்ளவனும், **दुःखी**-துக்கமுள்ளவனும், **बद्धः**-கட்டுப்பட்டவனும், **संसारी**-ஸம்ஸார தர்மங்கள் உள்ளவனுமான, **अहं**-நான், **अन्य एव**-(ஈசுவரனைக் காட்டிலும்) வேருனவன் தான். **मद्विलक्षणः**-என்னைக்

1. பிரு 1-4-10 2. பிரு 2-4-6 3. கட 4-10

காட்டிலும் வேறுபட்ட தன்மை உள்ள, असंसारी-ஸம்ஸார தர்மங்கள் அற்ற, असौ देवः-அந்த ஈசுவரன், अन्यः-(என்னைக் காட்டிலும்) வேறானவர். अहं-நான், बल्युपहारनमस्कारादिभिः பலி ஸமர்ப்பணம், நமஸ்காரம் முதலியவைகளாலும், वर्णाश्रमकर्मभिश्च-வர்ணாச்ரம தர்மங்களாலும், तं-அவரை, आराध्य-ஆராதித்து, संसारसागरात्-ஸம்ஸாரக்கடலிலிருந்து, उत्तितीर्षुः-கரையேற விருப்பமுள்ளவனாக, अस्मि-இருக்கிறேன். कथं-எப்படி, अहं-நான், स एव-அவராகவே ஆவேன், इति-என்று, सः-அந்த சிஷ்யன், यदि ब्रूयात्-சொல்வானேயாகில்,

आचार्यो ब्रूयात्-ஆசார்யர் பதில் சொல்லவேண்டும். सोम्य-அப்பா! भेदप्रतिपत्तिः-வெவ்வேறாக அறிந்துகொள்வது, प्रतिषिद्धत्वात्-தடுக்கப்பட்டிருப்பதால், एवं-இவ்வாறு, प्रतिपत्तुं-தெரிந்துகொள்ள, नार्हसि-நீ தக்கவனில்லை. कथं-எவ்வாறு, भेदप्रतिपत्तिः-வெவ்வேறாக அறிந்துகொள்வது, प्रतिषिद्धा-தடுக்கப்பட்டுள்ளது, इति-எனில், अतः-அதற்காக, आह-சொல்கிறார். असौ-அவர், अन्यः-வேறு, अहं-நான், अन्यः-வேறாக, अस्मि-இருக்கிறேன், इति-என்று, (எவன் அறிகிறானோ), सः-அவன், न वेद-சரியாகத்தெரிந்தவனல்ல. यः-எவன், आत्मनः अन्यत्र-தன்னைக் காட்டிலும் வேறாக, ब्रह्म-பிராஹ்மண ஜாதியை, वेद-அறிகிறானோ, तं-அவனை, ब्रह्म-பிராஹ்மண ஜாதி, परादात्-நிராகரித்துவிடும். यः-எவன், इह-இந்த ஆத்மவஸ்துவில், नानेव-வேற்றுமை இருப்பது போல், पश्यति-பார்க்கிறானோ, सः-அவன், मृत्योः-மரணத்திலிருந்து, मृत्युं-(மறுபடியும்) மரணத்தை, आप्नोति-அடைகிறான்.

एताः-இந்த, श्रुतय एव-சுருதிகளே, भेदप्रतिपत्तेः-பேதஞானத்தால், संसारगमनं-ஸம்ஸாரத்தில் சுழல்வதை दर्शयन्ति-காண்பிக்கின்றன.

ஆசார்யர் பல சுருதிகளாலும் ஸ்மிருதிகளாலும் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று என்பதைக்காட்டி ஜாதி முதலியவை உனக்குக் கிடையாது என்று உபதேசித்தபோதிலும் தன்

அனுபவத்திற்கு ஒத்து வராததால் சிஷ்யன் அதை ஆக்ஷேபிக்கிறுன். அதாவது "நான் ஒன்றும் அறியாதவன்; அவர் எல்லாம் அறிந்தவர். நான் ஸுக துக்கங்களை மாறி மாறி அனுபவிக்கிறவன்; அவர் எப்பொழுதும் ஆனந்தமாக இருப்பவர். நான் கட்டுப்பட்டு ஸம்ஸாரத்தில் உழன்று கொண்டிருப்பவன்; அவர் நித்யமுக்தர். இவ்வளவு வேற்றுமைகள் எங்கள் இருவருக்கும் இருக்கும் பொழுது நான் எப்படி ஈசுவரன் ஆகமுடியும்? நான்தான் ஈசுவரன் என்று எண்ணுவதும் தவறு. அதனுல் அவருடைய கோபத்திற்கு ஆளாகும்படி நேரிடும். ஆதலால் அவர் கட்டளையின்படி ஸ்வதர்மத்தை அனுஷ்டித்தும் அவரைப் பூஜித்தும் அவருடைய கிருபையால்தான் ஸம்ஸாரக் கடலைத் தாண்டவேண்டும்."

இதற்கு ஆசார்யன் பதில் கூறுகிறுர். "இவ்விதம் நினையாதே. தன்னைக் காட்டிலும் ஈசுவரனை வேருக எண்ணுவதுதான் தவறு என்று உபநிஷத்துக்கள் உபதேசிக்கின்றன. இதுமட்டும் அல்ல. வேருக நினைப்பவன் மிகுந்த துன்பத்தையனுபவிப்பான். ஸம்ஸாரக் கடலிலேயே உழன்றுகொண்டிருப்பான். ஒருநாளும் அவன் மோக்ஷத்தை அடையமாட்டான் என்றும் அதே உபநிஷத்துக்கள் கூறுகின்றன. பிருஹதாரண்யக உபநிஷத்தில் "அவர் வேறு நான் வேறு என்பது உண்மை அறிவு அல்ல. இவ்விதம் நினைப்பவன் தேவர்களுக்குப் பசுவாகவே (அடிமையாகவே) எப்பொழுதும் இருக்கிறுன்" என்று ஓரிடத்திலும், "எந்த எந்தப் பொருளைத் தன்னைக்காட்டிலும் வேருக எண்ணுகிருனே அந்த அந்தப் பொருளே இவனைப் பயமுறுத்தித் துன்பத்தைக் கொடுக்கிறது" என்று மற்றேரிடத்திலும் "சிறிதளவு வேற்றுமை இருப்பது போல எண்ணினுலும்கூட அவன் பிறப்பு, இறப்பு என்ற தளையிலிருந்து விடுபடமாட்டான்" என்று கடோபநிஷத்திலும் கூறப்பட்டிருக்கிறது.

நம் அனுபவத்திற்கு விருத்தமான விஷயத்தை சுருதி கூறினுலும் கூட எப்படி ஏற்றுக்கொள்ளமுடியும் என்று

கேட்கலாம். அதற்குப்பதில் இதுவே. இரண்டு பொருள்கள் வேவ்வேறு என்று தீர்மானமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் அந்த இரண்டு பொருள்களையும் நேரில் பார்த்திருக்கவேண்டும். இங்கு ஈசுவரனை நேரில் பார்க்கவில்லை. நமக்குத் தெரியாத ஈசுவரனும் நாமும் வேறுதான் என்று எப்படித் தீர்மானிக்கமுடியும்? ஈசுவரனிடம் இல்லாத அக்ஞானம் ஸுகதுக்கங்கள், பந்தம் இவை எல்லாம் நம்மிடமிருப்பதாக எண்ணுகிறோம். இதைக்கொண்டு, தான் வேறு ஈசுவரன் வேறு என்று சிஷ்யன் கூறுகிறான். உண்மையில் விசாரித்துப் பார்த்தோமானால் இவைகள் எல்லாம் மனதைச் சேர்ந்தவைகளே ஒழிய ஆத்மாவுக்கு ஒன்றும் கிடையாது. ஆகையால் அநுபவ விரோதமில்லாததால் உபநிஷத்துக்கள் கூறியுள்ளபடி ஆத்மாவும் ஈசுவரனும் ஒன்றே. (25-27)

(அ) பேதஞானத்தை நிந்தித்துவிட்டு அபேத ஞானத்தை உயர்வாகக் கூறுகிறார்:—

अभेदप्रतिपत्तेश्च मोक्षं दर्शयन्ति सहस्रशः। [1]'स आत्मा तत्त्वमसि' इति परमात्मभावं विधाय [2]'आचार्यवान् पुरुषो वेद' इत्युक्त्वा 'तस्य तावदेव चिरम्' इति मोक्षं दर्शयन्ति अभेदविज्ञानादेव। सत्याभिसन्धस्य अतस्करस्येव दाहाद्यभावदृष्टान्तेन संसारभावं दर्शयन्ति। भेददर्शनादसत्याभिसन्धस्य संसारगमनं दर्शयन्ति तस्करस्येव दाहादि-दृष्टान्तेन ॥

[3]'त इह व्याघ्रो वा' इत्यादिना च। अभेददर्शनात् [4]'स स्वराड् भवति' इत्युक्त्वा तद्विपरीतेन भेददर्शनेन संसारगमनं दर्शयन्ति 'अथ येऽन्यथाऽतो विदुरन्यराजनास्ते क्षय्यलोका भवन्ति' इति प्रतिशाखम्। तस्मात् मृषैवैवमवादीः ब्राह्मणपुत्रोऽदोऽन्वयः संसारी परमात्मविलक्षण इति ॥ २९ ॥

**सहस्रशः**-ஆயிரக்கணக்காக (சுருதிகள்), **अभेदप्रतिपत्तेश्च**-ஐக்ய ஞானத்திலிருந்து, **मोक्षं**-முக்தி ஏற்படுவதை, **दर्शयन्ति**-

1. சா. 6-13. 2. சா. 6-14. 3. சா. 6-9. 4. சா. 7-25.

காண்பிக்கின்றன. 'स आत्मा तत्त्वमसि'-அவர் ஆத்மா, நீ அவராக இருக்கிறாய், इति-என்று, परमात्मभावं-(ஜீவன்) பரமாத்மாவாக இருப்பதை, विधाय-உபதேசித்து, 'आचार्यवान् पुरुषो वेद'-ஆசார்ய உபதேசம்பெற்ற புருஷன் அறிந்து கொள்கிறான். इति उक्त्वा-என்று சொல்லி, 'तस्य तावदेव चिरम्'-அவனுக்கு அவ்வளவு காலம்தான் தாமதம், इति-என்று, मोक्षं-மோக்ஷத்தை, दर्शयन्ति-காண்பிக்கின்றன. सत्याभिसन्धस्य-உண்மையைக் கைக்கொண்ட, अतस्करस्येव-திருடாதவனுக்குப்போல. दाहाद्यभावदृष्टान्तेन-சூடு முதலியவை இல்லை என்ற திருஷ்டாந்தத்தால், अभेद-विज्ञानादेव-ஜீவ ப்ரஹ்மைக்ய ஞானத்தினாலேயே, संसाराभावं-ஸம்ஸாரத் துன்பம் இல்லை என்பதை, दर्शयन्ति-காண்பிக்கின்றன. असत्याभिसंधस्य-பொய்யைக் கைக்கொண்ட, तस्करस्येव-திருடனுக்குப் போல், दाहादिदृष्टान्तेन-சூடு முதலானவை ஏற்படும் என்ற திருஷ்டாந்தத்தால், भेददर्शनात्-ஜீவ ப்ரஹ்மபேத ஞானத்தால், संसारगमनं-ஸம்ஸாரத்தில் உழலுவதை, दर्शयन्ति-காண்பிக்கின்றன.

ते इह व्याघ्रो वा इत्यादिना च-இது முதலான சுருதியாலும் அபேத ஞானத்தால் மோக்ஷம் என்று கிடைக்கிறது. अभेददर्शनात्-அபேத ஞானத்தால், सः-அவன், स्वराट्-தான் ஒருவனே பிரகாசிப்பவனாக, भवति-ஆகிறான், इति उक्त्वा-என்று சொல்லி, 'अथ-அவ்விதமில்லாமல், ये-எவர்கள், अतः-கீழே சொல்லியதைக் காட்டிலும், अन्यथा-வேறுவிதமாக, विदुः-அறிகிறார்களோ, ते-அவர்கள், अन्य-राजानः-வேறு ஒருவரை யஜமானராகக்கொண்டு, क्षय्य-लोकाः-அழியும் உலகத்தை அடைபவர்களாக, भवन्ति-ஆகிறார்கள். इति-என்று, प्रतिशाखं-ஒவ்வொரு வேத சாகையிலும், तद्विपरीतेन-அதற்கு விபரீதமாக, भेददर्शनेन-பேத ஞானத்தால், संसारगमनं-ஸம்ஸாரத்தை அடைவதை, दर्शयन्ति-காண்பிக்கின்றன. तस्मात्-ஆகையால், ब्राह्मणपुत्रः-பிராஹ்மணனுடைய பிள்ளை, अदोन्वयः-இந்த வம்சத்தில்

பிறந்தவன், संसारी-ஸம்ஸாரி, परमात्मविलक्षणः-பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவன். इति एव-என்று இவ்விதம், मृषैव-பொய்யாகத்தான், अवादीः-சொன்னாய்.

அபேதம் அதாவது ஜீவனும் ஈசுவரனும் ஒன்று என்பது உண்மையானது. பேதம், வெவ்வேறு என்பது பொய் உண்மையான அபேதத்தை அறிந்தவர்கள் மோக்ஷம் அடைகின்றனர். வேற்றுமை காண்பவர்கள் பிறப்பு இறப்பு என்னும் ஸம்ஸாரத்தில் உழலுகின்றனர். இவ்விஷயம் பல சுருதிகளில் காட்டப்படுகிறது. சாந்தோக்யம் 6 வது அத்யாயத்தில் "நீயே ப்ரஹ்மம்" என்று தநயனுக்குத் தந்தை உபதேசித்துவிட்டு, ஆசார்யர் மூலம் இந்த ஞானம் பெற்றவன் பிராரப்தமுடிவில் மோக்ஷம் அடைகிறான், என்றும் இது இல்லாதவன் துன்புறுகிறான் என்றும் திருஷ்டாந்தம் மூலம் விளக்குகிறார். உண்மையில் திருடாமல் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டவனாது "நான் திருடவில்லை" என்று கூறும் வார்த்தை உண்மையானதால், அவன் விடுதலையடைந்து க்ஷேமம் அடைகிறான். உண்மையில் திருடினவன் "நான் திருடவில்லை" என்று கூறுவது பொய். அவன் துன்பம் அடைகிறான். இது போலவேதான் என்று கூறப்பட்டிருக்கிறது.

அங்கேயே மற்றோரிடத்தில் ஒவ்வொரு பிராணியும் ஸுஷுப்தியில் தன்னை மறந்து பரமாத்ம ஸ்வரூபத்தில் கலந்தபோதிலும் அபேத ஞானம் ஏற்படாததால் அந்தந்த ஜாதியாகவே எழுந்திருக்கின்றனர் என்று காணப்படுகிறது.

7-வது அத்யாயத்தில் பூமவித்யையின் முடிவில் ஆத்மஞானி முக்தி அடைவதாகக் கூறி ப்ரஹ்மம் வேறு தான் வேறு என்ற பேதஞானமுள்ளவன் சாச்வதமான ஆனந்தம் அடையமாட்டான் என்று கூறப்பட்டிருக்கிறது. இந்த சுருதிகளால் ஜீவன் பிரஹ்மமே என்று தெரிகிறது. இவ்விதம் இருக்க சிஷ்யன் தன்னை பிராஹ்மணன், ஸம்ஸாரி, ஈசுவரன் அல்ல" எனக்கூறுவது பொய்தான் என்று ஆசார்யர் சொன்னார். (29)

(அ) ஸ்வகர்மானுஷ்டத்தாலும், பூஜைகளாலும் ஈசுவரனை ஆராதிக்கவேண்டியது என் கடமை என்று சிஷ்யன் கூறியதற்குப் பதில் கூறுகிறார் :—

तस्मात् प्रतिषिद्धत्वात् भेददर्शनस्य, भेदविषयत्वाच्च कर्मोपादानस्य, कर्मसाधनत्वाच्च यज्ञोपवीतादेः, कर्मसाधनापादानस्य परमात्माभेदप्रतिपत्त्या प्रतिषेधः कृतो वेदितव्यः, कर्मणां तत्साधनानां च यज्ञोपवीतादीनां परमात्माभेदप्रतिपत्तिविरुद्धत्वात् । संसारिणो हि कर्माणि विधीयन्ते तत्साधनानि च यज्ञोपवीतादीनि, न परमात्मनः अभेददर्शिनः । भेददर्शनमात्रेण च ततोऽन्यत्वम् ॥ ३० ॥

**तस्मात्**–ஆகையால், **भेददर्शनस्य**–வேற்றுமைகாண்பது, **प्रतिषिद्धत्वात्** —விலக்கப்பட்டிருப்பதாலும், **कर्मोपादानस्य**— கர்மாவை ஏற்றுக்கொள்வது, **भेदविषयत्वात्** –பேதத்தை ஒட்டி ஏற்படுவதாலும், **यज्ञोपवीतादेः**–பூணூல் முதலியவை, **कर्मसाधनत्वाच्च**–கர்மாவிற்கு ஸாதனமாக இருப்பதாலும், **परमात्माभेदप्रतिपत्त्या**—பரமாத்மாவுடன் ஐக்கியஞானத்தால் **कर्मसाधनोपादानस्य**–கர்மா, அதன் ஸாதனம் இவைகளை ஏற்றுக்கொள்வதற்கும், **प्रतिषेधः**–விலக்கு, **कृतः**ஏற்பட்டதாக, **वेदितव्यः**– அறிந்துகொள்ளவேண்டும். **कर्मणां**–கர்மாக்களும், **तत्साधनानां**–அதற்கு ஸாதனமான, **यज्ञोपवीतादीनां च** யக்ஞோபவீதம் முதலானவைகளும், **परमात्माभेदप्रतिपत्तिविरुद्धत्वात्** –பரமாத்மாபேத ஞானத்திற்கு நேர் எதிரிடையாயிருப்பதால், **संसारिणो हि**–ஸம்ஸாரிகளுக்கல்லவா, **कर्माणि**– கர்மாக்களும், **तत्साधनानि**– அதற்கு ஸாதனமான, **यज्ञोपवीतादीनि च**–யக்ஞோபவீதம் முதலியவைகளும், **विधीयन्ते**—விதிக்கப்படுகின்றன. **अभेददर्शिनः**— அபேதம் காண்கிற, **परमात्मनः**-பரமாத்ம ஸ்வரூபமாக இருப்பவனுக்கு, **न**–இல்லை. **भेददर्शनमात्रेण**–பேதத்தைக் காண்பதால் மட்டுமே, **ततः**–அந்த பரமாத்மாவினின்றும், **अन्यत्वं**– வேற்றுமை ஏற்படுகிறது.

ஜீவன், ஈசுவரன் இரண்டும் ஒரே தத்வம். சிறிதும் வேற்றுமை கிடையாது என்று உபநிஷத் பிரமாணங்களைக் கொண்டு ஆசார்யர் உபதேசித்தார். இவ்வித ஞானம் உள்ளவனுக்கு ஒருவித கர்மாவும் கிடையாது. ஆகையால் 'நான் கர்மாக்களால் ஈசுவரனை ஆராதிக்கிறேன்' என்று நீ எண்ணுவது தவறு என்பதை விளக்கிக் காட்டுகிறார். அதாவது:—

அவனவனுக்கு ஏற்பட்ட கர்மாக்களை விடாமல் கட்டாயம் செய்யவேண்டும் என்றும், அதற்கு அங்கமான யக்ஞோபவீதம் முதலானவைகளை ஸம்பாதித்துக்கொள்ள வேண்டும் என்றும் வேதம் கட்டளையிடுகிறது. உபநிஷத்துக்களில் நேரிடையாக ஸ்வகர்மாவைச் செய்யாதே என்று உபதேசிக்கவில்லை. ஆனாலும் நன்கு விசாரித்துப் பார்த்தால் மறைமுகமாக 'ஒரு கர்மாவையும் செய்யாதே' என்று உபதேசம் செய்வதைக் காணலாம். உபநிஷத்துக்களில் ஸித்தாந்தமாக தத்வம் ஒன்று என்பதை உபதேசித்து பேதஞானத்தை நிந்தித்து அது பொய் என்பதையும் காட்டுகிறது. இந்த பேதஞானம் இருந்தால் தான் கர்மாக்களைச் செய்யமுடியும். தான் யஜமானன் தேவதை, ஹவிஸ்ஸு, அக்னி, முதலிய வேற்றுமைகளைக் கண்டுதான் யாகத்தை நிறைவேற்றமுடியும். பேதஞானம் ஐக்ய ஞானத்திற்கு விருத்தம். ஐக்ய ஞானத்தை உபநிஷத் உபதேசித்திருப்பதால் அதற்கு விருத்தமான பேத ஞானத்தை முக்ய அவலம்பமாகக்கொண்டு ஏற்படும் கர்மாக்களையும் அதன் ஸாதனங்களையும் சாஸ்திரம் விலக்கியிருப்பதாகத்தான் கொள்ளவேண்டும்.

கர்மகாண்டத்தில் நேரிடையாக கர்மாவைச்செய், என்று உபதேசித்திருப்பது ஞானிக்காக ஏற்பட்டதல்ல. அக்ஞானிக்குத்தான். எல்லோரும் உண்மையில் ப்ரஹ்ம ஸ்வரூபமாக இருந்தபோதிலும் அக்ஞானத்தால் தன்னை வேறாக எண்ணி நான் பிராஹ்மணன், பிரம்மச்சாரி, என்றெல்லாம் நினைப்பவன் தவறாமல் ஸ்வதர்மங்களைச் செய்ய வேண்டும். ஈசுவர ப்ரஸாதத்தைப் பெறவேண்டும்.

எவன் ஸத்குருவின் உபதேசத்தால் தன்னை பரமாத்ம ஸ்வரூபமாகத் தெரிந்துகொள்கிறானோ, அவனுக்குப் பேத ஞானம் இல்லாததால் கர்மாக்களோ, அதன் ஸாதனங்களோ ஒன்றும் கிடையாது. (30)

(அ) ப்ரஹ்மஞானி கர்மா செய்யவேண்டியதில்லை என்பதை வியதிரேக முகமாகக் காட்டுகிறார் :—

यदि कर्माणि कर्तव्यानि, न निविवर्तयिषितानि कर्मसाधनासंबन्धिनः कर्मनिमित्तजात्याश्रमाद्यसंबन्धिनश्च, परमात्मनश्च आत्मनैव अभेदप्रतिपत्ति नावक्ष्यत् 'स आत्मा तत्त्वमसि' इत्येवमादिभिर्निश्चितरूपैर्वाक्यैः; भेदप्रतिपत्तिनिन्दां च नाभ्यधारयत् 'एष नित्यो महिमा ब्राह्मणस्य' 'अनन्वागतं पुण्येनानन्वागतं पापेन' 'अत्र स्तेनोऽस्तेनः' इत्यादिना ॥ ३१ ॥

कर्मासंबन्धिस्वरूपत्वं कर्मनिमित्तवर्णाद्यसंबन्धरूपतां च नाभ्यधास्यत्. कर्माणि च कर्मसाधनानि च यज्ञोपवीतादीनि यदि अपरितित्याजयिषितानि। तस्मात् ससाधनं कर्म परित्यक्तव्यं मुमुक्षुणा परमात्माभेददर्शनविरोधात्। आत्मा च पर एवेति प्रतिपत्तव्यो यथाश्रुत्युक्तलक्षणः ॥ ३२ ॥

**कर्मसाधनासंबन्धिनश्च**—கர்மாக்களின் ஸாதனங்களில், பற்றுதல் இல்லாதவனுக்கும், **कर्मनिमित्तजात्याश्रमाद्यसंबन्धिनश्च** கர்மாவுக்கு நிமித்தமான ஜாதி, ஆச்ரமம் முதலியவைகளில் அபிமானமற்றவனுக்கும், **कर्माणि**—கர்மாக்கள், **कर्तव्यानि**—அவசியம் செய்யவேண்டியவைகளாகவும், **न निविवर्तयिषितानि**—விடக்கூடாதவைகளாகவும், **यदि**—இருக்குமேயானால் (உபநிஷத்தில்) '**स आत्मा तत्त्वमसि**' **इत्येवमादिभिः**—இது முதலான, **निश्चितरूपैः**—உறுதி படைத்த, **वाक्यैः**—வாக்யங்களால், **परमात्मनश्च**—ப்ரஹ்மத்திற்கு, **आत्मनैव**—ஆத்மாவோடு, **अभेदप्रतिपत्ति**—ஐக்ய ஞானத்தை,

नावक्ष्यत् –சொல்லியிருக்காது. ‘एष नित्यो महिमा ब्राह्मणस्य’– இது ப்ரஹ்மத்தின் சாஸ்வதமான ஸ்வபாவம், पुण्येन अनन्वागतं – புண்யகர்மாவோடு ஸம்பந்தமில்லாதது, पापेन अनन्वागतं–பாப கர்மாவுடன் ஸம்பந்தப்படாதது, अत्र स्तेनः अस्तेनः–இங்கு திருடன் திருடாதவனுக ஆகிருன். इत्यादिना– இது முதலான வாக்யத்தால், भेदप्रतिपत्तिनिन्दां च–பேத ஞானத்தின் நிந்தனையையும், नाभ्यदास्यत्–சொல்லி இருக்காது.

कर्माणि च–கர்மாக்களையும், कर्मसाधनानि–கர்மாக்களின் ஸாதனமான, यज्ञोपवीतादीनि च–யக்ஞோபவீதம் முதலியவை களையும், यदि अपरितित्याजयिषितानि–விட்டு விடுவதற்கு விருப்பம் இல்லாவிட்டால், कर्मसंबन्धिस्वरूपत्वं – கர்மாக் களுடன் ஸம்பந்தப்படாத ஸ்வபாவத்தையும், कर्मनिमित्त-वर्णाद्यसंबन्धरूपतां च–கர்மாவுக்குக் காரணமான வர்ணம் முதலியவற்றுடன் ஸம்பந்தப்படாத ஸ்வரூபத்தையும், नाभ्यदास्यत् – சொல்லியிருக்காது. तस्मात् – ஆகையால், मुमुक्षुणा–மோக்ஷம் அடைய விருப்பம் உள்ளவனுல், परमात्मा-भेददर्शनविरोधात्–பரமாத்மாவுடன் ஐக்யஞானத்திற்கு விரோதமாயிருப்பதால்,ससाधनं–ஸாதனங்களுடன், कर्म–கர்மாவானது, परित्यक्तव्यं–விட்டுவிடத் தகுந்தது. यथा-श्रुत्युक्तलक्षणः–ச்ருதியில் கூறப்பட்ட லக்ஷணப்படி, आत्मा च–ஆத்மாவும், पर एवेति–பரப்ரஹ்மம் தான் என்று, प्रतिपत्तव्यः–தீர்மானமாகத் தெரிந்துகொள்ளவேண்டும்.

முமுக்ஷுவானவன் கர்மாக்களையும் அதன் ஸாதனங் களையும் விட்டுவிடவேண்டும் என்பதுதான் உபநிஷத்துக் களின் தாத்பர்யம் என்பதை வியதிரேகமுகமாகக் காட்டு கிருர். உபநிஷத்துக்களில் பல இடங்களில் ஜீவன், ப்ரஹ்மம் இரண்டும் ஒரே தத்வம் என்றும், ஆத்மாவுக்கு புண்யபாப ஸம்பந்தம் கிடையாது என்றும், வியவஹாரத் தில் பல தர்மங்கள் ஆத்மாவில் தோன்றியபோதிலும் உண்மையில் அவை ஆத்மாவைச் சேர்ந்தவை அல்ல

வென்றும் ஆத்மாவின் ஸ்வபாவம் என்றும் மாறுததது என்றும் தாத்பர்யத்துடன் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஸ்வரூபத்தை அறிந்துகொள்ளும் முமுக்ஷுவுக்கு கர்மாவுக்கு நிமித்தமான ஜாதி, ஆச்ரமம் முதலியவைகளிலும், திரவ்யம் முதலியவற்றிலும் சிறிதும் அபிமானம் இல்லாததால் கர்மாக்களை அனுஷ்டிக்கமுடியாது. அபிமானம் இல்லாதவனும் விடாமல் கட்டாயம் கர்மாக்களைச் செய்யவேண்டும் என்பது உபநிஷத்துக்களின் எண்ணமாக இருக்குமானல் ஆத்மாவைக் கர்மாவுடன் ஸம்பந்தப்படாத ப்ரஹ்மஸ்வரூபமாகக் கூறியிருக்காது. வர்ணுச்ரமங்களுடன் ஸம்பந்தப்பட்டவனுகவே உபதேசித்திருக்கும். கர்மாவைச் செய்வதற்கு முடியாதபடி ஆத்மாவை ப்ரஹ்மஸ்வரூபமாக உபநிஷத்தில் உபதேசித்திருக்கிறபடியால் கர்மஸாதனங்களில் அபிமானம் இல்லாத உத்தமாதிகாரியான முமுக்ஷு ஞானத்திற்கு இடைஞ்சலாக உள்ள கர்மாக்களை விட்டுவிடவேண்டுமே தவிற அனுஷ்டிக்கக்கூடாது என்பதுதான் உபநிஷத்துக்களின் ஹிருதயம் என்று தெரிகிறது. (31–32)

(அ) இதுவரை உபநிஷத் பிரமாணங்களைக்கொண்டு ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை நிருபணம் செய்துவிட்டு இனி யுக்திகளைக்கொண்டும் அதை ஸ்தாபிக்கிருர். வெவ்வேருன ஸ்வபாவமுள்ள ஜீவனும் ப்ரஹ்மமும் எவ்விதம் ஒன்ருக இருக்கமுடியும் என்று சிஷ்யன் கேட்கிருன் :—

स यदि ब्रूयात् — भगवान्, दह्यमाने छिद्यमाने वा देहे प्रत्यक्षा वेदना; अशनायादिनिमित्तं च प्रत्यक्षं दुःखं मम। परश्चायमात्मा अयमात्मा अपहतपाप्मा विरजो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सर्वगन्धरसवर्जितः श्रूयते सर्वश्रुतिषु स्मृतिषु च। कथं तद्विलक्षणः अनेकसंसारधर्मसंयुक्तः परमात्मानमात्मत्वेन मां च संसारिणं परमात्मत्वेन अग्निमिव शीतत्वेन प्रतिपद्येय? संसारी च सन् सर्वाभ्युदयनिःश्रेयससाधने अधिकृतः अभ्युदयनिःश्रेयससाधनानि कर्माणि तत्साधनानि च यज्ञोपवीतादीनि कथं परित्यजेयमिति॥ ३३ ॥

**भगवन्**-ஸ்வாமி! **देहे**-சரீரம், **दह्यमाने**- (நெருப்பால்), கொளுத்தப்படும்பொழுதும், **छिद्यमाने वा**-வெட்டப்படும் பொழுதும், **वेदना**-துன்பம், **प्रत्यक्षा**-நேராகத் தெரிகிறது. **अशनायादिनिमित्तं**-பசி முதலியவைகளின் காரணமான, **दुःखं च**—துன்பமும், **मम**-எனக்கு, **प्रत्यक्षं**—நேரிடையாகத் தெரிகிறது. '**अयं आत्मा**-இந்த ஆத்மா, **अपहतपाप्मा**-பாபம் அற்றவர், **विजरः**-மூப்பு அற்றவர், **विमृत्युः**-அழிவு அற்றவர், **विशोकः**-துன்பம் அற்றவர், **विजिघत्सः**-பசி அற்றவர், **अपिपासः**-தாகம் அற்றவர், **सर्वगन्धरसवर्जितः**-எல்லா வாஸனையும் ருசியும் அற்றவர்'' (என்று) **अयं**-இந்த, **परः आत्मा च**-பரமாத்மா, **सर्वश्रुतिषु**-எல்லாச்ருதிகளிலும், **स्मृतिषु च**—ஸ்மிருதிகளிலும், **श्रूयते** — கேள்விப்படுகிறார். **तद्विलक्षणः** - அவரைக் காட்டிலும் வேறுபட்ட தன்மையுள்ளவனும், **अनेकसंसारधर्मसंयुक्तः**—அநேகம் ஸம்ஸார தர்மங்களுடன் கூடியவனுமான (நான்) **परमात्मानं**-பரமாத்மாவை, **आत्मत्वेन**-என் ஸ்வரூபமாகவும், **संसारिणं**-ஸம்ஸாரியான, **मां**—என்னை, **परमात्मत्वेन च**-பரமாத்ம ஸ்வரூபமாகவும், **शीतत्वेन**-குளிர்ச்சியுள்ளதாக, **अग्निमिव**-நெருப்பைப்போல, **कथं**—எவ்வாறு, **प्रतिपद्येय**-அறிந்துகொள்வேன்? **संसारी**-ஸம்ஸாரியாகவும், **सर्वाभ्युदयनिःश्रेयससाधने**- எல்லா அப்யுதங்களுக்கும் (இவ்வுலகிலும் மேலுலகிலும் உண்டாகும் இன்பங்களுக்கும், மோக்ஷத்திற்கும் ஸாதனங்களைச் செய்வதில், **अधिकृतश्च**-அதிகாரியாகவும், **सन्** - இருந்துகொண்டு, **अभ्युदयनिःश्रेयससाधनानि** - அப்யுதயத்திற்கும் நிச்ரேயஸத்திற்கும் ஸாதனமான, **कर्माणि**-கர்மாக்களையும், **तत्साधनानि**-அதற்கு ஸாதனமான, **यज्ञोपवीतादीनि च**-யஜ்ஞோபவீதம் முதலியவைகளையும், **कथं**-எப்படி, **परित्यजेयम्**-விடுவேன், **इति**-என்று, **सः**-அந்த சிஷ்யன், **यदि ब्रूयात्**-சொல்வானே ஆகில்.

तं प्रति ब्रूयात् — यदवोचो दह्यमाने छिद्यमाने वा देहे प्रत्यक्षा वेदना उपलभ्यते ममेति, तदसत्। कस्मात्? दह्यमाने छिद्यमाने इव

वृक्षे उपलब्धुः उपलभ्यमाने कर्मणि शरीरे दाहच्छेदवेदनाया उपलभ्य-मानत्वात् दाहादिसमानाश्रयैव वेदना । यत्र हि दाहः छेदो वा क्रियते तत्रैव व्यपदिशति दाहादिवेदनां लोकः, न वेदनां दाहाद्युपलब्धरीति । कथम्? क्व ते वेदनेति पृष्टः शिरसि मे वेदना उरसि उदरे इति वा यत्र दाहादिः तत्रैव व्यपदिशति, न तु उपलब्धरीति । यदि उपलब्धरि वेदना स्यात् वेदनानिमित्तं वा दाहच्छेदादि वेदनाश्रयत्वेन उपदिशेत् दाहाद्याश्रयवत् ॥ ३४ ॥

तं प्रतिब्रूयात्–அந்த சிஷ்யனைக் குறித்து பதில் சொல்ல வேண்டும். देहे — சரீரம், दह्यमाने — கொளுத்தப்படும் போழுதோ, छिद्यमाने वा–வெட்டப்படும் பொழுதோ, मम–என்னுடைய, वेदना–துன்பமானது, प्रत्यक्षा–நேரிடையாக, उपलभ्यते–அறியப்படுகிறது, इति–என்று, यत् अवोचः–எந்த வார்த்தை சொன்னாயோ, तत्–அது, असत्–சரியல்ல. कस्मात् — ஏன்? वृक्षे इव–மரம்போல், दह्यमाने — பொசுக்கப் படுகிறதும், छिद्यमाने-வெட்டப்படுகிறதும், उपलब्धुः-அறிகிற வனுக்கு, उपलभ्यमाने–அறியப்படுகிறதும், कर्मणि-செயப்படு பொருளுமான, शरीरे–சரீரத்தில், दाहच्छेदवेदनया,–நெருப்புச் சூடு வெட்டு இவைகளால் உண்டாகும் துன்பம், उपलभ्य-मानत्वात्-அறியப்படுவதால், वेदना–துன்பமானது, दाहादि-समानाश्रयैव-தாஹம் முதலியவை இருக்கும் இடத்திலேயே உள்ளது. यत्र-எங்கு, दाहः-நெருப்புச்சூடோ, छेदो वा–வெட்டுக் காயமோ, क्रियते – செய்யப்படுகிறதோ, तत्रैव–அங்கேயே, दाहादिवेदनां-தாஹம் முதலியனவற்றால் ஏற்படும் துன்பம் இருப்பதை, लोकः–ஜனம், व्यपदिशति–சொல்கிறது. दाहाद्युपलब्धरि-தாஹம் முதலியவற்றை அறிபவனிடம், वेदनां-துன்பமிருப்பதை, न–சொல்கிறதில்லை. कथम् —எப்படி? ते–உனக்கு, वेदना–வலி, क्व–எங்கே, इति–என்று, पृष्टः–கேட்கப்பட்டவன், मे–எனக்கு, शिरसि–தலையில், वेदना–துன்பம், वा–அல்லது, उरसि–மார்பில் (அல்லது) उदरे-வயிற்றில், इति–என்று, यत्र-எங்கே, दाहादिः–நெருப்புச்சூடு

முதலியவை உள்ளதோ, तत्रैव-அங்கேதான், व्यपदिशसि-வலி இருப்பதாகச் சொல்கிருன். उपलब्धरि- அறிகிறவனிடம், இருப்பதாக, न-சொல்வதில்லை. उपलब्धरि-அறிகிறவனிடம், वेदना-துக்கம், यदि स्यात्-இருக்குமேயாளுல், वेदनानिमित्त-துக்கத்திற்குக் காரணமான, दाहच्छेदादि वा-தாஹம், வெட்டு முதலியவையோ, दाहाद्याश्रयवत् - தாஹம் முதலியவைகளுக்கு ஆச்ரயமாக தேஹத்தைக் கூறுவதுபோல், वेदनाश्रयत्वेन-வேதனைக்கு இருப்பிடமாக, उपदिशेत्- அறிகிறவனைக் கூறுவான்.

ஜீவனுடைய ஸ்வபாவமும் ப்ரஹ்மத்தின் ஸ்வபாவமும் வெவ்வேருக விலக்ஷணமாக இருக்கிறபடியால் இரண்டும் ஒன்று என்று எப்படிக் கூறமுடியும் ? உபநிஷத்தில் கூறப்பட்டிருந்தபோதிலும் யுக்திக்கும் அனுபவத்திற்கும் இது ஒத்துவரவில்லையே என்று சிஷ்யன் கேட்கிருன். நம் உடலில் எங்காவது ஒரு இடத்தில் நெருப்பு பட்டுவிட்டால் தாங்கமுடியாத வேதனையை நாம் அடைகிருேம். இதே போல் கத்தியால் வெட்டுப்பட்டாலும் துன்பம் அடைகிருேம். பசி, தாகம் முதலியவைகளாலும் கஷ்டமடைகிருேம். இவ்வாறு பலவிதத்திலும் ஜீவனுக்கு துக்கம் ஏற்படுவதைக் கண்கூடாகப் பார்க்கிருேம். துக்கத்தை ஒவ்வொருவரும் பிரத்யக்ஷமாக அநுபவிப்பதால் யாரும் இதை இல்லை என்று கூறமுடியாது. பரமாத்மாவுக்கோ துக்கம் கிடையாது. அவருக்கு துக்கத்திற்குக் காரணமான பசி, தாகம், நெருப்புக் காயம், வெட்டுக்காயம் முதலியவையும் கிடையாது என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. இவ்வாறு இருவருக்கும் வேற்றுமை இருக்கும்பொழுது துக்கமுள்ள ஜீவனை துக்கமில்லாத பரமாத்மாவாகவும், பரமாத்மாவை ஜீவாத்மாவாகவும் எப்படி நினைக்க முடியும் ? நெருப்பின் ஸ்வபாவம் சூடு. நீரின் ஸ்வபாவம் குளிர்ச்சி. இவ்விதமிருக்க நீரை நெருப்பாகவோ, நெருப்பை நீராகவோ பார்க்கமுடியுமா ? அது உண்மையான ஞானம் ஆகுமா ? ஆகவே துன்பப்பட்டுக்கொண்டு தாழ்ந்த நிலையில் இருக்கும் நான் உயர்நிலையிலுள்ள

பகவானை ஆராதித்து, அவர் கட்டளைப்படி கர்மாக்களைச் செய்து அவருடைய அருளால் துன்பம் விலகி மேல் நிலையை அடையவேண்டியவன். எப்படி நான் கர்மாக்களை விட முடியும்? அதற்கு ஸாதனமான யக்ஞோபவீதம் முதலான வைகளையும் எப்படி த்யாகம் செய்ய முடியும்? நான் வேறு ஈசுவரன் வேறு அல்லவா என்று சிஷ்யன் கேட்கிறான்.

ஆசார்யன் பதில் கூறுகிறார். எப்படி பரமாத்மாவுக்கு துக்கம் கிடையாதோ அப்படியே ஜீவாத்மாவுக்கும் துக்கம் கிடையாது. நெருப்பு, கத்தி, பசி, தாகம் முதலியவை களால் ஏற்படும் துக்கம் எல்லாம் சரீரத்தைச் சேர்ந்தது. மாம்பழத்தைக் கத்தியால் நறுக்கும்பொழுது தவறி விரலை வெட்டிக்கொண்டுவிடுகிறான். அல்லது தெரியாமல் நெருப்பைத் தொட்டுவிடுகிறான். இங்கு சூடு வெட்டு இவை சரீரத்தில்தான் ஏற்படுகிறது. இவைகளால் ஏற்படும் வேதனையும் அதே சரீரத்தில்தான், ஆத்மாவில் அல்ல. ஆனால் சரீரத்தில் வேதனை இருப்பதை ஆத்மா உணரு கிறான். ஒரு மரம் கத்தியால் வெட்டப்படுவதையும், நெருப்பால் எரிக்கப்படுவதையும் தனியாக நின்று மனிதன் பார்ப்பது போலத்தான் சரீரத்தில் ஏற்படுவதையும் பார்க் கிறான். வலி, துக்கம் எல்லாம் சரீரத்தில் இருப்பதாகத தான் உணருகிறான். 'உனக்கு எங்கே வலிக்கிறது' என்று அவனைப் பார்த்துக் கேட்டால் 'தலையில் வலிக்கிறது, மார்பில் வலிக்கிறது, வயிற்றில் வலிக்கிறது' என்று அந்த இடத்தைச் சுட்டிக் காட்டுகிறான். ஆகையால் நெருப்புக் காயம், கத்தி வெட்டு, முதலானவை எங்கு ஏற்படுகிறதோ, அந்த சரீரத்தில்தான் வேதனையும் ஏற்படுகிறது. சரீரத்தில் ஏற்படும் வேதனையை ஆத்மா உணருகிறானே தவிர அவனுக்கு துக்கம் ஒன்றும் கிடையாது. சரீரமோ, அதில் ஏற்படும் காயங்களோ, அவைகளால் உண்டாகும் வேதனையோ எல்லாம் அறியப்படுவன. ஆத்மாவோ அறிகிறவன். அறிகிறவனும் அறியப்படும் பொருளும் ஒன்றாக இருக்கமுடியாது. இரண்டும் வெவ்வேறுதான். அறியப்படும் வேதனை அறிகிற ஆத்மாவைச் சேர்ந்ததல்ல.

स्वयं च नोपलभ्येत, चक्षुर्गतरूपवत्। तस्मात् दाहच्छेदादिसमानाश्रयत्वेन उपलभ्यमानत्वात् दाहादिवत् कर्मभूतैव वेदना ॥

**चक्षुर्गतरूपवत्**-கண்ணிலுள்ள ரூபம்போல, **स्वयं च**-தானகவே, **नोपलभ्येत**-(வேதனை) அறியப்படமுடியாது. **तस्मात्**-ஆகையால், **दाहच्छेदादिसमानाश्रयत्वेन**-தாஹம்(சூடு) சேதம் (வெட்டு) முதலியவை இருக்கும் இடத்திலேயே இருப்பதாக, **उपलभ्यमानत्वात्**-அறியப்படுவதால், **वेदना**-வலி **दाहादिवत्**-தாஹம் முதலியவைகள்போல் **कर्मभूतैव**-அறியப் படும் பொருள்தான்.

வலியானது அறிகிற ஆத்மாவின் ஸ்வரூபத்தைச் சேர்ந்ததானல் அதை ஒருநாளும் அறியமுடியாது. கண்ணில் உள்ள ரூபத்தைக் கண்ணல் பார்க்க முடியுமா? எங்கு நெருப்புக்காயமோ, கத்தி வெட்டோ ஏற்படுகிறதோ அங்கேயே வலி இருப்பதாக உணருகிருன். ஆகையால் வலியானது ஆத்மாவால் அறியப்படும் வஸ்துவே தவிர அறிகிற ஆத்மாவைச் சேர்ந்ததல்ல என்று தெரிகிறது.

(அ) வேதனை ஆத்மாவைச் சேர்ந்ததல்ல, அனுத்மாவைச் சேர்ந்ததுதான் என்பதற்கு மேலும் யுக்திகளைக் காட்டுகிருர:—

भावरूपत्वाच्च साश्रया तण्डुलपाकवत्। वेदनासमानाश्रय एव तत्संस्कारः स्मृतिसमानकाल एव उपलभ्यमानत्वात्। वेदनाविषयः तन्निमित्तविषयश्च द्वेषोपि संस्कारसमानाश्रय एव। तथा चोक्तम्—

रूपसंस्कारतुल्याधी रागद्वेषौ भयं च यत्।
गृह्यते धीश्रयं तस्मात् ज्ञाता शुद्धोऽभयः सदा ॥ ३५ ॥

**तण्डुलपाकवत्**-அரிசியில் ஏற்படும் பாகம்போல், **भावरूपत्वाच्च**-பாவ (இருக்கும்) வஸ்துவானபடியாலும் (வேதனையானது) **साश्रया**-ஆச்ரயத்துடன் கூடியது. **तत्संस्कारं**-அதன் (வேதனையின்) ஸம்ஸ்காரம் **स्मृतिसमानकाल एव**-

நினைவு வருங்காலத்திலேயே उपलभ्यमानत्वात्-அறியப்படுவதால் वेदनासमानाश्रय एव-வேதனையின் இருப்பிடத்தையே இருப்பிடமாகக் கொண்டது. वेदनाविषयः - வேதனையைப் பற்றினதும் तन्निमित्तविषयः-அதற்குக் காரணமான தாஹம், சேதம் இவைகளைப்பற்றினதுமான द्वेषोपि-வெறுப்பும் संस्कारसमानाश्रय एव-ஸம்ஸ்காரத்தின் இடத்தையே இருப்பிடமாகக் கொண்டது. तथाचोक्तम् - அவ்வாறே பெரியோர்களால்) சொல்லப்பட்டிருக்கிறது.

रूपसंस्कारतुल्याधी-ரூபஸம்ஸ்காரத்துடன் ஸமமான ஆச்ரயத்தையுடைய रागद्वेषौ-விருப்பு, வெறுப்புக்கள் यत् च भयं-யாதொரு பயம் (இவை எல்லாம்) धीश्रयं-புத்தியில் இருப்பதாக गृह्यते-அறியப்படுகிறது तस्मात्-ஆகையால் ज्ञाता-அறிகிறவன் शुद्धः-சுத்தன் सदा-எப்பொழுதும் अभयः-பயமற்றவன்.

**கேள்வி:** வேதனை என்ற துக்கம் ஆத்மாவைச்சேர்ந்ததில்லையானால் ஜடமான அனாத்மாவிலும் இருக்க முடியாது. ஆகவே வேதனைக்கு ஆச்ரயம் ஒன்றும் இல்லை என்று ஆகும்.

**பதில்:**—உண்டாகும் பொருளுக்கு ஆச்ரயம் ஒன்று இருக்கவேண்டும். ஆச்ரயம் இல்லாமல் ஒரு பொருளும் உண்டாகமுடியாது அரிசியில்தான் பாகம் ஏற்படுகிறது. வேதனை உண்டாகி நாசம் அடையும் பொருள். ஆதலால் இதற்கு ஆச்ரயம் இருக்கவேண்டும். ஆச்ரயம் இல்லாவிட்டால் பின்னொரு காலத்தில் இந்த வேதனையை நினைவுபடுத்திக்கொள்ள முடியாது. 'முன் ஒரு சமயம் எனக்கு வேதனை ஏற்பட்டது' என்று நாம் நினைவுபடுத்திக்கொள்கிறோம். வேதனை நீங்கினாலும் அது ஏற்பட்ட இடத்தில் அநுபவமூலம் ஸம்ஸ்காரம் ஏற்பட்டு ஸம்ஸ்கார பலத்தால் பின்னால் ஸ்மரணம் ஏற்படுகிறது. ஆச்ரயம் இல்லாவிட்டால் வேதனை நீங்கியபிறகு எங்கு ஸம்ஸ்காரம் ஏற்படும்? எப்படி ஸ்மரணம் ஏற்படும்? ஆகையால் வேதனைக்கு ஆச்ரயம் ஒன்று இருக்கவேண்டும். அது அனாத்மா தான்.

ஆத்மா அல்ல. ஏனெனில் வேதனை, அதன் ஸம்ஸ்காரம், ஸ்மரணம் இம்மூன்றும் ஒரே இடத்தில் தான் ஏற்படமுடியும். வேதனை ஒரு இடத்திலும் ஸ்மரணம் மற்றொரு இடத்திலும் இருக்கமுடியாது. வேதனையானது அறியப்படுவதால் அநாத்மாவைச்சேர்ந்தது. ஆதலால் அதன் ஸம்ஸ்காரம் ஸ்மரணம் இவைகளும் அநாத்மாவைச் சேர்ந்தவைதான்.

மேலும் அநாத்மாவான தேஹாதிகளைப்பற்றின ஞாபகம் இருக்கும் ஸமயத்தில்தான், அதாவது, ஜாக்ரத் ஸ்வப்நாவஸ்தைகளில்தான் வேதனையோ, அதன் ஸ்மரணமோ ஏற்படுகிறது. தேஹாதிகளைப் பற்றின ஞாபகமே இல்லாத ஸுஷுப்தி நிலையில் ஒருவருக்கும் வேதனையோ, ஸ்மரணமோ ஏற்படுவதில்லை. “நெருப்பு என்னைச் சுட்டுவிட்டது, கத்தி விரலை வெட்டிவிட்டது. அதனால் துக்கப்படுகிறேன்” என்று சொல்லுமிடத்தில் அத்யாஸத்தால் தன்னை தேஹத்துடன் சேர்த்தே பேசுகிறான். தேஹாதிகளிலிருந்து ஆத்மாவைப் பிரித்துத் தெரிந்துகொண்டவன் தான் துன்பப்படுவதாக எண்ண மாட்டான். நமக்கே தேஹாபிமானம் இல்லாத நிலையில் துன்பம் தெரிவதில்லை. இதுபோலவே துன்பத்திலும் அதற்கு நிமித்தமான தாஹம், சேதம் முதலியவைகளிலும் ஏற்படும் த்வேஷமும் அநாத்மாவில்தான். நித்ய சுத்தமான ஆத்மாவுக்கு இவைகள் ஒன்றும் கிடையாது. இதே அபிப்பிராயத்தை ப்ரஹ்மா இந்திரனுக்குச்செய்யும் உபதேசத்தில் சொன்னதாக சாந்தோக்யத்தில் காணப்படுகிறது. ‘न ह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः’ (8–13) “சரீராபிமானம் இருக்கும்வரை ஸுகதுக்காநுபவம் நீங்காது. சரீராபிமானம் நீங்கியவனுக்கு ஸுகதுக்காநுபவம் ஏற்படாது”. (35)

(அ) துன்பம் முதலியவை ஆத்மாவைச் சேர்ந்ததல்ல என்று கூறிவிட்டு அவை அநாத்மாவான மனத்தைச் சேர்ந்தவை என்பதை நிரூபணம் செய்கிறார்:—

किमाश्रयाः पुनः रूपादिसंस्कारादय इति ? उच्यते—यत्र कामादयः । क्व पुनस्ते कामादयः ? [1] 'कामस्संकल्पो विचिकित्सा' इत्यादिश्रुतेः बुद्धावेव । तत्रैव रूपादिसंस्कारादयोऽपि, [2] 'कस्मिन्नु रूपाणि प्रतिष्ठितानीति हृदये' इति श्रुतेः । [3] 'कामा येऽस्य हृदि श्रिताः' [4] 'तीर्णो हि यदा सर्वान् शोकान् हृदयस्य' [5] 'असङ्गो ह्ययम्' [6] 'तद्वा अस्यैतदतिच्छन्दाः' इत्यादिश्रुतिशतेभ्यः । [7] 'अविकार्योऽयमुच्यते' [8] 'अनादित्वान्निर्गुणत्वात्' इत्यादिभ्यः–[9] इच्छाद्वेषादि च क्षेत्रस्यैव विषयस्य धर्मो नात्मन इति – स्मृतिभ्यश्च कर्मस्थैवाशुद्धिः नात्मस्था इति ॥

पुनः-அப்படியானால் रूपादिसंस्कारादयः-ரூபம் முதலியவைகளின் ஸம்ஸ்காரம் முதலியவை किमाश्रयाः-எதை இருப்பிடமாகக் கொண்டவை ? इति-என்று उच्यते-சொல்லப்படுகிறது

यत्र-எங்கு कामादयः-காமம் முதலியவை ஏற்படுகிறதோ (அதுதான் இடம்)

ते-அந்த कामादयः-காமம் முதலியவை क्व पुनः-எங்கு ஏற்படுகின்றன ?

कामः सङ्कल्पो विचिकित्सा इत्यादिश्रुतेः-காமம் ஸங்கல்பம், விசிகித்ஸை இது முதலான சுருதியினால் बुद्धावेव-மனத்தில் தான். कस्मिन्नु रूपाणि प्रतिष्ठितानि इति हृदये-எங்கு ரூபங்கள் நிலைபெற்றிருக்கின்றன ? ஹிருதயத்தில் इति श्रुतेः-என்ற சுருதியினால் रूपादिसंस्कारादयोपि-ரூபம் முதலியவைகளின் ஸம்ஸ்காரம் முதலியவைகளும் तत्रैव-அந்த மனத்திலேயே உள்ளன.

कामा येऽस्य हृदि श्रिताः-இவனுடைய எந்த காமங்கள் மனத்தில் உள்ளனவோ तीर्णो हि यदा सर्वान् शोकान् हृदयस्य-

1. பிரு. 1-5-3. 2. பிரு. 3-9-60. 3. கட. 6-14. 4. பிரு. 4-3-22. 5. பிரு. 4-3-15. 6. பிரு. 4-3-21. 7. கீதை. 2-25. 8. கீ 13-31. 9. கீ. 13-6.

மனத்திலுள்ள எல்லா சோகங்களையும் எப்பொழுது தாண்டு கிறுனே. असङ्गो ह्ययं-இந்த ஆத்மா ஒன்றிலும் பற்றுதல் இல்லாதவன். तद्वा अस्य एतत् अतिच्छन्दाः-இவனுடைய இந்த ஆத்மவஸ்து காமத்துடன் ஸம்பந்தப்படாதது. इत्यादिश्रुतिशतेभ्यः-இது முதலான நூற்றுக்கணக்கான சுருதி களாலும், अविकार्योऽयमुच्यते – இந்த ஆத்மா விகாரம் அடையாதவன் என்று சொல்லப்படுகிருன். अनादित्वात् निर्गुणत्वात्-பிறப்பு இல்லாததாலும் குணம் இல்லாததாலும் इच्छाद्वेषादि च-விருப்பம் வெறுப்பு முதலியவை, विषयस्य-அறியப்படுகிற, क्षेत्रस्यैव धर्मः-சரீரத்தினுடைய தர்மம்தான். न आत्मनः-ஆத்மாவினுடையது அல்ல. इत्यादिस्मृतिभ्यश्च-இது முதலான ஸ்மிருதிகளாலும், अशुद्धिः-அசுத்தியானது कर्मस्यैव-அறியப்படுகின்ற சரீரத்தில் உள்ளதுதான், नात्मस्था ஆத்மாவில் உள்ளது அல்ல.

'காமம் முதலியவை மனத்தில்தான் ஏற்படுகின்றன' என்று சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் பல இடங்களில் காணப்படுகிறது. அனுபவமோ, அதனுல் ஏற்படும் ஸம்ஸ்காரம், ஸ்மிருதி முதலியவைகளோ இவையும் மனதிற்குத்தான். ஆத்மாவுக்கு குணம், விகாரம், காமம் முதலியவை ஒன்றும் கிடையாது என்றும் சுருதி ஸ்மிருதிகள் கூறுகின்றன. ஆகையால் சுருதி, ஸ்மிருதி, யுக்தி, அநுபவம் எல்லாவற்றையும் கொண்டு பார்த்தால் வேதனையானது அநாத்மாவைச்சேர்ந்தது. அதிலும் மனதில் ஏற்படுவது. ஆத்மாவுக்கு ஸம்பந்தம் இல்லை என்று நிச்சயமாகத் தெரிகிறது. (36)

अतो रूपादिसंस्काराद्यशुद्धिसंबन्धाभावात् न परस्मादात्मनो विलक्षण-त्वमिति प्रत्यक्षादिविरोधाभावात् युक्तं पर एव आत्मा अहमिति प्रतिपत्तुम् ॥

अतः – ஆகையால், रूपादिसंस्काराद्यशुद्धिसंबन्धाभावात्-ரூபம் முதலியவைகளின் ஸம்ஸ்காரம் முதலிய அசுத்தியின்

சேர்க்கை இல்லாததால், त्वं-நீ, परस्मात् आत्मनः-பரமாத்மாவைக்காட்டிலும், न विलक्षणः - வேறுபட்ட ஸ்வபாவம் உள்ளவன் அல்ல. इति-என்ற காரணத்தால், प्रत्यक्षादिविरोधाभावात्-பிரத்யக்ஷ பிரமாணம் முதலியவைகளின் விரோதமில்லாததால், अहं-நான், पर एव आत्मा-பரமாத்மா தான், इति-என்று, प्रतिपत्तुं-அறிந்து கொள்வதற்கு युक्तम्-தகுந்தது தான்.

பலவிதமாகத் துன்பங்களை ஜீவன் அநுபவிப்பதாலும் ஈசுவரனுக்கு இவை இல்லாததாலும் வெவ்வேறு ஸ்வபாவம் உள்ள ஜீவன் ஈசுவரன் இவ்விருவர்களும் ஒன்றுதான் என்று பிரத்யக்ஷ விருத்தமாக எப்படி ஒப்புக்கொள்ள முடியும் என்று சிஷ்யன் கேட்டான். இதற்கு ஆசார்யர் சுருதி, ஸ்மிருதி, யுக்தி, அனுபவம் இவைகளைக் காட்டி துக்கம் முதலியவை எல்லாம் மனதிற்குத்தான், ஆத்மாவிற்கு இல்லை என்பதைத் தெளிவுபடுத்தினார். ஆகவே ஆத்மா பரிசுத்த வஸ்து, பரமாத்மாவும் பரிசுத்த வஸ்து. இரண்டும் ஒரே ஸ்வபாவம் உள்ளதாக இருப்பதால் இரண்டும் ஒரே தத்வம் என்று கூறுவதில் என்ன விரோதம்? ஆகையால் 'நான் பரமாத்மாதான்' என்று அறிந்து கொள்ளவேண்டும் என்று உபதேசித்தார்.

(அ) உண்மையில் ஜீவன் என்றும் ப்ரஹ்மம் என்றும் இரண்டு தத்வங்கள் கிடையாது. தத்வம் ஒன்றுதான். பிரஹ்மமேதான் ஜீவன். ஜீவனேதான் ப்ரஹ்மம். இதற்கு பிரமாணமாக பல சுருதிகளைக் காட்டுகிறார் :—

'तदात्मानमेवावेदहं ब्रह्मास्मि' 'एकधैवानुद्रष्टव्यम्' 'अहमेवाधस्तात्' 'आत्मैवाधस्तात्' 'सर्वमात्मानं पश्येत्' 'यत्र त्वस्य सर्वमात्मैव' 'इदं सर्वं यदयमात्मा' 'स एषोऽकलः' 'अनन्तरमबाह्यम्' 'सबाह्याभ्यन्तरो ह्यजः' 'ब्रह्मैवेदम्' 'एतया द्वारा प्रापद्यत' 'प्रज्ञानस्य नामधेयानि' 'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म...तस्माद्वा' 'तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्'

'एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी' 'अशरीरं शरीरेषु' 'न जायते म्रियते' 'स्वप्नान्तं जागरितान्तम्' 'स म आत्मेति विद्यात्' 'यस्तु सर्वाणि भूतानि' 'तदेजति तन्नैजति' 'वेनस्तत्पश्यन्' 'तदेवाग्निः' 'अहं मनुरभवं सूर्यश्च' 'अन्तः प्रविष्टः शास्ता जनानाम्' 'सदेव सोम्य' 'तत्सत्यम् स आत्मा तत् त्वमसि' इत्यादिश्रुतिभ्यः ॥

[1]**आत्मानमेव अवेत् अहं ब्रह्मास्मि**-நான் ப்ரஹ்மமாக இருக்கிறேன் என்று தன்னையே அறிந்துகொண்டார். [2]**एकधैव अनुद्रष्टव्यम्**-ஒரே தத்வமாக ப்ரஹ்மத்தை அறிந்து கொள்ளவேண்டும். [3]**अहमेव अधस्तात्**-நானே கீழே மேலே எங்கும் இருக்கிறேன் [4]**आत्मैव अधस्तात्**-ஆத்மாவே கீழே மேலே எங்கும் இருக்கிறார். **सर्वमात्मानं पश्येत्**-எல்லாவற்றையும் ஆத்ம ஸ்வரூபமாகப் பார்க்கவேண்டும். [5]**यत्र तु अस्य सर्वं आत्मैव**-எந்த நிலையில் இவனுக்கு எல்லாம் ஆத்மாவாக விளங்குகிறதோ, அப்பொழுது வேற்றுமை இல்லாததால் எதனால் எதை அறிந்துகொள்வான்? **इदं सर्वं यदयमात्मा**-இது எல்லாம் இந்த ஆத்ம ஸ்வரூபமே. [6]**स एषोऽकलः**-அந்த இந்த ஆத்மா உபாதிகள் அற்றவன். [7]**अनन्तरं अबाह्यं**-ப்ரஹ்மம் உள் வெளி இல்லாதது. [8]**सबाह्याभ्यन्तरो ह्यजः**-ஆத்மா உள்ளும் வெளியும் நிறைந்திருப்பது, பிறப்பு அற்றது. [9]**ब्रह्मैवेदं**-இந்த ப்ரஹ்மமே முன், பின் எங்கும் உள்ளது.. [10]**एतया द्वारा प्रापद्यत**-ஆத்மா சிரஸ்ஸில் உள்ள துவாரம் வழியாக சரீரத்திற்குள் நுழைந்தார். [11]**प्रज्ञानस्य नामधेयानि**-ஞானவடிவான ஆத்மாவின் பெயர்கள். [12]**सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म ... तस्माद्वा** – ப்ரஹ்மம் ஸத்ரூபம், சைதன்ய ஸ்வரூபம், கால தேச வஸ்துக்களால் எல்லையற்றது. அந்த

---

1. பிரு. 1-4-10. 2. பிரு. 4-4-20. 3. சா. 7-25. 4. சா. 7-25. 5. பிரு. 4-5-15. 6. பிரச். 6-5. 7. பிரு. 3-8-8 8. முண். 2-1-2, 9. முண். 2-2-12. 10. ஐத. 1-3-12. 11. ஐத. 5-2. 12. தைத். 2-1.

ஏற்பட்டதாக ஆகும். அப்பொழுது ஆத்மாவை ஜடம் என ஒப்புக்கொள்ள வேண்டிவரும். எல்லோரும் ஆத்மாவை சேதனமாகத்தான் கூறுகின்றனர். ஆகையால் நித்யமாயும் சேதனனுயுமுள்ள ஆத்மாவை தேஹத்துடன் சேராதவனுகவும் இந்த சேதனனை ஆத்மாவின் பிரயோஜனத்திற்காகவே தேஹம் இருப்பதையும் எல்லோரும் எப்படியாவது ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆகையால் தூணும் மூங்கிலும் போல தேஹமும் ஆத்மாவும் சேர்ந்திருப்பதாகக் கூறுவது சரியல்ல. (56)

(அ) சிஷ்யன் கேட்கிறுன் :—

तस्य असंहतस्य देहे देहमात्रतयाऽध्यारोपितत्वेन असत्वानित्यत्वादिदोषप्रसङ्गो भवति। तत्र निरात्मको देह इति वैनाशिकपक्षप्राप्तिदोषः स्यात् ॥ ५७ ॥

**असंहतस्य**–தேஹத்துடன் சேராத, **तस्य**–அந்த ஆத்மா, **देहे**-தேஹத்தில், **अध्यारोपितत्वेन**-ஆரோபம் செய்யப்பட்டிருப்பதால், **देहमात्रतया**–தேஹஸ்வரூபமாகவே இருப்பதால், **असत्वानित्यत्वादि**-இல்லாமை, அழியும் தன்மை முதலான, **दोषप्रसङ्गो भवति**-தோஷங்கள் ஏற்பட்டு விடுகிறது. **तत्र**–அதில், **देहः**–தேஹம், **निरात्मकः**–ஆத்மாவற்றது, **इति**–என்பதால், **वैनाशिकपक्षप्राप्तिदोषः**-பௌத்த மதத்தை அடைவது என்ற தோஷம், **स्यात्** –ஏற்படும்.

தேஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேருனுலும் ‘நான் மனுஷ்யன்’ என்ற வியவஹாரம் ஏற்படுவதால் தேஹத்துடன் ஆத்மாவிற்கு ஸம்பந்தம் சொல்லவேண்டும். ஸம்பந்தம் இல்லாவிட்டால் ஆத்மாவையும் தேஹத்தையும் சேர்த்துக் காட்டுகின்ற ‘நான் மனுஷ்யன்’ என்ற வியவஹாரம் ஏற்படாது. இரண்டுக்கும் ஸம்யோக ஸம்பந்தம் இல்லை என்று சொல்லிவிட்டீர்கள். ஆகவே தாதாத்ம்யாத்யாஸம் என்ற ஸம்பந்தத்தை ஒப்புக்கொண்டு கிளிஞ்சல் வெள்ளியாகத் தோன்றுவதுபோல் தேஹமும்

ஆத்மாவாகத் தோன்றுகிறது என்று சொன்னால் கிளிஞ்சலில் வெள்ளி இல்லாததுபோல் தேஹத்திலும் ஆரோபிதமான ஆத்மா இல்லை என்று ஆகிவிடும். இதே போல ஆத்மா தேஹமாகத் தோன்றுகிறது என்று ஆத்மாவில் தேஹத்திற்கு ஆரோபம் சொன்னால் தேஹமும் இல்லை என்று ஆகிவிடும். ஆகவே சூன்யவாதியான பௌத்தருடைய ஸித்தாந்தத்தை ஒப்புக்கொண்டதாக ஆகும். (57)

(அ) குரு அத்யாஸத்தை ஸமர்த்தனம் செய்கிறார்:—

न, स्वत एव आत्मनः आकाशस्येव असंहतत्वाभ्युपगमात् । सर्वेण असंहतः स चात्मेति न निरात्मको देहादिः सर्वः स्यात् । यथा च आकाशं सर्वेणासंहतमिति सर्वं न निराकाशं भवति, एवम् । तस्मात् न वैनाशिकपक्षप्राप्तिदोषः स्यात् ॥ ५८ ॥

**आकाशस्येव**-ஆகாசத்திற்குப்போல, **आत्मनः**-ஆத்மாவிற்கு, **स्वत एव**-தானாகவே, **असंहतत्वाभ्युपगमात्**-கூட்டத்தில் சேராதிருக்கும் தன்மையை ஒப்புக்கொண்டுள்ளபடியால், **न**-இல்லை. **स च आत्मा**-அந்த ஆத்மா, **सर्वेण**-எல்லாவற்றோடும் **असंहतः**-சேராமல் இருக்கிறது. **इति**-என்ற காரணத்தால், **देहादिः सर्वः**-தேஹம் முதலியவை எல்லாம், **निरात्मकः**-ஆத்மா வற்றதாக, **न स्यात्**-ஆகாது. **यथा च**-எவ்வாறு, **आकाशं**-ஆகாசமானது, **सर्वेण**-எல்லாவற்றோடும், **असंहतं**-சேராமல் இருக்கிறது. **इति**-என்பதால், **सर्वं**-எல்லாம், **निराकाशं**-ஆகாசமற்றதாக, **न भवति**-ஆவதில்லையோ, **एवं**-இதுபோல. **तस्मात्**-ஆகையால், **वैनाशिकपक्षप्राप्तिदोषः**-சூன்யவாதியான பௌத்தருடைய ஸித்தாந்தத்தை அடைவது என்ற தோஷம், **न स्यात्**-ஏற்படாது.

'நான் மனுஷ்யன்' என்ற ஞானத்தில் தோன்றும் தாதாத்ம்ய ஸம்பந்தம் ஒன்றுக்கொன்று அத்யாஸத்தால் ஏற்பட்டதாகச் சொன்னால் கிளிஞ்சலில் வெள்ளியைப்போல தேஹமும் ஆத்மாவும் உண்மையில் இல்லை என்று ஆகி

சூன்ய வாதத்தை ஒப்புக்கொண்டதாக ஏற்படும் என்று சிஷ்யன் கேட்டதற்கு குரு ஸமாதானம் கூறுகிறார். தேஹமானது வாஸ்தவத்தில் குடத்தைப்போல ஜடமான பொருள். ஆனாலும் அது நமக்கு சேதனப் பொருளாகத் தோன்றுகிறது. ஆகையால் காய்ச்சின இரும்பில் நெருப்பு சேர்ந்திருப்பதுபோல் தேஹத்திற்கு ஆத்மாவுடன் ஸம்பந்தம் சொல்லவேண்டும் இதுபோல பரிசுத்தமான ஆத்மாவில் தேஹ தர்மங்கள் தோன்றுகிறபடியால் ஆத்மாவுக்கு தேஹத்துடன் ஸம்பந்தம் சொல்லவேண்டும் வாஸ்தவத்தில் தேஹமும் ஆத்மாவும் இருளும் வெளிச்சமும் போல விருத்தமான வஸ்துக்கள் ஒன்றுக்கொன்று இவைகளுக்கு ஸம்பந்தம் ஒருவிதத்திலும் சொல்ல முடியாது. ஆகையால் இந்த ஸம்பந்தம் அத்யாஸத்தால் ஏற்பட்டதாகத்தான் சொல்லவேண்டும். அதிலும் ஆத்ம ஸம்பந்தம் இல்லாமல் ஒரு ஸமயத்திலும் தேஹத்திற்கு ஸ்புரணம் இல்லை. ஆகையால் தேஹ ஸ்வரூபத்திற்கும் அதன் தர்மங்களுக்கும் ஆத்மாவில் அத்யாஸம் ஏற்படுகிறது. ஸுஷுப்தி முதலான நிலைகளில் தேஹ ஸம்பந்தம் இல்லாமலும் ஆத்மாவிற்கு ஸ்புரணம் இருப்பதால் ஆத்மஸ்வரூபத்திற்கு அத்யாஸம் இல்லை. அதன் ஸம்ஸர்கத்திற்குத்தான் அத்யாஸம். ஸம்ஸர்கம் பொய்யாகப்போனாலும் ஆத்மஸ்வரூபம் வாஸ்தவமாக இருப்பதால் சூன்யவாதத்திற்கு ப்ரஸக்தி இல்லை தேஹாதிகளின் ஸ்வரூபத்திற்கே அத்யாஸம் ஏற்படுவதால் அவைகள் எல்லாம் பொய் என்று ஏற்படுவதால் ஆத்மா ஒன்றே வாஸ்தவம் என்ற அத்வைத ஸித்தாந்தமும் நிலைக்கிறது. ஆகாசம் அஸங்கமாயிருந்தாலும் எல்லா இடங்களிலும் இருப்பதுபோல அஸங்கமான ஆத்மாவும் எல்லா இடங்களிலும் இருப்பதாகக் கூறுவதில் தவறு ஒன்றும் இல்லை. இந்த ஆத்மாவிற்கு தேஹாதிகளுடன் ஸம்பந்தம் ப்ரமத்தால் தோன்றுவதால் ஆத்ம தர்மங்கள் தேஹத்தில் தோன்றுகின்றன. (58)

(அ) ப்ரத்யக்ஷ விரோதம் ஏற்படும் என்று சிஷ்யன் கூறியதற்கு பதில் சொல்கிறார்:—

यत्पुनरुक्तं — देहस्य आत्मनि असत्त्वे प्रत्यक्षादिविरोधः स्यादिति, तन्न, प्रत्यक्षादिभिरात्मनि देहस्य सत्त्वानुपलब्धेः। न हि आत्मनि — कुण्डे बदरम्, क्षीरे सर्पिः, तिले तैलम्, भित्तौ चित्रमिव च — प्रत्यक्षादिभिर्देह उपलभ्यते। तस्मात् न प्रत्यक्षादिविरोधः ॥ ५९ ॥

आत्मनि—ஆத்மாவில், देहस्य असत्त्वे—தேஹம் இல்லாமல் போனால், प्रत्यक्षादिविरोधः स्यात्—ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கு விரோதம் ஏற்படும், इति—என்று, यत्पुनरुक्तं—யாதொன்று சொல்லப்பட்டதோ, तन्न—அது சரியல்ல. प्रत्यक्षादिभिः—ப்ரத்யக்ஷம் முதலியவைகளால், आत्मनि—ஆத்மாவில், देहस्य—தேஹம், सत्त्वानुपलब्धेः—இருப்பது தெரியாதபடியால். कुण्डे—கிண்ணத்தில், बदरं—இலந்தம்பழம் போலும், क्षीरे—பாலில், सर्पिः—நெய்போலும், तिले—எள்ளில், तैलं—எண்ணெய்போலும், भित्तौ—சுவற்றில், चित्रमिव च—படம் போலும், प्रत्यक्षादिभिः—ப்ரத்யக்ஷம் முதலானவைகளால், आत्मनि—ஆத்மாவில், देहः—தேஹம், न हि उपलभ्यते—அறியப்படுகிறதில்லை. तस्मात्—ஆகையால், न प्रत्यक्षादिविरोधः—ப்ரத்யக்ஷம் முதலானவைகளுக்கு விரோதம் இல்லை.

ஆத்மாவில் தேஹம் ஆரோபிதம் என்றால் கிளிஞ்சலில் வெள்ளியைப்போல் ஆத்மாவில் தேஹம் இல்லை என்று ஆகிவிடும். இது பிரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கு விருத்தம். ஆகையால் தேஹத்திற்கும் ஆத்மாவிற்கும் தூணிற்கும் மூங்கிலுக்கும்போல ஸம்யோக ஸம்பந்தம்தான் என்று சிஷ்யன் 55-வது வாக்யத்தில் கேட்டான். இதற்கு பதில் கூறுகிறார். பிரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களால் ஆத்மாவில் தேஹம் இருப்பதாக எங்காவது கண்டிருந்தால் ப்ரமாண விரோதம் ஏற்படும். அப்படி ஒரு இடத்திலும் கண்டதில்லையே! இரண்டு பொருள்களையும் நேரில் கண்டவன்தான் ஒன்றில் மற்றொன்று இருப்பதாகக் காண முடியும். கிண்ணத்தையும் இலந்தம்பழத்தையும் நேரில் கண்டவன் கிண்ணத்தில் இலந்தம்பழம் இருப்பதாகத் தெரிந்துகொள்கிறான். தேஹத்தைக் கண்ணால் பார்த்துத்

தெரிந்துகொண்டாலும் ஆத்மாவை ஒரு இந்திரியத்தாலும் அறிந்துகொள்ளமுடியாது. புலன்களுக்கு எட்டாதது ஆத்மா. அப்ரத்யக்ஷமான ஆத்மாவில் ப்ரத்யக்ஷமான தேஹம் இருப்பதாக ப்ரத்யக்ஷ ஞானத்தால் எப்படி அறிந்து கொள்ளமுடியும்? பாலில் நெய் இருப்பதும், எள்ளில் எண்ணெ இருப்பதும் அனுமானத்தால் தெரியவருகிறது முதலில் கண்ணால் நெய்யையும் எண்ணெயையும் காணு விட்டாலும் பின்னால் பார்க்கிறோம். அதைக்கொண்டு பாலில் நெய்யும் எள்ளில் எண்ணெயும் இருப்பதாக ஊகிக் கிறோம். ஒருசமயத்திலும் ஆத்மாவை இந்திரியங்களால் அறியமுடியாதபடியால் ஆத்மாவில் தேஹம் இருப்பதாக எவ்வாறு ஊகிக்கமுடியும்? சுவரும் சித்திரமும் வெவ்வேறாகத் தெரியாவிட்டாலும் சித்திரத்துடன் சேர்ந்தே சுவரும் நன்கு காணப்படுகிறது. இங்கேயோ தேஹம்தான் தெரிகிறதே தவிர ஆத்மா தெரிவதே இல்லை. ஆத்மாவில் தேஹம் இருப்பது தெரியும்பக்ஷத்தில் என்னிடம் சரீரம் இருக்கிறது என்றே எல்லோரும் சொல்வார்கள். நான் மனுஷ்யன் என்று சொல்லமாட்டார்கள். ஆகவே ஆத்மாவில் தேஹம் இருப்பதாக ஒரு ப்ரமாணத்தாலும் அறியாததால் தேஹத்திற்கு ஆரோபம் சொல்வதில் ப்ரமாண விரோதம் ஒன்றும் இல்லை. (59)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :—

कथं तर्हि प्रत्यक्षाद्यप्रसिद्धात्मनि देहाद्यारोपणा, देहे च आत्मा-रोपणा ॥ ६० ॥

तर्हि—அப்படியானால், प्रत्यक्षाद्यप्रसिद्धात्मनि-ப்ரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால் அறிந்துகொள்ள முடியாத ஆத்மாவில், देहाद्यारोपणा-தேஹத்தின் ஆரோபமும், देहे-தேஹத்தில், आत्मारोपणा च-ஆத்மாவின் ஆரோபமும் कथम्-எப்படி?

உலகில் பிரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களால் அறியப்படும் வஸ்துவில்தான் வேறொரு பொருளுக்கு ஆரோபம் ஏற்படுவதைக் கண்டிருக்கிறோம். கிளிஞ்சல்—

வெள்ளி, கயிறு - பாம்பு இவை நாம் அறியத்தக்க பொருள் கள். ஆத்மா ஒரு பிரமாணத்தாலும் அறிய முடியாதிருக்கு மாகுல் அதில் எப்படி தேஹத்திற்கு ஆரோபம் ஏற்படும்? தேஹத்தில்தான் ஆத்மாவுக்கு ஆரோபம் ஏற்படும்? (60)

(அ) குரு பதில் கூறுகிருர் :—

**नायं दोषः, स्वभावप्रसिद्धत्वात् आत्मनः । न हि कादाचित्कसिद्धावेव अध्यारोपणा, न नित्यसिद्धौ — इति नियन्तुं शक्यं, आकाशे तलमलाद्यध्यारोपणदर्शनात् ॥ ६१ ॥**

**आत्मनः**-ஆத்மாவானது, **स्वभावप्रसिद्धत्वात्** -ஸ்வபாவ மாகவே எப்பொழுதும் ப்ரஸித்தமாக இருப்பதால், **अयं दोषः**- இந்த தோஷம், **न** - இல்லை. **आकाशे**-ஆகாசத்தில், **तलमलाद्यध्यारोपणदर्शनात्** -தலம்,மலம் முதலியவற்றின் ஆரோபம் காண்பதால், **कादाचित्कसिद्धावेव**-ஏதோ ஒரு சமயத்தில் மட்டும் ப்ரஸித்தமாக இருந்தால்தான், **अध्यारोपणा**-ஆரோபம் **नित्यसिद्धौ**-எப்பொழுதும் ப்ரஸித்தமாயிருந்தால், **न**-இல்லை, **इति**-என்று, **नियन्तुं**-கட்டுப்படுத்துவதற்கு, **नहि शक्यम्** - முடியாது.

அத்யாஸம் ஏற்படுவதற்கு வஸ்துக்களின் ஸ்புரணம் வேண்டியதுதான். ஆனுல் இந்திரியங்களால் அது அறியத் தக்கதாக இருக்கவேண்டும் என்ற கட்டாயம் கிடையாது. ஆகாசமானது இந்திரியங்களுக்கு விஷயமாகாமல் இருந் தாலும் அதில் நீல நிறம் இருப்பதாக ப்ரமம் ஏற்படுகிறது இல்லையா? ஆகவே ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மாவுக்கு எப்பொழுதுமே தானுகவே ஸ்புரணம் இருப்பதால் ஆரோபம் ஏற்படலாம். ஸ்வரூபம் தோன்றியும் அத்யாஸத்திற்கு விருத்தமான ஆகாரம் தோன்ருமலும் இருந்தால் ப்ரமம் ஏற்படலாம். ஆத்ம ஸ்வரூபம் தோன்றினுலும் ஸச்சி தானந்தம் தோன்ருததால் ஆத்மாவில் ப்ரமம் ஏற்படுவது யுக்தம்தான். (61)

(அ) சிஷ்யன் கேட்கிருன் :—

**किं भगवन्, देहात्मनोरितरेतराध्यारोपणा देहादिसंघातकृता, अथवा आत्मकृतेति ॥ ६२ ॥**

**भगवन्**-பகவானே, **देहात्मनोः**-தேஹம், ஆத்மா இவ்விரண்டிற்கும், **इतरेतराध्यारोपणा**-ஒன்றுக்கொன்று அத்யாஸமானது, **किं देहादिसंघातकृता**-தேஹம் முதலியவைகளின் கூட்டத்தினுல் ஏற்பட்டதா, **अथवा**-அல்லது, **आत्मकृता**-ஆத்மாவினுல் ஏற்பட்டதா?

**गुरुरुवाच — यदि देहादिसंघातकृता, यदि चात्मकृता किं तत्र स्यात् ॥ ६३ ॥**

**गुरुरुवाच**-குரு சொன்ஞர். **देहादिसंघातकृता यदि**-தேஹம் முதலியவைகளின் கூட்டத்தால் ஏற்பட்டதாஞலோ, **यदि च आत्मकृता**-ஆத்மாவினுல் ஏற்பட்டதாஞலோ, **किं तत्र स्यात्**-அதில் உனக்கு என்ன ஏற்படும்?

**इत्युक्तः शिष्य आह — यद्यहं देहादिसंघातमात्रः, ततो ममाचेतनत्वात् परार्थत्वमिति न मत्कृता देहात्मनोः इतरेतराध्यारोपणा। अथाहमात्मा परोऽन्यः संघातात्, चितिमत्त्वात् स्वार्थ इति मयैव चितिमता आत्मनि अध्यारोपणा क्रियते सर्वानर्थबीजभूता ॥ ६४ ॥**

**इति उक्तः**-இவ்வாறு சொல்லப்பட்ட, **शिष्यः**-சிஷ்யன், **आह**-சொன்ஞன். **अहं**-நான், **देहादिसंघातमात्रः यदि**-தேஹாதிகளின் கூட்டமாக மட்டும் இருப்பேனேயாகில், **ततः**-அப்பொழுது, **मम अचेतनत्वात्**-நான் ஜடமாயிருப்பதனுல், **परार्थत्वं इति**-பிறருக்காக ஏற்பட்டவன் பரதந்த்ரன் என்ற காரணத்தால், **देहात्मनोः**-தேஹத்திற்கும் ஆத்மாவிற்கும், **इतरेतराध्यारोपणा**-ஒன்றுக்கொன்று ஆரோபமானது, **न मत्कृता**-என்னுல் ஏற்பட்டதில்லை. **अथ**-அல்லது, **अहं**-நான் **संघातात्**-ஸங்காதத்தைக் காட்டிலும், **अन्यः**-வேருன, **परः**-விலக்ஷணமான, **आत्मा**-ஆத்மாவாஞல், **चितिमत्त्वात्**-ஞானத்துடன் கூடியிருப்பதால், **स्वार्थः**-ஸ்வதந்திரன், **इति**-என்ற

காரணத்தால், चितिमता-அறிவுள்ள, मयैव-என்னுலேயே, आत्मनि-தன்னிடம், सर्वानर्थबीजभूता-எல்லாத் துன்பங்களுக்'கும் மூலகாரணமாக உள்ள, अध्यारोपणा-அத்யாஸம், क्रियते-செய்யப்படுகிறது.

தேஹம், ஆத்மா இவ்விரண்டையும் ஒன்றுக்கொன்று ஆரோபம் செய்கிறவன் ஆத்மாவா ? அல்லது தேஹமா ? என்று சிஷ்யன் கேட்டான். சிஷ்யனுடைய அபிப்பிராயம் வெளிப்படுவதற்காக தேஹமாயிருந்தால் என்ன ? ஆத்மாவாக இருந்தால் என்ன ? என்று குரு கேட்டார். பிறகு சிஷ்யன் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டுச் சொன்னுன். எல்லாத் துன்பங்களையும் நான் அனுபவிப்பதால் அத்யாஸம் எனக்குத்தான் என்று சொல்லவேண்டும். ஆனுல் நான் இந்த தேஹாதிஸங்காதமா ? ஆத்மாவா ? நான் தேஹாதி ஸங்காதமானுல், அது ஜடம், ஸ்வாதந்திரியம் இல்லை. அதற்கு ஆரோபஞானம் ஏற்படாது. ஆகவே அத்யாஸம் என்னுல் ஏற்பட்டதாகச் சொல்ல முடியாது. நான் தேஹாதிகளைக் காட்டிலும் விலக்ஷணனுன ஆத்மாவானுல் அப்பொழுதும் அத்யாஸம் ஸம்பவிக்காது. ஆத்மா சேதனன் ஸ்வதந்திரன், அவன் எல்லாத் துன்பங்களுக்கும் காரணமான அத்யாஸத்தைத் தனக்குத்தானே செய்து கொள்வானு ? (62–64)

इत्युक्तो गुरुरुवाच — अनर्थबीजभूतां चेत् मिथ्याध्यारोपणां जानीषे, माकार्षीस्तर्हि ॥ ६५ ॥

इति-இவ்வாறு, उक्तः-சொல்லப்பட்ட, गुरुः-ஆசார்யர், उवाच-சொன்னுர். मिथ्याध्यारोपणां-பொய்யாக உள்ள ஆரோபத்தை, अनर्थबीजभूतां-எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாக, जानीषे चेत्-அறிவாயேயானுல், तर्हि-அப்பொழுது, मा कार्षीः-செய்யாதே.

அநாதியான அக்ஞானத்தால் தேஹாதிகளையே நான் என்று எண்ணும் ஆத்மா அறியாமையால் ஆரோபம் செய்கிருன், அக்ஞானம் விலகி ஆத்மதத்வத்தையும் அநாத்

மாவையும் நன்கு பிரித்துத் தெரிந்துகொண்டால் ஆரோபம் விலகிவிடும் என்ற தத்வத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ஆசார்யர் உபதேசிக்கிருர். அத்யாஸம் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் என்பதைத் தெரிந்துகொண்ட நீ ஏன் மறுபடியும் ஆரோபம் செய்கிருய்? அதை விட்டு விடலாமே? (65)

(அ) சிஷ்யன் கூறுகிருன் :—

नैव भगवन्, शक्नोमि न कर्तुम्। अन्येन केनचित् प्रयुक्तोऽहम्, न स्वतन्त्रः इति ॥ ६६ ॥

**भगवन्**-பகவானே, **न कर्तुं**-செய்யாமலிருப்பதற்கு, **नैव शक्नोमि**-முடியவில்லையே! **अन्येन केनचित्**-வேறு ஒருவனுல், **अहं**-நான், **प्रयुक्तः**-ஏவப்பட்டிருக்கிறேன், **न स्वतन्त्रः**-ஸ்வதந்திரன் இல்லை.

அத்யாஸம் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் என்று தெரிந்தும் விடமுடியவில்லையே! இதில் எனக்கு ஸ்வாதந்த்ரியம் இல்லை. பிறருக்குக் கட்டுப்பட்டவன். (66)

(அ) குரு சொல்கிருர் :—

न तर्हि अचितिमत्वात् स्वार्थस्त्वम्। येन प्रयुक्तोऽस्वतन्त्रः प्रवर्तसे, स चितिमान् स्वार्थः। संघात एव त्वम् ॥ ६७ ॥

**तर्हि**-அப்படியானுல், **अचितिमत्वात्**-சைதன்யமற்றவனுயிருப்பதால், **त्वं**-நீ, **न स्वार्थः**-ஸ்வதந்திரன் அல்ல, **येन**-எவனுல், **प्रयुक्तः**-ஏவப்பட்டு, **अस्वतन्त्रः**-பரதந்திரனுக, **प्रवर्तसे**-காரியத்தைச் செய்கிருயோ, **सः**-அவன், **चितिमान्**-சேதனன் **स्वार्थः**-ஸ்வதந்திரன், **त्वं**-நீ, **संघात एव**-ஸங்காதம்தான்.

பிறருக்குக் கட்டுப்பட்டு அவரால் ஏவப்பட்டு நீ காரியம் செய்வதாயிருந்தால், நீ அசேதனன் பரதந்திரன் என்றும், எவரால் ஏவப்பட்டு நீ காரியம் செய்கிருயோ, அவர் சேதனன், ஸ்வதந்திரன் என்றும் ஆகும். ஆகவே நீ தேஹாதி ஸங்காதம்தான். (67)

(அ) சிஷ்யன் கேட்கிருன் :—

**यद्यचेतनोऽहम्, कथं सुखदुःखवेदनां, भवदुक्तं च जानामि?**

**अहं**-நான், **यदि अचेतनः**-ஜடமாக இருப்பேனேயாகில், **सुखदुःखवेदनां**-ஸுகதுக்கங்களின் அனுபவத்தையும், **भवदुक्तं च**-உம்மால் சொல்லப்பட்ட சரீரத்தையும், **कथं जानामि**-எப்படி அறிவேன் ?

நான் ஜடமான சரீரமாக இருப்பேனேயாகில் எனக்கு அறிவு இருக்காது. இந்த சரீரத்தையும் ஸுகதுக்கானுபவத்தையும் அறிந்துகொள்ள முடியாது. (68)

**गुरुरुवाच — किं सुखदुःखवेदनाया मदुक्ताच्चान्यस्त्वम्, किं वानन्य एव? इति ॥ ६९ ॥**

**गुरुः**-குரு, **उवाच**-சொன்னுர். **सुखदुःखवेदनायाः**-ஸுகதுக்கானுபவத்திலிருந்தும், **मदुक्तात्च**-என்னுல் சொல்லப்பட்ட ஸங்காதத்திலிருந்தும், **त्वं**-நீ, **किं अन्यः**-வேறுபட்டவனு ? **किं वा अनन्य एव**-வேறுபடாதவன்தானு ? **इति**-என்று.

அந்தக்கரணத்தில் பிரதிபலித்த சைதன்யம்தான் ஜீவன் என்பது. அந்தக்கரணத்துடன் சேர்த்தே ஆத்மவஸ்துவாக எண்ணிக்கொண்டிருப்பதால் இவனுக்கு அத்யாஸம், பாரதந்த்ரியம், முதலியவை எல்லாம் ஏற்படுகிறது. தேஹம், இந்திரியம், அந்தக்கரணம் முதலியவற்றைக் காட்டிலும் வேருக ஆத்மவஸ்துவைத் தெரிந்துகொண்டு விட்டால் அத்யாஸம் முதலியவை ஏற்படாது. இந்த ஞானம் சிஷ்யனுக்கு உறுதியாக ஏற்படுவதற்காக அவனிடம் கேள்வி கேட்கிருர். (69)

**शिष्य उवाच — नाहं तावदनन्यः। कस्मात्? यस्मात्तदुभयं कर्मभूतं घटादिकमिव जानामि। यदि अनन्योऽहम्, तेन तदुभयं न जानीयाम्; किंतु जानामि तस्मादन्यः। सुखदुःखवेदनाविक्रिया च स्वार्थैव प्राप्नोति, त्वदुक्तं च स्यात्, अनन्यत्वे। न च तयोः स्वार्थता**

युक्ता। न हि चन्दनकण्टककृते सुखदुःखे चन्दनकण्टकार्थे ; घटोपयोगो वा घटार्थः । तस्मात् तद्विज्ञातुर्मम चन्दनादिकृतोऽर्थः । अहं हि ततोऽन्यः समस्तमर्थं जानामि बुध्यारूढम् ॥ ७०

**शिष्यः**-சிஷ்யன், **उवाच**-சொன்ஞன். **अहं तावत्**-நான், **न अनन्यः**-வேறுபடாதவன் அல்ல. **कस्मात्**-என்ன காரணத்தால்? **यस्मात्**-யாதொரு காரணத்தால், **घटादिकमिव**-குடம் முதலியவற்றைப்போல, **कर्मभूतं**-அறியப்படும் பொருளாக உள்ள, **तत् उभयं**-அவ்விரண்டையும், **जानामि**-அறிகிறேனே (அதனுல்), **अहं**-நான், **यदि अनन्यः**-வேறுபடாதவனுக இருப்பேனேயாகில், **तेन**-அந்தக்காரணத்தால், **तदुभयं**-அவ்விரண்டையும், **न जानीयां**-அறியமாட்டேன். **किं तु**-ஆனுல், **जानामि**-அறிகிறேன். **तस्मात्**-ஆகையால், **अन्यः**-வேறுபட்டவன், **अनन्यत्वे**-வேறுபடாதவனுக இருப்பேனேயாகில், **सुखदुःखवेदनाविक्रिया च**-ஸுகதுக்கானுபவவிகாரம், **स्वार्थैव प्राप्नोति**-தனக்காகவே ஏற்பட்டதாக ஆகிறது. **त्वदुक्तं च स्यात्**-உங்களால் சொல்லப்பட்ட அநித்யத்வம் முதலான தோஷமும் ஆத்மாவுக்கு வரும். **तयोः**-அவைகளுக்கு, **स्वार्थता**-தனக்காகவே இருக்கும் தன்மை, **न च युक्ता**-சரியல்ல. **चन्दनकण्टककृते**-சந்தனத்தாலும், முள்ளாலும் ஏற்பட்ட, **सुखदुःखे**-இன்பதுன்பங்கள், **नहि चन्दनकण्टकार्थे**-சந்தனத்திற்காகவும் முள்ளிற்காகவும் ஏற்பட்டதல்ல. **घटोपयोगो वा**-குடத்தின் உபயோகம், **न हि घटार्थः**-குடத்திற்காக ஏற்பட்டதலல. **तस्मात्** ஆகையால், **तद्विज्ञातुः**-அவைகளை அறிந்துகொள்கிற, **मम**-எனக்குத்தான், **चन्दनादिकृतः अर्थः**-சந்தனம் முதலியவைகளால் ஏற்பட்ட பிரயோஜனம். **ततः**-அவற்றைக்காட்டிலும், **अन्यः**-வேருன, **अहं**-நான், **बुध्यारूढं**-புத்தியில் வந்துள்ள, **समस्तं अर्थं**-எல்லா விஷயத்தையும், **जानामि हि**-அறிகிறேன் அல்லா!

சிஷ்யன், தான் தேஹாதி ஸங்காதத்தைக் காட்டிலும் வேறுதான் என்பதை நன்கு தெரிந்துகொண்டு குருவின் கேள்விக்குப் பதில் கூறுகிருன், குடம் எதிரில் இருப்பதைப்

பார்த்துத் தெரிந்துகொள்ளும் நான் குடம் அல்ல. குடத்தைக்காட்டிலும் வேறுதான். அறிகிறவன் அறியப்படும் பொருளைக்காட்டிலும் வேருகத்தான் இருக்கமுடியும். தானே தன்னை அறிந்துகொள்வதாகக் கூறுவது சரியல்ல. ஸ்வப்ரகாசமான வஸ்துதான் தானே பிரகாசிக்க முடியும். ஜடவஸ்து அவ்விதம் பிரகாசிக்க முடியாது. தேஹாதிகளை அறிகிறவன் வேறு ஒருவன் இல்லாவிட்டால் தேஹாதிகள் இருப்பதே தெரியாமல் போய்விடும். ஆகையால் தேஹாதிகளையும் ஸுகதுக்கங்களையும் அறியும் நான் அவைகளைக் காட்டிலும் வேருனவன். மேலும் சந்தனத்தால் ஏற்படும் ஸுகமும், முள்ளினுல் ஏற்படும் துன்பமும் சந்தனத்திற்காகவோ, முள்ளுக்காகவோ அல்ல. குடத்தின் பயன் குடத்திற்காக அல்ல. இவற்றை அனுபவிக்கும் வேருெரு சேதனனுக்காகத்தான் ஏற்பட்டது. ஜடத்தின் பயன் ஜடத்திற்கு இருக்கமுடியாது. அது சேதனனுக்குத்தான். இவை எல்லாம் புத்தியில் வரும்பொழுது எனக்கு ஞானம் ஏற்படுகிறது. ஆகவே இவற்றை அறிந்து இதன் பயனை அனுபவிக்கும் நான் இவற்றைக்காட்டிலும் வேருனவனே.

तं गुरुरुवाच — एवं तर्हि स्वार्थस्त्वं चितिमत्वात्, न परेण प्रयुज्यसे। न हि चितिमान् परतन्त्रः परेण प्रयुज्यते, चितिमतः चितिमदर्थत्वानुपपत्तेः, समत्वात् प्रदीपप्रकाशयोरिव। नापि अचितिमदर्थत्वं चितिमतो भवति, अचितिमतोऽचितिमत्वादेव स्वार्थसंबन्धानुपपत्तेः। नापि अचितिमतोः अन्योन्यार्थत्वं दृष्टम्। न हि काष्ठकुड्ये अन्योन्यार्थं कुर्वाते ॥ ७१ ॥

तं–அவனைப்பார்த்து, गुरुः–ஆசார்யர், उवाच–சொன்னுர் एवं तर्हि–இப்படியானுல், त्वं–நீ, चितिमत्वात्–அறிவுள்ளவனுயிருப்பதால், स्वार्थः–தனக்காகவே இருப்பவன். परेण–பிறரால், न प्रयुज्यसे–ஏவப்படவில்லை, चितिमान्–ஞானமுள்ளவன், परतन्त्रः–பிறருக்குக் கட்டுப்பட்டவனுக, परेण–பிறரால், नहि प्रयुज्यते–ஏவப்படுகிறதில்லையல்லவா! प्रदीपप्रकाशयोरिव–இரு தீபங்களின் பிரகாசங்களைப்போல,

**समत्वात्** - ஸமமாயிருப்பதால், **चितिमतः** - சைதன்யமுள்ளவனுக்கு **चितिमदर्थत्वानुपपत्तेः**-சைதன்யமுள்ள மற்றவனின் பிரயோஜனத்திற்காக இருப்பது யுக்தமில்லாததால். **अचितिमतः** - சைதன்யமில்லாதது, **अचितिमत्वादेव**-ஜடமாக இருப்பதனுலேயே, **स्वार्थसंबन्धानुपपत्तेः**-தனக்காக இருப்பது என்பது பொருந்தாததால், **चितिमतः** – சைதன்யமுள்ள பொருளுக்கு, **अचितिमदर्थत्वं**-ஜடப்பொருளின் பிரயோஜனத்திற்காக இருக்கும் தன்மை, **नापि भवति**-பொருந்தாது. **अचितिमतोः**-இரு ஜடப்பொருள்களுக்கு, **अन्योन्यार्थत्वं**-ஒன்றுக்கொன்றுக்காக இருக்கும் தன்மை, **नापि दृष्टं**-கண்டதில்லை. **काष्ठकुड्ये**-மரக் கட்டையும் சுவரும், **अन्योन्यार्थं** - ஒன்றுக்கொன்று பயனை, **न हि कुर्वाते** - செய்துகொள்கிறதில்லை.

ஜடமான தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்டவனுன நீ சேதனன். ஆகையினுலேயே நீ பிறருக்குப் பயனை உண்டுபண்ணுவதற்காக இருக்கவில்லை. உனக்காகத்தான் ஜடவர்க்கங்கள் இருக்கின்றன. நீ ஸ்வதந்திரன் எல்லாவற்றையும் நீ தான் ஏவுகிருய் பிறவற்ருல் நீ ஏவப்படுவதில்லை. ஜடப்பொருள் ஜடமாக இருப்பதனுலேயே அதன் பயன் சேதனனுக்குத்தான். ஜடத்துக்கு அல்ல. அப்படியிருக்க ஜடப்பொருளின் பயனுக்காக சேதனன் இருப்பதாக எப்படிக் கூறமுடியும்? ஒரேமாதிரி ஒளி உள்ள இரு தீபங்கள் ஸமமாக இருப்பதால் ஒன்றுக்கொன்று பயனைச் செய்து கொள்வதில்லை. இதுபோலவே ஸமமாக உள்ள இருசேதனர்கள் ஒருவருக்கொருவர் உபகாரம் செய்துகொள்வதில்லை. ஜடப்பொருள்கள் ஒன்றுக்கொன்று உதவி செய்து கொள்வதாகக்கூறுவதும் சரியல்ல ஒரே வீட்டிலுள்ள மரமும், சுவரும் ஒன்றுக்கொன்று உதவி செய்து கொள்கிறதா ? இவ்விரண்டும் சேர்ந்து சேதனனை புருஷனுக்குத்தான் பயனைத்தருகின்றன. ஆகவே ஜடவர்க்கங்களால் ஏற்படும் பயனைப் பெறுகிறவன் நீ. நீ ஸ்வதந்திரன், நீதான் எல்லாவற்றையும் ஏவுகிருய் "நான் பரதந்திரன், பிறரால் ஏவப்பட்டு ஆரோபம் செய்கிறேன்" என்று நீ கூறுவது சரியல்ல. (71)

ननु चितिमत्त्वे समेऽपि भृत्यस्वामिनोरन्योन्यार्थत्वं दृष्टम्? ॥

**चितिमत्त्वे**-அறிவுடன் கூடியிருக்கும் தன்மை, **समेऽपि**-ஸமமாக இருந்தபோதிலும், **भृत्यस्वामिनोः** - வேலைக்காரனுக்கும் யஜமானனுக்கும், **अन्योन्यार्थत्वं**-ஒருவருக்கொருவர் பயனடையும் தன்மை, **ननु दृष्टम्** - காணப்பட்டுள்ளதே?

யஜமானன், வேலைக்காரன் இருவரும் சேதனர்கள். யஜமானனிடம் உள்ளதுபோலவேதான் வேலைக்காரனிடமும் சைதன்யம் இருக்கிறது. இந்த விஷயத்தில் இருவர்களும் ஸமானர்கள்தான். ஆனாலும் யஜமானனால் வேலைக்காரனும், வேலைக்காரனால் யஜமானனும் பயன் பெறுகிறார்களே! ஆகவே இரு சேதனர்கள் ஒருவருக்கொருவர் பயன்பெறுவதில்லை என்று எப்படிக் கூறமுடியும் என்று சிஷ்யன் கேட்டான். (72)

(அ) குரு பதில் கூறுகிறார்:—

नैवम्, अग्नेरुष्णप्रकाशवत्तव चितिमत्त्वस्य विवक्षितत्वात् । प्रदर्शितश्च दृष्टान्तः प्रदीपप्रकाशयोरिवेति । तत्रैवं सति स्वबुद्ध्यारूढमेव सर्वमुपलभसे अग्न्युष्णप्रकाशतुल्येन कूटस्थनित्यचैतन्यस्वरूपेण । यदि चैवमात्मनः सर्वदा निर्विशेषत्वमुपगच्छसि, किमित्यूचिवान् 'सुषुप्ते विश्रम्य विश्रम्य जाग्रत्स्वप्नयोर्दुःखमनुभवामि, किमयमेव मम स्वभावः, किं वा नैमित्तिकः' इति च । किमसौ व्यामोहोऽपगतः, किं वा न? ॥

**अग्नेः**-அக்னியின், **उष्णप्रकाशवत्** - சூடும் ஒளியும்போல, **तव**-உன், **चितिमत्त्वस्य**-சைதன்யம், **विवक्षितत्वात्** - கருத்துக்கு விஷயமானதால், **नैवम्** - இவ்வாறு அல்ல. **प्रदीपप्रकाशयोरिव**-விளக்கு, ஒளி இவைகளுக்குப் போல, **इति**-என்று, **दृष्टान्तश्च** - திருஷ்டாந்தமும், **प्रदर्शितः**-காட்டப்பட்டு இருக்கிறது. **तत्र एवं सति**-அது இவ்வாறிருக்கும்பொழுது, **स्वबुद्ध्यारूढं**-தன் புத்தி விருத்தியில் ஏறின, **सर्वमेव** - எல்லாவற்றையுமே, **अग्न्युष्णप्रकाशतुल्येन**-நெருப்பிலுள்ள சூடு, ஒளி இவைகளுக்கு

ஒப்பான, कूटस्थनित्यचैतन्यस्वरूपेण - மாறுதலற்றதும், அழிவற்றதுமான தன் ஸ்வரூபமான சைதன்யத்தால், उपलभसे- அறிந்து கொள்கிறாய். एवं-இவ்வாறு, सर्वदा-எப்பொழுதும், आत्मनः-ஆத்மாவின், निर्विशेषत्वं-விசேஷமில்லாதிருக்கும் தன்மையை, यदि च उपगच्छसि-ஒப்புக்கொள்வாயேயானால், 'सुषुप्ते-ஸுஷுப்தியில், विश्रम्य विश्रम्य-விட்டு விட்டு, जाग्रत्स्वप्नयोः-நனவிலும் கனவிலும், दुःखं-துன்பத்தை, अनुभवामि- அனுபவிக்கிறேன். अयमेव-இதுவே, मम-என்னுடைய, किं स्वभावः-ஸ்வபாவமா? किं वा-அல்லது नैमित्तिकः-காரணத்தால் ஏற்பட்டதா, इति च-என்றும், किमिति ऊचिवान्-என்ன காரணத்தால் சொன்னாய். असौ-அந்த, व्यामोहः-மயக்கம், किं अपगतः-நீங்கி விட்டதா, किं वा न-அல்லது இல்லையா?

சூடும் ஒளியும் அக்னியின் ஸ்வரூபத்தில் சேர்ந்துள்ளது போல் சைதன்யம்தான் உன் ஸ்வரூபம். ஒரு தீபத்தின் வெளிச்சம் மற்றொர் தீப ஒளியிலிருந்து பயனடைவதில்லை. இதுபோல இரண்டு சைதன்யங்கள் ஒன்றுக்கொன்று பயன் அடைவதில்லை. வேலைக்காரனின் தேஹத்தால் யஜமானனுக்கும், யஜமானனில் தேஹத்தால் வேலைக்காரனுக்கும் பயன் ஏற்படுகிறதே தவிற அங்கும் சைதன்யங்கள் ஒன்றுக்கொன்று உதவிக்கொள்வதில்லை. ஆகவே நீ சொன்ன திருஷ்டாந்தம் சரியல்ல. உன்னுடைய ஸ்வரூபமான ஞானம் மாறுதலற்றது. அழிவற்றது எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருப்பது அக்னியின் சூடு, ஒளி போன்றது. அந்த ஞானத்தில் ஒரு விசேஷமும் கிடையாது விஷயங்கள் மனத்துடன் ஸம்பந்தப்பட்டு விருத்தியுண்டாகும்பொழுதும் அதன் மூலம் ஸ்வரூப ஞானம்தான் விஷயங்களை பிரகாசப்படுத்துகிறது. அப்பொழுது விசேஷம் தோன்றுகிறது, இது ஆகந்துகம். விருத்திகள் நீங்கிவிட்டால் (ஸுஷுப்தியில்) நிர்விசேஷமாக ஞானம் பிரகாசிக்கிறது. விருத்திகளால் ஏற்படும் விசேஷங்கள் சைதன்யத்தின் ஸ்வரூபத்தில் சேர்ந்ததல்ல. அத்யாஸத்தால் ஏற்பட்டது. ஆகவே ஸுஷுப்தியில் ஆத்மாவிற்கு அறிவு இல்லையென்றும், கனவிலும் நனவிலும் ஆத்மாவுக்கு

துக்கானுபவம் ஏற்படுவதாகவும் நீ (45ல்) கூறியது அவிவேகத்தால். அது இப்பொழுது நீங்கிவிட்டதா? (73)

इत्युक्तः शिष्य उवाच — भगवन् अपगतस्त्वत्प्रसादात् व्यामोहः; किन्तु मम कूटस्थतायां संशयः। कथम्? शब्दादीनां स्वतः सिद्धिर्नास्ति, अचेतनत्वात्, शब्दाद्याकारप्रत्ययोत्पत्तेस्तु तेषाम्। प्रत्ययानामितरेतरव्यावृत्तविशेषणानां नीलपीताद्याकारवतां स्वतःसिध्यसंभवात्। तस्मात् बाह्याकारनिमित्तत्वं गम्यत इति बाह्याकारवच्छब्दाद्याकारत्वासिद्धिः। तथा प्रत्ययानामप्यहंप्रत्ययालम्बनवस्तुभेदानां संहतत्वादचैतन्योपपत्तेः स्वार्थत्वासंभवात् स्वरूपव्यतिरिक्तग्राहकग्राह्यत्वेन सिद्धिः, शब्दादिवदेव। असंहतत्वे सति चैतन्यात्मकत्वात् स्वार्थोऽप्यहंप्रत्ययानां नीलपीताद्याकाराणामुपलब्धेति विक्रियावानेव, कथं कूटस्थः? इति संशयः॥

इति-என்று, उक्तः-சொல்லப்பட்ட, शिष्यः-சிஷ்யன், उवाच-சொன்னான். भगवन्-பூஜ்யரே, त्वत्प्रसादात्-உங்களுடைய அனுக்ரஹத்தால், व्यामोहः-அவிவேகம், अपगतः-நீங்கிவிட்டது. किंतु-ஆனால், मम-எனக்கு, कूटस्थतायां-மாறாதிருக்கும் தன்மை விஷயத்தில், संशयः-ஸந்தேஹம் (இருக்கிறது.) कथम्-எப்படி? अचेतनत्वात्-ஜடமாக இருப்பதால், शब्दादीनां-சப்தம்முதலான விஷயங்களுக்கு, स्वतः-தானாகவே, सिद्धिः-பிரஸித்தி, नास्ति-கிடையாது. शब्दाद्याकारप्रत्ययोत्पत्तेस्तु-சப்தம் முதலியவைகளின் வடிவம் கொண்ட ஞானம் உண்டாவதால்தான், तेषां-அவைகளுக்கு (பிரஸித்தி) इतरेतरव्यावृत्तविशेषणानां-ஒன்றுக்கொன்று மாறுபட்ட விசேஷணங்களை உடைய, नीलपीताद्याकारवतां-நீலம், மஞ்சள் முதலான உருவம்கொண்ட, प्रत्ययानां-ஞானங்களுக்கு, स्वतःसिद्ध्यसंभवात्-தானாகவே ப்ரஸித்தி ஏற்படாததால், तस्मात्-ஆகையால், बाह्याकारनिमित्तत्वं-வெளிப்பட்டதான உருவத்தைக் காரணமாக உடையதாயிருக்கும் தன்மை, गम्यते-அறியப்படுகிறது, इति-என்ற காரணத்தால், बाह्याकारवच्छब्दाद्याकारत्वासिद्धिः-வெளிப்பட்ட உருவத்

துடன் கூடிய சப்தம் முதலியவற்றின் உருவம் உள்ளதாக ஸித்திக்கிறது. तथा-அவ்வாறே, अहंप्रत्ययालम्बनवस्तुभेदानां-நான் என்ற நினைப்புக்கு ஆஸ்பதமான அந்தக்கரணவஸ்துவின் விருத்தி விசேஷங்களான, प्रत्ययानामपि-ஞானங்களுக்கும், संहतत्वात्-சேர்ந்திருக்கும் காரணத்தால், अचैतन्योपपत्तेः-ஜடத்தன்மை பொருந்தியிருப்பதால், स्वार्थत्वासंभवात्-தனக்காக உள்ளது என்பது ஸம்பவிக்காததால், शब्दादिवदेव-சப்தம் முதலியவைபோல, स्वरूपव्यतिरिक्तग्राहकग्राह्यत्वेन-தன் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறான அறியும் வஸ்துவால் அறியப்படுவதால், सिद्धिः-ப்ரஸித்தி ஏற்படுகிறது. असंहतत्वे सति-ஒன்றிலும் சேராமலிருந்துகொண்டு, चैतन्यात्मकत्वात्-சைதன்யரூபமாக இருப்பதால், स्वार्थोपि-தனக்காக ஏற்பட்டுள்ள போதிலும் ஆத்மா, नीलपीताद्याकाराणां-நீலம், மஞ்சள் முதலிய வடிவம்கொண்ட, अहंप्रत्ययानां-அந்தக்கரணவிருத்திகளை, उपलब्धा इति - அறிகிறவர் என்ற காரணத்தால், विक्रियावानेव - விகாரமுள்ளவர்தான். कथं-எப்படி, कूटस्थः-மாறுபாடு இல்லாதவர்? इति-என்று, संशयः-ஸந்தேஹம்.

ஆத்மா ஞானஸ்வரூபர் என்ற விஷயத்தில் தங்கள் அனுக்ரஹத்தால் ப்ராந்தி நீங்கினாலும் அவர் கூடஸ்தர் (நிர்விகாரர்) தானா என்ற விஷயத்தில் ஸந்தேஹம் இருக்கிறது. எப்படியெனில் உலகில் சப்தம் முதலான விஷயங்கள் ஜடமானதால் அவைகளுக்குத் தானாகவே ப்ரஸித்தி கிடையாது. அவைகளின் விஷயமான ஞானத்தால்தான் பிரஸித்தி ஞானத்தில் நீலஞானம், பீதஞானம் என்று பலவித வேற்றுமைகள் இருப்பதால் நீல பீதாத்யாகாரத்துடன் கூடிய ஞானங்களுக்கும் தானாகவே ஸித்தி கிடையாது வெளிப்பட்டதான விஷயங்களை அனுஸரித்துத்தான் இம்மாதிரியான ஞானங்கள் ஏற்படுகின்றன. ஆகையால் 'பாஹ்யமான விஷயமே கிடையாது. எல்லாம் விஜ்ஞான ஸ்வரூபம்தான்' என்று விஜ்ஞானவாதி கூறுவது சரியல்ல பாஹ்யமான விஷயங்கள் இல்லாவிட்டால் ஞானத்தில் இத்தனை வேற்றுமை எப்படி ஏற்படும்? ஞானம் என்பது அந்தக்கரணவிருத்தி. அது வந்து போகக்கூடியது,

விஷயத்துடன் சேர்ந்துள்ளது. அதனால் அது ஜடம். பிறருக்காகத்தான் ஏற்பட்டிருக்கவேண்டும். தன்னைக் காட்டிலும் வேறான சேதனனால் அறியப்படுவதால்தான் அதற்கும் பிரஸித்தி. ஆத்மா ஒன்றுடனும் சேராத சைதன்யமாக இருந்தாலும் நீல-பீதாதி வடிவமான விருத்திகளை அறிந்து கொள்கிறார். விருத்தி உண்டாகும்பொழுது அது விஷயமான ஞானம் ஏற்படுகிறது. விருத்தி போய் விட்டால் ஞானமும் போய்விடுகிறது ஆகவே இம்மாதிரியான மாறுபாடுகளுடன் கூடிய ஆத்மாவை எவ்வாறு கூடஸ்தர் (நிர்விகாரர்) என்று கூறமுடியும் என்று ஸந்தேஹம் ஏற்படுகிறது. (74)

तं गुरुरुवाच — न युक्तस्तत्र संशयः, यतस्तेषां प्रत्ययानां नियमेन अशेषतः उपलब्धेरेव अपरिणामित्वात् कूटस्थत्वसिद्धौ निश्चयहेतुमेव अशेषचित्तप्रचारोपलब्धिं संशयहेतुमात्थ। यदि हि तव परिणामित्वं स्यात्, अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धिर्न स्यात्; चित्तस्येव स्वविषये, यथा चेन्द्रियाणां स्वविषयेषु, न च तथा आत्मनस्तव स्वविषयैकदेशोपलब्धिः। अतः कूटस्थतैव तवेति ॥ ७५ ॥

**तं**-அவனைப்பார்த்து, **गुरुः**-ஆசார்யர், **उवाच**-சொன்னார். **तव**-உனக்கு, **संशयः**-ஸந்தேஹம் (ஏற்படுவது), **न युक्तः**-யுக்தமல்ல. **यतः**-ஏனெனில், **नियमेन**-நிச்சயமாக, **तेषां**-அந்த, **प्रत्ययानां**-அந்தக்கரணவிருத்திகளை, **अशेषतः**-முழுவதும், **उपलब्धेरेव**-அறியும் காரணத்தினாலேயே, **अपरिणामित्वात्**-விகாரம் அடையாமலிருப்பதால், **कूटस्थत्वसिद्धौ**-மாறுபாடற்ற தன்மை ஸித்திக்கும்பொழுது, **निश्चयहेतुं**-தீர்மானிப்பதற்குக் காரணமான, **अशेषचित्तप्रचारोपलब्धिमेव**-மனதில் உண்டாகும் எல்லா விருத்திகளையும் அறிவதையே, **संशयहेतुं**-ஸந்தேஹத்திற்குக் காரணமாக, **आत्थ**-கூறுகிறாயே! **तव**-உனக்கு, **परिणामित्वं**-விகாரமானது, **यदि हि स्यात्**-இருக்குமேயாகில், **अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धिः**-தனக்கு விஷயமான மனோவிருத்திகள் எல்லாவற்றின்

அறிவானது, न स्यात्-ஏற்படாது. चित्तस्य-மனதிற்கு, स्वविषये इव-தனது விஷயத்தில்போலும், इन्द्रियाणां-இந்திரியங்களுக்கு, स्वविषयेषु-தன் விஷயங்களில், यथा च-எப்படியோ, तथा-அதுபோலும், आत्मनः-ஆத்மாவாகிய, तव-உனக்கு, स्वविषयैकदेशोपलब्धिः-தனது விஷயங்களில் சிலவற்றைமட்டும் அறிவது, न च-இல்லை. अतः-ஆகையால் तव-உனக்கு, कूटस्थतैव-மாறுபாடற்ற தன்மைதான் इति-என்று.

அந்தக்கரணத்தில் மாறி மாறி உண்டாகும் விருத்திகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிந்து கொள்கிறபடியால் ஆத்மாவுக்கும் மாறுபாடு உண்டாகுமே! அவரை எப்படி கூடஸ்த்தர் என்று சொல்ல முடியும் என்று தன் ஸந்தேஹத்தை சிஷ்யன் கேட்டான். சிஷ்யன் கூறும் காரணத்தைக்கொண்டே, அதாவது மனோவிருத்திகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிகிறபடியினாலேயே, ஆத்மா கூடஸ்த்தர்தான் என்று குரு ஸமாதானம் கூறுகிறார். கூடஸ்த்தமில்லாத (மாறுபாடுள்ள) மனம், இந்திரியங்கள் இவைகள் எல்லாம் தனது விஷயங்கள் எல்லாவற்றையும் அறிகிறதில்லை. சிலவற்றைத்தான் அறிகின்றன. எந்த எந்த விஷயமாக மனம் மாறுபாடு அடைகிறதோ அவற்றைத்தான் மனம் அறிகிறது. மனத்தால் அறியப்படாத பொருள்கள் உலகில் ஏராளமாக இருக்கின்றன. இதுபோலவே கண் தன்னுடன் ஸம்பந்தப்படும் உருவத்தைத்தான் பார்க்கிறது. காது தன்னுடன்சேரும் சப்தத்தைத்தான் கேட்கிறது. இதுபோல்தான் ஒவ்வொரு இந்திரியமும். இவைகளாலறியப்படாத சப்தம், ரூபம் முதலான விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன. ஆகவே தனது விஷயங்களில் சிலவற்றைமட்டும் அறியும் மனம், இந்திரியம் இவைகளை விகாரமுள்ளதாகச் சொல்லலாம். ஆத்மாவோ அப்படியல்ல. ஆத்மாவின் விஷயம் மனோவிருத்திகள் தாம். அவைகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிகிறது ஆத்மாவால் அறியப்படாத மனோவிருத்திகளே கிடையாது. ஆத்மா மாறுபாடு அடையுமானால் எல்லாவற்றையும்

எப்படி அறிந்துகொள்ள முடியும்? ஆகையால் ஆத்மா கூடஸ்த்தன் தான். (75)

**तत्राह — उपलब्धिर्नाम धात्वर्थो विक्रियैव, उपलब्धुः कूटस्थात्मता चेति विरुद्धम् ॥ ७६ ॥**

**तत्र**-அதில், **आह**-(சிஷ்யன்) கேட்கிருன்:—**उपलब्धिर्नाम**-அறிவு என்ற, **धात्वर्थः**-தாதுவின் பொருளானது, **विक्रियैव**-விகாரம்தான் என்பதும், **उपलब्धुः**-அறிகிறவருக்கு, **कूटस्थात्मता इति च** – மாறுபாடில்லாத ஸ்வரூபமாக இருக்கும் தன்மை என்பதும், **विरुद्धम्**–விருத்தமானது.

'உப' (उप) என்ற உபஸர்கத்துடன் சேர்ந்த 'லப்' (लभ्) என்ற தாதுவிற்குப் பின்ஞல் 'கர்த்தா' என்ற அர்த்தத்தில் 'த்ருச்' (तृच्) ப்ரத்யயம் வந்து 'உபலப்தா' என்ற பதம் ஏற்படுகிறது. தாதுவின் பொருள் 'க்ரியை' என்பது வியாகரண சாஸ்திரத்தின் தீர்மானம். க்ரியை உண்டாகி நசிக்கக்கூடியது. ஆகவே இங்கும் தாத்வர்த்த க்ரியாரூபமான ஞானம் ஆத்மாவில் உண்டாகி நாசமடைவதால் ஆத்மா விகாரமுள்ளதுதானே! எப்படி கூடஸ்தஞக இருக்க முடியும்? (76)

**न, धात्वर्थविक्रियायां उपलब्ध्युपचारात् । यो हि बौद्धः प्रत्ययः स धात्वर्थो विक्रियात्मकः आत्मनः उपलब्ध्याभासफलावसान इति उपलब्धिशब्देन उपचर्यते, यथा छिदिक्रिया द्वैधीभावफलावसानेति धात्वर्थत्वेनोपचर्यते तद्वत् ॥ ७७ ॥**

**न**–அல்ல, **धात्वर्थक्रियायां**–தாதுவின் பொருளான க்ரியையில், **उपलब्ध्युपचारात्** -உபலப்தி என்று உபசாரமாகக் (கௌணமாகக்) கூறுவதால். **यो हि**–எது, **बौद्धः**–புத்தியைச் சேர்ந்ததான, **प्रत्ययः**–பரிணமமோ, **सः**–அது, **धात्वर्थः**–தாதுவின் பொருளாகவும், **विक्रियात्मकः**–விகாரஸ்வரூபமாயும், **आत्मनः**–ஆத்மாவின், **उपलब्ध्याभासफलावसानः**–

ஸ்வரூபபூத ஞானத்தின் ப்ரதிபிம்பரூபமான பலனை முடிவாகக்கொண்டது, इति-என்ற காரணத்தால், उपलब्धि-शब्देन-'உபலப்தி' பதத்தால், उपचर्यते-கௌணமாகச் சொல்லப்படுகிறது. यथा-எப்படி, छिदिक्रिया-சேதனம் (வெட்டுதல்) என்ற வியாபாரமானது, द्वैधीभावफलावसाना इति-இருகூருகப்போவது என்ற பலனில் முடிவுறுகிறது என்ற காரணத்தினுல், धात्वर्थत्वेन-தாதுவின் பொருளாக उपचर्यते-கௌணமாகச் சொல்லப்படுகிறதோ, तद्वत्-அதுபோல.

தாதுவின் பொருள் க்ரியை என்பதும், பிரத்யயத்தின் பொருள் கர்த்தா என்பதும் பொதுவாக உள்ளதே தவிற சில இடங்களில் இதற்கு மாறுபாடும் காணப்படுகிறது. सविता प्रकाशते என்ற இடத்தில் தாத்வர்த்தமான ப்ரகாசம் ஸூரியனுடைய ஸ்வரூபம்; அது க்ரியை அல்ல. ஸூரியன் கர்த்தாவும் அல்ல. அது போல உபலப்தி (ஞானம்) என்பது க்ரியை அல்ல. அது ஆத்மாவின் ஸ்வரூபம். புத்தியில் ஏற்படும் பரிணுமமான அந்தக்கரண விருத்தி தான் தாத்வர்த்தமான கிரியா ரூபம். இது உண்மையில் உபலப்தியல்ல. ஆனுலும் நெருப்பில் காய்ச்சிய இரும்பு நெருப்பாகத் தோன்றுவதுடன் 'அந்த இரும்பு சுடுகிறது' என்றும் சொல்வதைக் காண்கிறோம். அதுபோல அந்தக் கரணபரிணுமமான விருத்தியில் சைதன்ய ப்ரதிபிம்பம் ஏற்படுவதாலும், அந்தக்கரணபரிணும ரூபமான க்ரியைக்கு இதுவே பலனுனதாலும் தாத்வர்த்தமான அந்தக்கரண பரிணுமரூப விருத்தியையே உபலப்தி என்று உபசாரமாகச் சொல்லப்படுகிறது. வெட்டுவது என்ற வியாபாரத்தால் இருகூருகப்போவது என்ற பலன் ஏற்படுவதால் அதையே தாத்வர்த்தமாகச் சொல்வதில்லையா? ஆகவே அந்தக்கரண மானது விகாரத்துடன் கூடியதாகவும் கர்த்தாவாகவும் இருந்தபோதிலும் நித்யமான உபலப்தி ஸ்வரூபமான ஆத்மாவுக்கு விகாரமோ, கர்த்ருத்வமோ ஒன்றும் கிடையாது. அது கூடஸ்தம்தான். அந்தக்கரணம் விகாரமுள்ளதாகவும், உபலப்தி ஸ்வரூபமான ஆத்மா

கூடஸ்தமாகவும் உண்மையில் இருந்தபோதிலும் அந்தக் கரணத்தில் ஆத்மா ப்ரதிபலிக்கிறபடியால், அவிவேகத்தால் நெருப்பை நீளம், வட்டம் என்று சொல்லுவதுபோல் கூடஸ்தமான ஆத்மாவை அந்தக்கரண தர்மங்களுடன் கூடியதாக ப்ராந்தியால் சொல்கிறோம். (77)

इत्युक्तः शिष्य आह—ननु भगवन्, मम कूटस्थत्वप्रतिपादनं प्रत्यसमर्थो दृष्टान्तः । कथम्? छिदिः छेद्यविक्रियावसाना उपचर्यते यथा धात्वर्थत्वेन, तथा उपलब्धिशब्दोपचरितोऽपि धात्वर्थो बौद्धप्रत्ययः आत्मनः उपलब्धिविक्रियावसानश्चेत्, नात्मनः कूटस्थतां प्रतिपादयितुं समर्थः ॥ ७८ ॥

इति-இவ்வாறு, उक्तः-சொல்லப்பட்ட, शिष्यः-சிஷ்யன் आह—சொன்னான். ननु भगवन्—ஸ்வாமி! मम—எனக்கு, कूटस्थत्वप्रतिपादनं प्रति—விகாரமற்றதாக இருக்கும் தன்மையை விளக்குவதைக்குறித்து, दृष्टान्तः—உதாஹரணம், असमर्थः—சக்தியுடையதல்ல, कथम्?—எப்படி?, छेद्यविक्रियावसाना—ச்சேத்யமான (வெட்டுப்படுகின்ற) மரத்தில் த்வைதீபாவம் (இருகூறாகப்போவது) என்னும் விகாரத்தில் முடிவடைகிற छिदिः-ச் சி தி க் ரி யை யா ன து, धात्वर्थत्वेन-தாதுவின் பொருளாக, यथा-எப்படி, उपचर्यते—உபசாரமாகச் சொல்லப் படுகிறதோ, तथा-அப்படியே, उपलब्धिशब्दोपचरितोऽपि-உபலப்தி பதத்தால் உபசாரமாகக் கூறப்பட்டபோதிலும், धात्वर्थः—தாதுவின் பொருளான बौद्धप्रत्ययः—புத்தி விருத்தியானது, आत्मनः- ஆத்மாவின், उपलब्धिविक्रियावसानश्चेत्—ஞானம் என்னும் விகாரத்தில் முடிவடையுமானால், आत्मनः-ஆத்மாவிற்கு, कूटस्थतां—கூடஸ்தனாக (விகாரமற்றவனாக) இருக்கும் தன்மையை, प्रतिपादयितुं-விளக்குவதற்கு, न समर्थः-ஸாமர்த்தியமுடையது அல்ல.

வெட்டுவது என்னும் க்ரியை ச்சிதி ( छिदि ) தாதுவின் பொருளாக இருந்தபோதிலும் மரத்தில் இரு துண்டாகப்

போவது என்னும் விகாரத்தை ஏற்படுத்தும் அந்த வியாபாரத்தைத்தான் ச்சிதி தாதுவின் பொருளாகக் கௌணமாகச் சொல்கிறோம். அதுபோல் உபலப்தி பதத்தால் கௌணமாகச் சொல்லப்பட்டபோதிலும் தாத்வர்த்தமான புத்தி விருத்தியானது ஆத்மாவில் உபலப்தி என்னும் விகாரத்தை ஏற்படுத்துமானால் தான் தாத்வர்த்தமாகும். அதாவது சேதன் வியாபாரத்தால் ஏற்படும் த்வைதீபாவம் என்னும் பலன் எப்படி விகாரமோ, அதுபோல் புத்தி விருத்தியினால் ஆத்மாவில் ஏற்படும் உபலப்தி என்ற பலனும் விகாரம் தான். ஆத்மா விகாரியானதால் எவ்வாறு கூடஸ்தனாகும்? (78)

गुरुरुवाच—सत्यमेवं स्यात् यदि उपलब्ध्युपलब्धोर्विशेषः । नित्योपलब्धिमात्र एव हि उपलब्धा । नतु तार्किकसमय इवान्या उपलब्धिः अन्य उपलब्धा च ॥ ७९ ॥

**गुरुः**-ஆசாரியன், **उवाच**-சொன்னார், **सत्यं**-வாஸ்தவம், **उपलब्ध्युपलब्धोः**- அறிவுக்கும் அறிகிறவனுக்கும், **विशेषः**- வேறுபாடு, **यदि**-இருக்குமானால், **एवं स्यात्**-நீ சொன்னவாறு ஆகும். **उपलब्धा**-அறிகிற ஆத்மா, **नित्योपलब्धिमात्र एव हि**- அழிவற்ற ஞான ஸ்வரூபனாக மட்டும்தான் இருக்கிறான் அல்லவா! **तार्किकसमये इव**-நியாய ஸித்தாந்தத்தில் போல **उपलब्धिः**-அறிவு, **अन्या**-வேறு, **उपलब्धा च**-அறிகிறவனும் **अन्यः**-வேறு (என்பது), **नतु**-இல்லை

நியாய சாஸ்திரத்தில் உபலப்தாவான ஆத்மா வேறு, உபலப்தி (ஞானம்) வேறு. ஆத்மாவில் ஞானம் உண்டாகிறது பின் மறைந்து விடுகிறது. ஆத்மாவில் ஞானம் என்னும் விகாரம் உண்டாகி மறைவதாகச் சொல்வதால் அவர்கள் ஆத்மாவை கூடஸ்தன் (நிர்விகாரன்) என்று சொல்லமுடியாது. அவர்கள் சொல்வது சரியல்ல உண்மையில் உபலப்தி என்ற ஞானத்திற்கும் உபலப்தாவான ஆத்மாவுக்கும் சிறிதும் வேற்றுமை கிடையாது. ஆத்மாவின் ஸ்வரூபமே உபலப்திதான், அது நித்யம். வந்து

போகக்கூடியதில்லை. நித்ய உபலப்தி ஸ்வரூபமான ஆத்மாவில் எவ்விதமான விகாரம்தான் கூறமுடியும்.? ஆகையால் ஆத்மா கூடஸ்தன்தான். பிறந்தது முதல் வாயைத்திறவாமல் ஜடன் போலும் மூகன் போலும் இருந்த ஹஸ்தாமலகரைப் பார்த்து ஸ்ரீ சங்கர பகவத்பாதர் 'நீ யார்' என்று கேட்க அவர் அளித்த பதில் 'स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा' என்பதுதான். (79)

(அ) சிஷ்யன் கேட்கிறுன்:—

ननूपलब्धिफलावसानो धात्वर्थः कथमिति ? ॥ ८० ॥

**धात्वर्थः** – தாதுவின் பொருள், **उपलब्धिफलावसानः** - உபலப்தி என்னும் பலத்தில் முடிவுபெறுகிறது **इति**-என்பது, **ननुकथम्**-எப்படி ?

வியாபாரமும் அதனுல் ஏற்படும் பலனும் தாதுவின் பொருள். ஆத்மாவில் உள்ள உபலப்தி நித்யமானுல் அதை வியாபார ஜன்யபலமாகவோ, தாத்வர்த்தமாகவோ எப்படிச் சொல்ல முடியும் ? (80)

उच्यते शृणु, उपलब्ध्याभासफलावसान इत्युक्तम् । किं न श्रुतं तत् त्वया ? न त्वात्मा विक्रियोत्पादनावसान इति मयोक्तम् ॥ ८१ ॥

**उच्यते**-சொல்லப்படுகிறது, **शृणु**-கேள், **उपलब्ध्याभासफलावसान इति**-உபலப்தியின் பிரதிபிம்பமாகிற பலனில் முடிவடைகிறது என்று, **उक्तम्**-சொல்லப்பட்டது. **तत्**-அது **त्वया**-உன்னுல், **किं न श्रुतम्**-காதால் கேட்கப்படவில்லையா ? **आत्मा**-ஆத்மாவானது, **न तु विक्रियोत्पादनावसान इति**-விகாரமுண்டாகும் இடமல்ல என்று, **मया**-என்னுல், **उक्तम्**-சொல்லப்பட்டிருக்கிறது.

வியாபாரமும், அதனுல் ஏற்படும் பலமும் தாத்வர்த்தம் என்பதும் அந்த பலம் விகாரம்தான் என்பதும் வாஸ்தவம். ஆனுல் இங்கு உபலப்தி என்பது ஆத்மாவின் ஸ்வரூபம்'

அது பலமும் அல்ல, விகாரமுமல்ல. ஆத்மாவில் ஒருவித விகாரமும் ஏற்பட முடியாது என்பது பல தடவைகளில் உனக்குக் கூறப்பட்டிருக்கிறது. புத்தி விருத்திதான் வியாபாரம் இது தாத்வர்த்தம். இந்த புத்தி விருத்தியில் உபலப்தி ஸ்வரூபமான ஆத்மாவின் ப்ரதிபிம்பம் ஏற்படு கிறது. இதுதான் தாத்வர்த்தமான க்ரியையின் பலன். இதுவும் தாத்வர்த்தம்தான். இந்த பலன் அந்தக் கரணத்தில் ஏற்படுகிறதே தவிற ஆத்மாவில் அல்ல. ஆத்ம ஸ்வரூபமான உபலப்தி இந்த க்ரியையின் பலன் அல்ல. அது விகாரமுமல்ல. அது நித்யம். எல்லாவித விகாரங் களுக்கும் இருப்பிடம் அந்தக்கரணம்தான். ஆனல் அவித்யையாலும் அந்தக்கரண விருத்திகளில் ஆத்ம ப்ரதி பிம்பம் ஏற்படுவதாலும் அந்தக்கரண தர்மங்கள் எல்லாம் ஆத்மாவில் இருப்பதாக அத்யாஸத்தால் எண்ணி ஆத் மாவையே கர்த்தா, போக்தா, ப்ரமாதா, ஞாதா என்றெல் லாம் அறியாமையால் சொல்கிறோம். இது எல்லாம் உபாதி வசத்தால் ஏற்பட்டது நன்கு விவேசனம் செய்து ஆத் மாவைப் பிரித்துப் பார்த்தோமானல் அதன் ஸ்வரூபம் அஸங்கம், நிர்விகாரம், கூடஸ்தம் என்பது நன்கு தெரிய வரும். (81)

शिष्य उवाच—कथं तर्हि कूटस्थे मयि अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धृत्वमित्यात्थ ? ॥ ८२ ॥

**शिष्य उवाच**—சிஷ்யன் சொல்கிருன். **तर्हि**—அப்படியானல் **कूटस्थे**—நிர்விகாரனை, **मयि**—என்னிடம், **अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धृत्वमिति**—தன் விஷயமான மனோவிருத்திகள் எல்லாவற்றையும் அறியும் தன்மை (இருக்கிறது) என்று **कथं**— எப்படி **आत्थ**—சொல்கிறீர்கள் ?

तं गुरुरुवाच—सत्यमेवावोचम्, तेनैव कूटस्थतामब्रवं तव ॥ ८३ ॥

**तं**—அவனைப் பார்த்து, **गुरुः**—குரு, **उवाच**—சொன்னர் **सत्यमेव**— உண்மையாகவே, **अवोचं**—சொன்னேன். **तेनैव**-

அதனாலேயே, तव-உனக்கு, कूटस्थतां-கூடஸ்தனாக இருக்கும் தன்மையை, अब्रवं-சொன்னேன்.

நான் கூடஸ்தனானால் என் மனதில் உண்டாகும் எல்லா விருத்திகளின் ஞானம் எனக்கு எப்படி ஏற்படும். ஆத்மா கூடஸ்தன் என்பதும், அதில் ஞானம் உண்டாகிறது என்பதும் பரஸ்பர விரோதமில்லையா என்று சிஷ்யன் கேட்டான். மனத்திலுள்ள விருத்திகள் எல்லாவற்றையும் நீ அறிகிறபடியால்தான் கூடஸ்தன். உன்னிடத்தில் விகாரம் ஏற்படுமானால் எல்லா விருத்திகளையும் எப்படி அறிந்துகொள்ள முடியும்? விஷயங்கள் மாறி மாறி வந்தாலும் அவைகள் எல்லாவற்றையும் பார்க்கிறவன் மாறுபடாமல்தானே இருக்கிறான். மனோ விருத்திகளுக்கு ஸ்வரூபஞானத்தால் பிரகாசம். ஸாக்ஷிபாஸ்யங்கள் இவை. ஆகையால் ஆத்மாவில் புதிதாக ஞானமொன்றும் ஏற்படுவதில்லை. அவன் கூடஸ்தன்தான். (82–83)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :—

यद्येवं भगवन् कूटस्थनित्योपलब्धिस्वरूपे मयि शब्दाद्याकारबौद्धप्रत्ययेषु च मत्स्वरूपोपलब्ध्याभासफलावसानवत्सु उत्पद्यमानेषु कस्त्वपराधो मम? ॥ ८४ ॥

भगवन्-பகவானே, यद्येवं-இப்படியானால், कूटस्थनित्योपलब्धिस्वरूपे-கூடஸ்த்தமான (விகாரமற்ற) நித்யமான (அழிவற்ற) ஞானஸ்வரூபனான, मयि-என்னிடம், मत्स्वरूपोपलब्ध्याभासफलावसानवत्सु-என் ஸ்வரூபமாகிற ஞானத்தின் பிரதிபிம்பமாகிற பலனில் முடிவுபெறுகிற, शब्दाद्याकारबौद्धप्रत्ययेषु-சப்தம் முதலான வடிவம்கொண்ட புத்தி விருத்திகள், उत्पद्यमानेषु-உண்டாகும்பொழுது, मम-என்னுடைய, अपराधः-குற்றம், कः-என்ன?

குருவின் உபதேசத்தால் ஆத்மா கூடஸ்த்தன் என்பதை நன்கு புரிந்துகொண்ட சிஷ்யன் கேட்கிறான். நான் கூடஸ்த்தன், எவ்வித மாறுதலுமற்றவன், அழிவற்ற ஞான

ஸ்வரூபன். சப்தாதி வடிவமுள்ள புத்தி விருத்திகள் என்னிடம் உண்டாகின்றன. இவற்ருல் என் ஸ்வரூப ஞானத்திற்கு ஒரு விகாரமும் கிடையாது. இந்த விருத்தி களின் பலனும் என் ஸ்வரூப ஞானத்தின் ப்ரதிபிம்பம் தான். இப்படியிருக்க இந்த விருத்திகளைப் பார்த்துக் கொண்டிருக்கும் எனக்கு ஸம்ஸாராதி ப்ரமங்கள் ஏற்படக் காரணமென்ன? நான் செய்த குற்றம்தான் என்ன? (84)

(அ) குரு பதில் கூறுகிருர் :—

**सत्यं नास्त्यपराधः, किन्तु अविद्यामात्रस्त्वपराध इति प्रागेवावोचम् ॥**

**सत्यं**-வாஸ்தவம், **नास्ति अपराधः**-குற்றமில்லைதான். **किंतु** ஆனுலும், **अविद्यामात्रस्तु**-அவித்யைதான், **अपराधः**-குற்றம், **इति**-என்று, **प्रागेव**-முன்னலேயே, **अवोचम्**-சொல்லி உள்ளேன்.

இப்பொழுது புதிதாக நீ தவறுதல் ஒன்றும் செய்ய வில்லை. ஆனுலும் உன்னிடம் அனுதிகாலமாக இருக்கும் அவித்யைதான் எல்லாவற்றிற்கும் மூல காரணம் என்று 48-வது உபதேசத்தில் சொல்லியிருக்கிறேன் கூடஸ்தமான ஆத்ம ஸ்வரூபத்தை அநாத்மாக்களிலிருந்து பிரித்து ஸ்பஷ்டமாக நீ தெரிந்து கொள்ளவில்லை. இந்த அவித்யை என்ற அபராதம் உன்னிடம் எப்பொழுதும் கூடவே இருப்பதால்தான் எல்லாத் துன்பங்களும் ஏற்படு கின்றன. அவித்யையின் காரணமாக ஏற்படுவதால் இவை வாஸ்தவமல்ல. (85)

(அ) புத்தி விருத்திகளுக்கு ஸாக்ஷியாக இருப்பதால் ஆத்மா கூடஸ்தம் என்பதைக் காட்டி விட்டு இனி மூன்று அவஸ்தைகளுடன் ஸம்பந்தப்படாமல் அவைகளின் ஸாக்ஷியாக இருப்பதாலும் ஆத்மா கூடஸ்தன் என்பதை நிருபணம் செய்கிருர். சிஷ்யன் கேட்கிருன் :—

**यदि भगवन्, सुषुप्त इव मम विक्रिया नास्ति, कथं स्वप्न-जागरिते? ॥ ८६ ॥**

**भगवन्**-பகவானே, **सुषुप्ते इव**-ஸுஷுப்தியில் போல, **मम**-எனக்கு, **विक्रिया**-விகாரம், **यदि नास्ति**-இல்லாதிருக்குமேயானல், **कथं**-எப்படி, **स्वप्नजागरिते**-(எனக்கு) ஸ்வப்னமும் ஜாக்ரத்நிலையும் ஏற்படுகின்றன.

ஸுஷுப்தி நிலையில் ஆத்மாவுக்கு ஒருவித விகாரமும் இருப்பதாகத் தெரியவில்லை. இதுபோல் எப்பொழுதுமே ஆத்மாவுக்கு விகாரமில்லை என்றிருக்குமானல் விகாரத்தை உண்டுபண்ணும் ஸ்வப்ன-ஜாக்ரத்நிலைகள் ஆத்மாவுக்கு எப்படி ஏற்படும்? (86)

तं गुरुरुवाच — किंतु अनुभूयेते त्वया सन्ततम् ॥ ८७ ॥

**तं**-அந்த சிஷ்யனைப்பார்த்து, **गुरुः**-ஆசார்யர், **उवाच**-சொன்னர். **किन्तु**-ஆனல், **त्वया**-உன்னல், **संततं**-எப்பொழுதும், **अनुभूयेते**-அனுபவிக்கப்படுகின்றனவே!

ஸ்வப்னஜாகரிதங்கள் உன்னல் எப்பொழுதும் அனுபவிக்கப்படுகிறபடியால் அவைகள் உன் ஸ்வரூபத்தைச் சேர்ந்தவையல்ல. (87)

शिष्य उवाच — बाढमनुभवामि, किंतु विच्छिद्य विच्छिद्य, न तु सन्ततम् ॥ ८८ ॥

**शिष्यः**-சிஷ்யன், **उवाच**-சொன்னன். **बाढं**-நிச்சயமாக, **अनुभवामि**-அனுபவிக்கிறேன். **किन्तु**-ஆனல், **विच्छिद्य विच्छिद्य**-விட்டுவிட்டுத்தான், **न तु संततम्**-எப்பொழுதுமல்ல.

குரு **संततम्** (எப்பொழுதும்) என்ற வார்த்தையை உபயோகப்படுத்தினர். அதன் கருத்தைத் தெரிந்து கொள்ளாமல் சிஷ்யன் கேட்கிருன். எனக்கு ஸ்வப்ன ஜாக்ரதனுபவம் எப்பொழுதும் இல்லையே மாறி மாறித்தானே அனுபவம் ஏற்படுகிறது. ஸ்வப்னத்தில் ஜாக்ரதனுபவம் இல்லை. ஜாக்ரத்தில் ஸ்வப்னனுபவம் இல்லை. ஸுஷுப்தியில் இவ்விரண்டின் அனுபவம் இல்லை. அவஸ்தைகள் மாறி மாறிவந்தாலும் அனுபவம் ஆத்மாவுக்கு எப்பொழுதும்

இருக்கிறது என்பது குருவின் கருத்து. தொடர்ந்து அநேகம் பொருள்களைப் பார்த்துக்கொண்டு வரும் மனிதனுக்கு பார்க்கப்படும் பொருள்கள் மாறிக்கொண்டு வந்தபோதிலும் பார்வை தொடர்ந்து இருக்கிறதல்லவா! இதையே பின்னால் விளக்குகிறார். (88)

गुरुराह — तर्हि आगन्तुके त्वेते न तवात्मभूते । यदि तवात्मभूते चैतन्यस्वरूपवत्स्वतःसिद्धे सन्तते एव स्याताम् । किञ्च स्वप्नजागरिते न तवात्मभूते, व्यभिचारित्वात्, वस्त्रादिवत् । न हि यस्य यत्स्वरूपं, तत् तद्व्यभिचारि दृष्टम् । स्वप्नजागरिते तु चैतन्यमात्रत्वात् व्यभिचरतः । सुषुप्ते चेत् स्वरूपं व्यभिचरेत् तन्नष्टं, नास्तीति बाध्यं वा स्यात्, आगन्तुकानामतद्धर्माणामुभयात्मकत्वदर्शनात्; यथा धनवस्त्रादीनां नाशो दृष्टः, स्वप्नभ्रान्तिलब्धानां त्वभावो दृष्टः ॥ ८९ ॥

गुरुः-குரு, आह-சொன்னார். तर्हि-அப்படியானால், आगन्तुके புதிதாக நடுவில் வந்துள்ள, एते-இவை, तव-உன், आत्मभूते ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்தவையாக, न-இல்லை. तव-உன்னுடைய, आत्मभूते यदि-ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்தவைகளாக இருக்குமானால், चैतन्यस्वरूपवत् - சைதன்ய ஸ்வரூபம் போல் स्वतःसिद्धे-தானாகவே உள்ளவைகளாகவும், संतते एव -எப்பொழுதும் உள்ளவைகளுமாகவே, स्याताम् - இருக்கும். किंच-மேலும், वस्त्रादिवत् - வஸ்திரம் முதலியவைபோல, व्यभिचारित्वात् -மாறிப்போய்விடுவதால், स्वप्नजागरिते- ஸ்வப்னமும் ஜாக்ரத்தும், न तवात्मभूते-உன் ஆத்மஸ்வரூபமல்ல. यत् - எது, यस्य-எதனுடைய, स्वरूपं-ஸ்வரூபமோ, तत् - அது, तद्व्यभिचारि-அதைவிட்டு மாறிப்போவதாக, न हि दृष्टम् - பார்க்கப்பட்டதில்லை स्वप्नजागरिते तु-ஸ்வப்னஜாகரிதங்களோவெனில், चैतन्यमात्रत्वात् - சைதன்ய ஸ்வரூபத்திலிருந்து, व्यभिचरतः-மாறிப்போய் விடுகின்றன. सुषुप्ते- ஸுஷுப்தியில், स्वरूपं व्यभिचरेत् चेत् - ஆத்ம ஸ்வரூபத்தை விட்டு மாறிவிடுமானால், तत् - அது, नष्टं-அழிந்ததாகவோ, नास्तीति-இல்லையென்று, बाध्यं वा - பாதிக்கப்படுவதாகவோ,

स्यात्-ஆகும். आगन्तुकानां-நடுவில் வந்துள்ள, अतद्धर्मिणां-அதனுடையதல்லாத தர்மங்களுக்கு, उभयात्मकत्वदर्शनात्-இரண்டுவிதமாக இருப்பதை பார்த்திருக்கிறபடியால். यथा-எவ்வாறு, धनवस्त्रादीनां-பணம், ஆடை முதலியவைகளுக்கு, नाश:-அழிவு, दृष्ट:-காணப்பட்டிருக்கிறதோ, स्वप्नभ्रान्ति-लब्धानां तु-ஸ்வப்னத்திற்கும், ப்ராந்தியால் ஏற்பட்டபொருள்களுக்குமோவெனில், अभाव:-பாதம் (மறைவு) दृष्ट:-பார்க்கப்பட்டிருக்கிறதோ (அதுபோல)

உன்னிடத்தில் மாறி மாறி வந்து போய்க்கொண்டிருக்கிற ஜாக்ரத்-ஸ்வப்ன அவஸ்தைகள் உன் ஸ்வரூபத்தில் சேர்ந்தவையல்ல. உன் ஸ்வரூபத்தில் சேர்ந்திருக்குமாகில் சைதன்யம் போல் எப்பொழுதும் உன்னிடம் இருக்குமே தவிர மாறிமாறி வராது மேலும் ஸுஷுப்தியில் சைதன்யத்தைவிட்டு இரண்டுமே விலகிவிடுகின்றன. உன்னிடமுள்ள பணம், ஆடை முதலியவை அழிந்துபோவது போலவும், நீ ஸ்வப்னத்தில் காணும் பொருள்கள் மறைந்து போவது போலவும் உன்னை விட்டு இரண்டு அவஸ்தைகளுமே விலகிச்செல்வதால் அவை உன்னைச் சேர்ந்தவை அல்ல. (८9)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :—

नन्वेवं भगवन् चैतन्यस्वरूपमपि आगन्तुकं प्राप्तम्, स्वप्नजागरितयोरिव सुषुप्ते अनुपलब्धेः। अचैतन्यस्वरूपो वा स्यामहम् ॥ ९० ॥

भगवन्-குரோ! नन्वेवं-இப்படியானால், चैतन्यस्वरूपमपि-சைதன்ய ஸ்வரூபமும், आगन्तुकं प्राप्तम्-நடுவில் வந்து போகும் தர்மமாக ஆகும் सुषुप्ते-ஸுஷுப்தியில், स्वप्नजागरितयोरिव-ஸ்வப்னம், ஜாகரிதம்போல, अनुपलब्धेः-சைதன்யமும் தெரியாதபடியால்; वा-அல்லது, अहं-நான், अचैतन्यस्वरूप:-சைதன்யமில்லாத (ஜடமான) ஸ்வரூபமுள்ளவனாக, स्याम्-ஆவேன்.

பார்வை, கேள்வி முதலான ஞானம்தான் ஸ்வப்ன-ஜாகரிதம் என்பது. பார்வை, கேள்வி முதலான ஞானத்துடன் கூடியது சைதன்யம். பார்வை, கேள்வி முதலான ஞானம் புதிதாக வந்து போவதால் அதனுடன் கூடிய சைதன்யமும் ஆகந்துகமாக ஆகும். மேலும் ஸ்வப்னஜாகரித்தைப் போல ஸுஷுப்தியில் சைதன்யத்தையும் காணவில்லை. ஆதலால் ஆத்மா ஜடம் என்றுதான் சொல்ல வேண்டிவரும். (90)

(அ) குரு கூறுகிறார் :—

न, पश्य, तदनुपपत्तेः । चैतन्यस्वरूपं चेदागन्तुकं पश्यसि, पश्य नैतद्वर्षशतेनाप्युपपत्त्या कलयितुं शक्नुमो वयम्, अन्यो वा अचैतन्योऽपि । तस्य संहतत्वात्पारार्थ्यमनेकत्वं नाशित्वं च न केनचिदुपपत्त्या वारयितुं शक्यम्, अस्वार्थस्य स्वतःसिध्यभावादित्यवोचाम । चैतन्यस्वरूपस्य त्वात्मनः स्वतःसिद्धेरन्यानपेक्षत्वं न केनचिद्वारयितुं शक्यम्, अव्यभिचारात् ॥ ९१ ॥

**न**-இல்லை **पश्य**-ஆலோசித்துப்பார். **तदनुपपत्तेः** - அது (சைதன்யம் ஆகந்துகம் என்பது) உபபந்நமாக இல்லாததால். **चैतन्यस्वरूपं** - சைதன்ய ஸ்வரூபத்தை, **आगन्तुकं** - ஆகந்துகமாக (நடுவில் வந்ததாக) **पश्यसि चेत्** - நீ பார்க்கிறாயேயானால், **पश्य**-பார். **वर्षशतेनापि**-நூறு வருஷங்களானாலும், **वयं** - நாங்கள், **एतत्** - இதை, **उपपत्त्या कलयितुं** - யுக்திக்குப் பொருத்தமுள்ளதாகச் செய்வதற்கு, **न शक्नुमः**- முடியாது. **अन्यः**-வேறு, **अचैतन्योऽपि वा**-மூடனும் (முடியாது). **तस्य**-அந்த புத்தி விருத்தி ரூபமான ஞானத்திற்கு, **संहतत्वात्** - பிற வஸ்துவுடன் சேர்ந்திருப்பதால், **पारार्थ्यं**-பிறரின் பயனுக்காக இருக்கும் தன்மையையும், **अनेकत्वं**-பலவாக இருக்கும் தன்மையையும், **नाशित्वं च**-அழிந்துபோகும் தன்மையையும், **केनचित्** -ஒருவனாலும், **उपपत्त्या**-யுக்தியினால், **वारयितुं**-தடுப்பதற்கு, **न शक्यम्** - முடியாது. **अस्वार्थस्य**-தனக்காக இல்லாமல் பிறனுக்காக இருக்கும் பொருளுக்கு, **स्वतःसिध्यभावात्** - தானாக உள்ளது என்பது இல்லா

ததால், इति अवोचाम-என்று சொல்லியுள்ளோம். चैतन्य-स्वरूपस्य-சைதன்யஸ்வரூபமான, आत्मनस्तु-ஆத்மாவிற்கோ வெனில், स्वतःसिद्धेः - தானாகவே பிரஸித்தமாக இருப்ப தனால், अन्यानपेक्षत्वं-வேறொன்றை எதிர்பாராமலிருப்பதை, केनचित् - ஒருவராலும், वारयितुं-தடுப்பதற்கு, न शक्यम् - முடியாது, अव्यभिचारात् - வ்யபிசாரம் இல்லாததால்.

நன்கு யுக்திகளைக்கொண்டு ஆலோசித்துப் பார்த்தால் ஆத்மாவின் சைதன்யம் வந்து போகக்கூடியது என்பதை ஒருவனும் ஒப்புக்கொள்ளமாட்டான். ஞானம் இரண்டு விதம். ஆத்ம ஸ்வரூபமான சைதன்யம் நித்ய ஞானம். கண் முதலான இந்திரியங்கள் மூலம் அந்தக்கரணத்தில் உண்டாகும் விருத்தியில் பிரதிபலிக்கும் சைதன்யம் விருத்தி ஞானம். அந்தக்கரண விருத்தி சில சமயத்தில் மட்டும் ஏற்படுவதால் இந்த விருத்தி ஞானம் ஆகந்துகம் தான். சேதனனுக்காக ஏற்படுவதால் ஜடம், அழியக்கூடியது. ஆனால் ஸ்வரூபஞானம் அதாவது உபாதி ஸம்பந்தமில்லாத ஆத்மஸ்வரூப பூதமான சைதன்யம் இதுபோல் ஆகந்துக மில்லை, ஜடமுமல்ல. ஆத்ம சைதன்யம் ஆகந்துகமானால் இதை அறிவிப்பது யார்? தான் வருவதையும் போவதை யும் தானே அறிவிக்க முடியாது. ஆத்ம சைதன்யத்தைத் தவிர வேறு சைதன்யமில்லாததாலும், வேறு ஜடப்பொருள் களுக்கு ஞானத்தை உண்டு பண்ணும் சக்தி இல்லாத தாலும் சைதன்யத்தின் உத்பத்தி விநாசங்களை ஒருவரும் அறிந்து கொள்ள முடியாமலே போய்விடும். ஆகையால் ஸ்வரூபஞானம் நித்யம், ஆகந்துகமல்ல. இதே கருத்தை 'न हि द्रष्टुर्दृष्टेर्विपरिलोपो विद्यते अविनाशित्वात्' (பிரு. உப. 4-3-23) 'न दृष्टेर्द्रष्टारं पश्येः' (பிரு உப. 3-4-2) இது முதலான ச்ருதிகள் ஸ்பஷ்டமாகக் கூறுகின்றன. (91)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :-

ननु व्यभिचारो दर्शितो मया-सुषुप्ते न पश्यामीति ॥ ९२ ॥

सुषुप्ते-நல்ல தூக்கத்தில், न पश्यामि-(ஒன்றையும்) நான்

அறியவில்லை, इति-என்று, व्यभिचारः மாறுதல், मया-என்னால், ननु दर्शितः-காட்டப்பட்டுள்ளதே?

குருவின் அபிப்பிராயத்தை அறிந்து கொள்ளாமல் சிஷ்யன் மறுபடியும் கேட்கிறான். ஸுஷுப்தி நிலையில் எவ்வித ஞானமும் இல்லை. ஒன்றும் தெரியவில்லை. தான் இருப்பதைப் பற்றிக் கூடத்தெரியவில்லை. ஆத்மா ஞான ஸ்வரூபமாக இருந்து அந்த ஞானமும் நித்யமாக இருக்குமானால் ஸுஷுப்தியிலும் ஞானம் ஏற்பட வேண்டாமா? ஸுஷுப்தியில் ஆத்மா இருந்தும் ஞானம் இல்லையே என்று நான் கேட்ட கேள்விக்கு ஸமாதானம் கிடைக்கவில்லையே?

(அ) குரு ஸமாதானம் கூறுகிறார்:—

न, व्याहतत्वात्। कथं व्याघातः? पश्यतस्तव न पश्यामीति व्याहतं वचनम्। 'न हि कदाचित् भगवन्, सुषुप्ते मया चैतन्यं अन्यद्वा किंचित् दृष्टम्'-पश्यन् तर्हि सुषुप्ते त्वम्; यस्मात् दृष्टमेव प्रतिषेधसि, न दृष्टिम्। या तव दृष्टिः तत् चैतन्यमिति मयोक्तम्। यया त्वं विद्यमानया न किंचित् दृष्टमिति प्रतिषेधसि, सा दृष्टिः तच्चैतन्यम्। तर्हि सर्वत्र अव्यभिचारात् कूटस्थनित्यत्वं सिद्धं स्वत एव, न प्रमाणापेक्षम्। स्वतस्सिद्धस्य हि प्रमातुः, अन्यस्य प्रमेयस्य परिच्छित्तिं प्रति प्रमाणापेक्षा। या तु अन्या नित्या परिच्छित्तिः अपेक्ष्यते, अन्यस्य अपरिच्छित्तिरूपस्य परिच्छेदाय, सा हि नित्यैव कूटस्था स्वयंज्योतिःस्वभावा। आत्मनि प्रमाणत्वे प्रमातृत्वे वा न तां प्रति प्रमाणापेक्षा, तत्स्वभावत्वात्। यथा प्रकाशनं, उष्णत्वं वा लोहोदकादिषु परतः अपेक्ष्यते अग्न्यादित्यादिभ्यः, अतत्स्वभावत्वात्; न अग्न्यादित्यादीनां तदपेक्षा, सर्वदा तत्स्वभावत्वात्॥

(அ) न-இல்லை, व्याहतत्वात्-முன்னுக்குப்பின் முரணாக இருப்பதால். कथं-எப்படி, व्याघातः-முறண்பாடு? पश्यतः-பார்த்துக்கொண்டிருக்கிற, तव-உன்னுடைய, 'न पश्यामि-பார்க்கவில்லை' इति-என்ற, वचनं-வார்த்தை, व्याहतं-முறண்பாடு உள்ளது. (சிஷ்யன் கேட்கிறான்) भगवन्-குருவே,

कदाचित्-ஒருபொழுதும், सुषुप्ते-ஸுஷுப்தியில், मया-என்னால் चैतन्यं-சைதன்யமோ, अन्यत् वा-வேறு வஸ்துவோ, किंचित्-ஒன்றும், नहि दृष्टम्-பார்க்கப்படவில்லையே! (குரு சொல்கிறார்), तर्हि-அப்படியானால், त्वं-நீ, सुषुप्ते-ஸுஷுப்தியில், पश्यन्-பார்த்துக்கொண்டு (தான் இருக்கிறாய்), यस्मात्-ஏனெனில், दृष्टमेव-பார்க்கப்பட்ட பொருளைத்தான், प्रतिषेधसि-மறுக்கிறாய். दृष्टिं-பார்வையை, न-மறுக்கவில்லை. या-எது, तव दृष्टिः உன் பார்வையோ, तत्-அது தான், चैतन्यं-சைதன்யம், इति-என்று, मया-என்னால், उक्तं-சொல்லப்பட்டது. विद्यमानया-(அப்பொழுது) இருக்கிற, यया-எந்த ஞானத்தால், किंचित् न दृष्टं-ஒன்றும் பார்க்கப்படவில்லை, इति-என்று, त्वं-நீ, प्रतिषेधसि-மறுக்கிறாயோ, सा दृष्टिः-அந்த ஞானம், त्वच्चैतन्यम्-உன்னுடைய சைதன்யம். तर्हि-ஆகவே सर्वत्र-எல்லாக் காலங்களிலும், अव्यभिचारात्-தொடர்ந்து இருப்பதால், कूटस्थनित्यत्वं-மாறுபாடு, நாசம் இவைகள் அற்றதாயிருக்கும் தன்மை, स्वत एव-தானாகவே இருப்பதாக, सिद्धं-ஏற்பட்டுவிட்டது, न प्रमाणापेक्षम्-பிரமாணங்களை எதிர்பார்த்து அல்ல. स्वतस्सिद्धस्य-தானாகவே ஏற்பட்டுள்ள, प्रमातुः-அறிகிறவனுக்கு, अन्यस्य-(தன்னைக்காட்டிலும்) வேறான, प्रमेयस्य-அறியப்படும் வஸ்துவின், परिच्छित्तिं प्रति-ஞானத்தைக் குறித்து, प्रमाणापेक्षा हि-பிரமாணத்தின் அபேக்ஷை உண்டு அல்லவா! (ப்ரமாதாவிற்குத் தன்னை அறிந்துகொள்ள பிரமாணத்தின் அபேக்ஷை கிடையாது). अन्यस्य-வேறான, अपरिच्छित्तिरूपस्य-ஜடமான வஸ்துவின், परिच्छेदाय-அறிவிற்காக, यातु-எந்த, अन्या-வேறான, नित्या-எப்பொழுதும் உள்ள, परिच्छित्तिः-ஞானம், अपेक्ष्यते-எதிர்பார்க்கப்படுகிறதோ, सा नित्यैव-அது நித்யம்தான், कूटस्था-மாறுபாடு அடையாதது, स्वयंज्योतिःस्वभावा हि-தானே பிரகாசிக்கும் தன்மை உள்ளது அல்லவா! आत्मनि-ஆத்மாவில், प्रमाणत्वे-பிரமாணத்தன்மையிலோ, प्रमातृत्वे वा-அறிகிற தன்மையிலோ, तां प्रति-அந்த ஞானத்தைக் குறித்து, न प्रमाणापेक्षा-வேறு பிரமாணத்தின் அபேக்ஷை கிடையாது.

**तत्स्वभावत्वात्**-ஞானஸ்வரூபமாக இருப்பதால். **यथा**-எப்படி, **लोहोदकादिषु**-இரும்பு, தண்ணீர் முதலியவைகளில், **प्रकाशनं उष्णत्वं वा**-ஒளியோ, சூடோ, **परतः**-வேருன, **अग्न्यादित्यादिभ्यः**-அக்னி, ஸூரியன் முதலியவைகளிடமிருந்து, **अपेक्ष्यते**-எதிர்பார்க்கப்படுகிறது, **अतत्स्वभावत्वात्**-ஒளி, சூடு இந்த ஸ்வபாவம் இல்லாதபடியால். **अग्न्यादित्यादीनां**-அக்னி, ஸூரியன் முதலியவைகளுக்கு, **सर्वदा**-எப்பொழுதும், **तत्स्वभावत्वात्**-அந்த ஒளி, சூடு இந்த தன்மை உள்ளபடியால் **न तदपेक्षा**-பிறவற்றிடமிருந்து அவைகளின் அபேக்ஷை இல்லை.

ஸுஷுப்தியில் ஒன்றுமே தெரியாததால் அங்கு ஆத்ம சைதன்யம் இல்லையே என்ற கேள்விக்கு மற்றுமோர் ஸமாதானம் கூறுகிருர். பெட்டியில் ஒன்றும் இல்லை என்று ஒருவன் சொல்வானேயாகில் அவன் அறிந்துகொள்ளும் திறமையுள்ளவனுக இருந்து பெட்டி முழுவதும் தேடிப் பார்த்திருக்கவேண்டும். அறியும் திறமை இல்லாத குருடனே, பெட்டியைத்திறந்து பார்க்காதவனே பெட்டியில் ஒன்றும் இல்லை என்று சொல்ல முடியாது. இதுபோல் ஸுஷுப்தியில் ஒன்றையும் பார்க்கவில்லையே என்று நீ கூறுவதால் பார்க்கும் திறமை உள்ள நீ அப்பொழுது இருக்கிருய் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. இல்லாவிட்டால் ஒன்றையும் பார்க்கவில்லை என்பதை நீ எவ்விதம் அறிந்து கூறமுடியும்? ஸுஷுப்தியில் அறியும்படியான பொருள் இல்லை என்று கூறலாமே தவிர அறிவு இல்லை என்று கூறமுடியாது. பொருள்கள் இருப்பதையும் பொருள்கள் இல்லாதிருப்பதையும் எல்லாவற்றையும் அறியும் ஞானம் நித்யமானது இது ஆத்ம ஸ்வரூபத்தைச் சேர்ந்தது ஆத்மாதான் ப்ரமாதா (அறிகிறவன்). ப்ரமாதா இருந்தாலும் வஸ்துக்கள் தெரியவேண்டுமானுல் ப்ரமாணம், அதாவது இந்திரியம், மனம் முதலான கருவிகள் வேண்டும். இந்தக் கருவிகள் ஜாக்ரத் ஸ்வப்னுவஸ்தைகளில் இருப்பதால் பொருள்கள் தெரிகின்றன. ஸுஷுப்தியில் இந்தக் கருவிகள் இல்லாததால் பொருள்கள் தெரிவதில்லை,

பொருள்கள் தெரிய பிரமாணம் (கருவி) வேண்டுமே தவிற ப்ரமாதாவான ஆத்மாவை விளக்க வேறு ப்ரமாணம் தேவையில்லை. அது தானே ப்ரகாசிக்கக்கூடியது. எப்பொழுதும் உள்ளது. தண்ணீரில் சூடும், லோஹத்தில் வெளிச்சமும் இயற்கையாகக் கிடையாது. அக்னியின் சேர்க்கையினுல் ஏற்படுகிறது. ஆனுல் அக்னியில் உஷ்ணமும் ப்ரகாசமும் இயற்கையாக உள்ளது; வேறென்றினுல் ஏற்படுவதில்லை. இதுபோல் ப்ரமாதா, ப்ரமாணம் இவைகளையும் ப்ரகாசிக்கச்செய்யும் ஆத்மா நித்யப்ரகாசமாக உள்ளது. (93)

(அ) சிஷ்யன் கேட்கிருன் :—

अनित्यत्वे एव प्रमा स्यात्, न नित्यत्वे इति चेत् ॥ ९४ ॥

**अनित्यत्वे एव**–அநித்யமாக இருந்தால்தான், **प्रमा स्यात्**–ஞானமாக ஆகும், **न नित्यत्वे**-நித்யமாக இருந்தால் அல்ல, **इति चेत्**–என்று கேட்பாயேயாகில்,

न, अवगतेर्नित्यत्वानित्यत्वयोर्विशेषानुपपत्तेः । नहि अवगतेः प्रमात्वे अनित्या अवगतिः प्रमा, न नित्या इति विशेषोऽवगम्यते ॥

**अवगतेः**-அறிவு, **नित्यत्वानित्यत्वयोः**–நித்யம், அநித்யம் என்பதில், **विशेषानुपपत्तेः**–வித்யாஸம் கூறமுடியாததால், **न**–அல்ல. **अवगतेः प्रमात्वे**–அறிவு ப்ரமையாயிருக்கும்பொழுது **अनित्या अवगतिः प्रमा**–அநித்யமான ஞானம் ப்ரமை, **न नित्या**–நித்யமான ஞானம் ப்ரமை அல்ல **इति विशेषः**–என்ற பாகுபாடு, **नहि अवगम्यते**–காணப்படவில்லையல்லவா.

ப்ரமாணங்களால் விஷயத்தை அறிந்து கொள்வதை ப்ரமை (ஞானம்) என்று கூறுகிறோம் நித்யமாக இருந்தால் அங்கு ப்ரமாணுபேக்ஷை இல்லாததனுல் அதை எப்படி ப்ரமை என்று கூறமுடியும்? இது சிஷ்யனின் கேள்வி. வஸ்து ஞானம்தான் ப்ரமை என்பது. அது அநித்யமாக இருந்தால்தான் ப்ரமை ஆகும், நித்யமாக இருந்தால்

ப்ரமையாகாது என்று கூறுவதற்குக் காரணமில்லை இது குருவின் ஸமாதானம். (94–95)

(அ) சிஷ்யன் கேட்கிருன் :—

नित्यायां प्रमातुरपेक्षाभावः, अनित्यायां तु यत्नान्तरितत्वात् अवगतिरपेक्ष्यत इति विशेषः स्यादिति चेत् ॥ ९६ ॥

**नित्यायां**-நித்யமாக இருந்தால், **प्रमातुः**–ப்ரமாதாவுக்கு, **अपेक्षाभावः**-அபேக்ஷை இல்லை. **अनित्यायां तु**–அநித்யமாக இருந்தாலோ, **यत्नान्तरितत्वात्**-முயற்சியின் மூலம் ஏற்படக் கூடியதால், **अवगतिः**-ஞானம், **अपेक्ष्यते**–விரும்பப்படுகிறது, **इति**–என்ற, **विशेषः**–வித்யாஸம், **स्यात् इति चेत्**-இருக்கும் என்ருல்,

(அ) குரு கூறுகிருர் :—

सिद्धा तर्हि आत्मनः प्रमातुः स्वतःसिद्धिः प्रमाणनिरपेक्षतयैवेति ।

**तर्हि**–அப்படியாஞல், **प्रमातुः आत्मनः**–ப்ரமாதாவான ஆத்மாவுக்கு, **प्रमाणनिरपेक्षतयैव**–ப்ரமாணங்களை எதிர்பார்க்காமலேயே, **स्वतःसिद्धिः**-தாஞக இருப்பது, **सिद्धा**-ஸித்தித்து விட்டது.

ப்ரமாதாவிடம் (அறிகிறவனிடம்) ஞானம் நித்யமாக எப்பொழுதும் இருக்குமாஞல் அவன் ஞானத்தை அடைய ஒருவித முயற்சியும் செய்யவேண்டியதில்லை என்று ஆகி விடும். ஞானம் அநித்யமாக வந்து போகக்கூடியதாக இருக்குமாஞல் இதை அடைய முயற்சி செய்யவேண்டியது அவசியம். இம்மாதிரியான வித்யாஸம் இருக்கிறதே என்பது சிஷ்யனின் கேள்வி. ப்ரமாதா தன்னை அறிந்துகொள்ள வேறு ப்ரமாணத்தை எதிர்பார்ப்பதில்லை. இவன் தானே ப்ரகாசிக்கிறவன் இந்த ஆத்ம ஸ்வரூபபூதமான ஞானம் நித்யம் எப்பொழுதும் இருக்கக்கூடியது. தன்னைக் காட்டிலும் வேருன வஸ்துக்களின் ஞானம் அநித்யம். இது உண்டாக ப்ரமாணம் தேவைதான். (96–97)

சிஷ்யன் கேட்கிறான்—

अभावेऽपि अपेक्षाभावः, नित्यत्वादेवेति चेत् ॥ ९८ ॥

**नित्यत्वादेव** - நித்யமாய் இருப்பதாலேயே, **अभावेपि**- ப்ரமையின் அபாவத்திலும், **अपेक्षाभावः**-அபேக்ஷை இல்லை யென்று ஆகிவிடும். **इति चेत्**-என்றால்,

(அ) குரு சொல்கிறார்:—

न अवगतेरेवात्मनि सद्भावादिति परिहृतमेतत् । प्रमातुश्चेत् प्रमाणापेक्षा सिद्धिः, कस्य प्रमित्सा स्यात्? यस्य प्रमित्सा, स एव प्रमाता अभ्युपगम्यते । तदीया च प्रमित्सा प्रमेयविषयैव न प्रमातृविषया, प्रमातृविषयत्वे अनवस्थाप्रसङ्गात् प्रमातुस्तदिच्छायाश्च तस्याप्यन्यः प्रमाता तस्याप्यन्य इति । एवमेवेच्छायाः प्रमातृविषयत्वे । प्रमातुरात्मनोऽव्यवहितत्वाच्च प्रमेयत्वानुपपत्तिः । लोके हि प्रमेयं नाम प्रमातुरिच्छास्मृतिप्रयत्नप्रमाणजन्मव्यवहितं सिध्यति, नान्यथा अवगतिः प्रमेयविषया दृष्टा । नच प्रमातुः प्रमाता स्वस्य स्वयमेव केनचित् व्यवहितः कल्पयितुं शक्यः इच्छादीनामन्यतमेनापि । स्मृतिश्च स्मर्तव्यविषया, न स्मर्तृविषया । तथा इच्छाया इष्टविषयत्वमेव, नेच्छावद्विषयत्वम् । स्मर्त्रिच्छावद्विषयत्वेऽपि ह्युभयोरनवस्था पूर्ववत् अपरिहार्या स्यात् ॥ ९९ ॥

**न**-அல்ல, **आत्मनि**-ஆத்மாவில், **अवगतेः सद्भावादेव**- ஞானம் இருப்பதனாலேயே, **इति**-என்று, **एतत्** - இது, **परिहृतम्**-பதிலளிக்கப்பட்டுள்ளது. **प्रमातुः**-ப்ரமாதாவின் (அறிகிறவனின்) **सिद्धिः** - இருப்பானது, **प्रमाणापेक्षाचेत्**- ப்ரமாணத்தை அபேக்ஷித்ததாக இருக்குமானால், **कस्य**- யாருக்கு, **प्रमित्सा स्यात्** - அறியவேண்டுமென்ற ஆசை உண்டாகும். **यस्य**-எவனுக்கு, **प्रमित्सा**-அறிவதில் விருப்ப முள்ளதோ, **स एव** - அவன்தான், **प्रमाता**-ப்ரமாதாவாக, **अभ्युपगम्यते**-ஒப்புக்கொள்ளப்படுகிறான். **तदीया**-அவனுடைய

தான, प्रमित्सा च-ஞான இச்சையும், प्रमेयविषयैव-அறியப் படும் விஷயங்களைப்பற்றியது, न प्रमातृविषया-ப்ரமாதாவைப் பற்றியதல்ல, प्रमातुः-ப்ரமாதாவுக்கும், तदिच्छायाश्च-அவனுடைய விருப்பத்திற்கும், प्रमातृविषयत्वे - (வேறு) ப்ரமாதா விஷயமாக இருக்குமேயானுல், तस्यापि-அவனுக்கும் अन्यः प्रमाता-வேறு ப்ரமாதா, तस्यापि-அவனுக்கும், अन्यः-வேறு ப்ரமாதா इति-என்று, अनवस्थाप्रसंगात्-அநவஸ்தை (முடிவு இல்லை) என்ற தோஷம் ஏற்படுமானபடியால். एवमेव - இதுபோலவே, इच्छायाः-விருப்பம், प्रमातृविषयत्वे-ப்ரமாதாவைப்பற்றியதாக இருக்குமானுலும் (இந்த தோஷம் ஏற்படும்) प्रमातुः-ப்ரமாதாவுக்கு, अव्यवहितत्वाच्च-வ்யவஹித மாக (விலகி) இல்லாதபடியாலும், आत्मनः-ஆத்மாவுக்கு, प्रमेयत्वानुपपत्तिः-ப்ரமேயத்வம் பொருந்தாது. लोके-உலகில், प्रमातुः-ப்ரமாதாவுக்கு, इच्छास्मृतिप्रयत्नप्रमाणजन्मव्यवहितं-விருப்பம், நினைவு, முயற்சி, ப்ரமாணம் இவைகள் உண்டாவதால் வ்யவஹிதமாக இருப்பது, प्रमेयं नाम-ப்ரமேயம் என்பதாக, सिध्यति हि - ஏற்படுகிறதுஅல்லவா. अन्यथा - வேறுவிதமாக, प्रमेयविषया - ப்ரமேயத்தைப் பற்றியதான, अवगतिः-ஞானம், न दृष्टा-காணப்பட்டதில்லை. प्रमातुः-ப்ரமாதாவிற்கு, प्रमाता-ப்ரமாதாவானவள், स्वस्य-தனக்கு, स्वयमेव-தானே, केनचित् - ஏதாவது என்ருல், इच्छादीनामन्यतमेनापि-இச்சை முதலியவற்றுள் ஒன்றிஞல் கூட, व्यवहितः-விலகியுள்ளதாக, कल्पयितुं-கல்பிப்பதற்கு, न शक्यः - முடியாது. स्मृतिश्च-நினைவும், स्मर्तव्यविषया-நினைக்கத்தகுந்த வஸ்துவைப் பற்றியது, न स्मर्तृविषया-நினைக்கிறவனைப் பற்றியதல்ல. तथा-அவ்வாறே, इच्छायाः-விருப்பத்திற்கு, इष्टविषयत्वमेव-விருப்பப்பட்ட பொருள்தான் விஷயம், नेच्छावद्विषयत्वं - விருப்பத்துடன் கூடியவன் விஷயமில்லை. उभयोः-நினைவு, விருப்பம் இவ்விரண்டிற்கும், स्मर्त्रिच्छावद्विषयत्वेपि-நினைக்கிறவன், விருப்பத்துடன் கூடியவன் இவர்கள் விஷயமாக இருக்குமானுலும், पूर्ववत्-

முன்போல், अनवस्था – அநவஸ்த்தை (முடிவு இல்லாமை) என்ற தோஷம், अपरिहार्या स्यात्–விலக்கமுடியாததாக ஆகும்.

ப்ரமாதாவான ஆத்மா தானுகவே ப்ரகாசிப்பதால் அது வேறு ப்ரமாணத்தை எதிர்பார்ப்பதில்லை என்று கூறப்பட்டது. அப்படியானுல் ப்ரகாசிக்காமலிருப்பதும் தானுகத்தான். வேறு காரணத்தாலல்ல என்று ஆகிவிடுமே என்று சிஷ்யன் கேட்கிருன். ஆத்ம விஷயமான ப்ரகாசம் எப்பொழுதுமே இருப்பதால் இது ப்ரகாசிக்காத நிலேயே கிடையாது என்று முன்னுலேயே ஸமாதானம் கூறப்பட்டுள்ளது என்று குரு சொல்கிருர். ஜடமான இந்த கார்ய கரண ஸங்காதம் (சரீரம்) நமக்கு விளங்குவதால் இதை ப்ரகாசப்படுத்தும் ஆத்மா இதனினும் வேறுபட்டவன் தானே ப்ரகாசிக்கிறவன் என்று தெரிகிறது.

எல்லாவற்றையும் அறியும் ப்ரமாதாவான ஆத்மா தானே ப்ரகாசிக்காமல் வேறு ப்ரமாணத்தால் ப்ரகாசிக்கிருன் என்று கூறுவது சரியல்ல. எவனுக்கு அறிய வேண்டுமென்ற விருப்பம் ஏற்பட்டு ப்ரயத்னத்தால் அறிகிருனே அவன் ப்ரமாதா. அறியப்படும்பொருள் ப்ரமேயம். ப்ரமாதாவை அறிய விரும்பி ப்ரயத்னத்தால் அறிகிறவன் இந்த ப்ரமாதாவைத் தவிற வேறு எவன் இருக்கிருன். ப்ரமாதாவே (அறிகிறவனே) ப்ரமேயமாக (அறியப்படும் பொருளாக) இருக்கமுடியாது. வேருெரு ப்ரமாதா முதல் ப்ரமாதாவை அறிகிருன் என்று சொன்னுல் அவனுக்கு மற்ருெரு ப்ரமாதா, அவனுக்கும் மற்ருெரு ப்ரமாதா, என்று முடிவே இல்லாமல் போய்விடும். ஆகவே ஏதாவது ஒரு ப்ரமாதா தானே ப்ரகாசிக்கிருன் என்று சொல்லித்தான் ஆகவேண்டும். அதைவிட முதல் ப்ரமாதாவை ஸ்வயம் ப்ரகாசன் என்று கூறுவதுதான் நியாயம். இதே போலத் தான் ப்ரமாதாவிடம் ஏற்படும் இச்சை, ஸ்ம்ருதி, ப்ரயத்னம் எல்லாமே ப்ரமாதாவைப் பற்றியதல்ல. ப்ரமாதாவைக் காட்டிலும் வேருன விஷயங்களேப் பற்றியதுதான். ப்ரமாதாவைப் பற்றியதானுல் இங்கும் அநவஸ்தை தோஷம் வரும் உலகில் தன்னேக்காட்டிலும் வேருன விலகியுள்ள

பொருள் ப்ரமாதாவிடம் ஏற்படும் விருப்பம், நினைவு, ப்ரயத்னம், ப்ரமாணம் இவைகள் மூலம் நெருங்கி ப்ரமேயமாகிறது. ப்ரமாதாவுக்கு ப்ரமாதாவே தனக்குத்தானே வேறென்றால் விலகியுள்ளதாக எப்படிக்கூறமுடியும்? ஆதலால் ப்ரமாதா மற்றோர் ப்ரமாணத்தால் அறியத் தக்கவனல்ல. (98-99)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :—

ननु प्रमातृविषयावगत्यनुत्पत्तौ, अनवगत एव प्रमाता स्यादिति चेत् ॥ १०० ॥

**प्रमातृविषयावगत्यनुत्पत्तौ**-ப்ரமாதாவைப் பற்றிய ஞானம் ஏற்படாமலிருக்குமானால், **प्रमाता**ப்ரமாதா, **अनवगत एव स्यात्**-(எப்பொழுதும்) அறியப்படாதவனாகவே இருப்பான், **इति चेत्**-என்றால்,

(அ) குரு கூறுகிறார் :—

न, अवगन्तुः अवगतेः अवगन्तव्यविषयत्वात् अवगन्तृविषयत्वे चानवस्था पूर्ववत्स्यात् । अवगतिश्चात्मनि कूटस्थनित्यात्मज्योतिरन्यतोऽनपेक्षैव सिद्धा, अग्न्यादित्याद्युष्णप्रकाशवत् इति पूर्वमेव प्रसाधितम् । अवगतेश्चैतन्यात्मज्योतिषः स्वात्मन्यनित्यत्वे, आत्मनः स्वार्थतानुपपत्तिः, कार्यकरणसंघातवत् संहतत्वात् पारार्थ्यं दोषवत्त्वं च अवोचाम । कथम्? चैतन्यात्मज्योतिषः स्वात्मनि अनित्यत्वे स्मृत्यादिव्यवधानात् सान्तरत्वम् । ततश्च तस्य चैतन्यज्योतिषः प्रागुत्पत्तेः प्रध्वंसाच्चोर्ध्वं आत्मन्येवाभावात्, चक्षुरादीनामिव संहतत्वात्, पारार्थ्यं स्यात् । यदा च तदुत्पन्नमात्मनि विद्यते, न तदात्मनः स्वार्थत्वम् । तद्भावाभावापेक्षा हि आत्मानात्मनोः स्वार्थत्वपरार्थत्वसिद्धिः । तस्मादात्मनोऽन्यनिरपेक्षमेव नित्यचैतन्यज्योतिष्ट्वं सिद्धम् ॥ १०१ ॥

न—இல்லை, अवगन्तुः—அறிகிறவனுடைய अवगतेः—ஞானத் திற்கு, अवगन्तव्यविषयत्वात्—அறியப்படும் தன்மையுள்ளது விஷயமானபடியால். अवगन्तृविषयत्वे च—அறிகிறவன் விஷய மாக ஆனால், पूर्ववत्—முன்போல், अनवस्था—அநவஸ்த்தை (முடிவில்லாமை என்ற தோஷம்), स्यात्—ஏற்படும். कूटस्थ— மாறுதல் அடையாத, नित्यात्मज्योतिः—அழியாத ஆத்மப்ரகாச ரூபமான, अवगतिश्च—அவகதியும், आत्मनि—ஆத்மாவில், अग्न्यादित्याद्युष्णप्रकाशवत्—அக்னி, சூரியன் முதலியவற் றிலுள்ள சூடு, வெளிச்சம் இவைபோல, अन्यतः—வேறொன் றிலிருந்து, अनपेक्षैव—எதிர்பாராமலேயே, सिद्धा—ஸித்தமாக உள்ளது इति—என்று, पूर्वमेव—முன்னாலேயே, प्रसाधितं— தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. चैतन्यात्मज्योतिषः—சைதன்ய ரூபியான ஆத்மப்ரகாசமாகிற, अवगतेः—அவகதிக்கு, स्वात्मनि- தனது ஸ்வரூபமான ஆத்மாவில், अनित्यत्वे—அநித்யத்வம் (வந்துபோகும் தன்மை) இருக்குமானால், आत्मनः—ஆத்மா விற்கு, स्वार्थतानुपपत्तिः—தனக்காகவே உள்ளது என்ற தன்மை பொருந்தாது, कार्यकरणसंघातवत्—கார்யம், கரணம் இவைகளின் கூட்டமான சரீரம்போல், संहतत्वात्—சேர்ந் துள்ளதால், पारार्थ्यं-பிறரின் பிரயோஜனத்திற்காக இருக்கும் தன்மையும், दोषवत्त्वं च—தோஷங்களுடன் கூடியிருக்கும் தன்மையும் ஏற்படுமென்பதை, अवोचाम—சொல்லியுள்ளோம். कथं—எப்படி? चैतन्यात्मज्योतिषः- சைதன்யரூபமான ஆத்ம ப்ரகாசம், स्वात्मनि—தனது ஆத்மாவில், अनित्यत्वे—முன் இல்லாமல் வந்து பின் நீங்குமேயானால், स्मृत्यादिव्यवधानात्— ஸ்ம்ருதி முதலியவைகளின் மறைவினால், सान्तरत्वं- நடுவில் மற்றொன்றின் தொடர்போடு கூடியிருக்கும் தன்மை ஏற்பட்டுவிடும். ततश्च—அதனால், तस्य—அந்த, चैतन्यज्योतिषः— சைதன்ய ப்ரகாசம், प्रागुत्पत्तेः—உண்டாவதற்கு முன்னாலும், प्रध्वंसादूर्ध्वं च—நாசத்திற்குப் பின்னாலும், आत्मन्येव—ஆத்மா விலேயே, अभावात्—இல்லாததால், संहतत्वात्—சேர்ந்துள்ள தால், चक्षुरादीनामिव—கண் முதலியவைகளுக்குப்போல, पारार्थ्यं-பிறருக்காக இருக்கும் தன்மை, स्यात्—ஏற்படும்.

यदा–எப்பொழுது, तत्–அந்த சைதன்ய ப்ரகாசம்–उत्पन्नं–உண்டாகி, आत्मनि–ஆத்மாவில், विद्यते–இருக்கிறதோ, तदा–அப்பொழுது. आत्मनः–ஆத்மாவிற்கு, स्वार्थत्वं–தனக்காக இருக்கும் தன்மை, न–இல்லை. तद्भावाभावापेक्षा हि–அந்த சேர்ந்துள்ள தன்மை இருப்பதையும் இல்லாததையும் கொண்டல்லவா आत्मानात्मनोः–ஆத்மாவுக்கும் அநாத்மாவுக்கும், स्वार्थत्वपरार्थत्व सिद्धिः–ஸ்வார்த்தமாயிருப்பதும், பரார்த்தமாக இருப்பதும் ஸித்திக்கிறது. तस्मात्–ஆகையால், आत्मनः–ஆத்மாவுக்கு, अन्यनिरपेक्षमेव–வேறொன்றையும் எதிர்பாராமலேயே, नित्यचैतन्यज्योतिष्ट्वं நித்யமான சைதன்ய ப்ரகாசமாக இருக்கும் தன்மை, सिद्धम्–ஸித்தித்து விட்டது.

ஒரு பொருளைப் பற்றிய ஞானம் ஏற்பட்டால் அது அறியப்பட்டது என்றும் ஞானம் ஏற்படவில்லையானால் அறியப்படாதது என்றும் சொல்கிறோம். ப்ரமாதாவைப் பற்றிய ஞானம் ஒருபோதும் ஏற்படவில்லையானால் ப்ரமாதா அறியப்படாதவனாகவே ஆகிவிடுவானே என்பது சிஷ்யனின் கேள்வி. ஆத்மாவைப்பற்றிய ஞானம் ஏற்படாவிட்டாலும் அது ஞான ஸ்வரூபமானதால் எப்பொழுதும் ஸூர்யன்போல் தானே பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. உலகில் அறிந்துகொள்கிறவன் தன்னைக்காட்டிலும் வேறான அறியப்படும் பொருளை அறிகிறானேயன்றி தன்னையே அறிந்துகொள்வதில்லை. அறிகிறவன் வேறு அறியப்படும் பொருள் வேறு. அறிகிறவனே அறியப்படுபவனாக ஆக முடியாது. உலகப்பொருளை அறிகிறவன் அறியப்படுபவனாக ஆய்விட்டால் அங்கு அறிகிறவன் வேறொருவன் இருக்கவேண்டும். அவனை அறிகிறவன் வேறு என்று அநவஸ்தை என்ற தோஷம் ஏற்படும். ஆகையால் ஆத்மா வேறொன்றால் அறியப்படாதவன். ஆனாலும் அக்னியிடமுள்ள உஷ்ணம் போலும் சூரியனிடம் வெளிச்சம் போலும் ஒருவித மாறுதலையும் அடையாத நித்யமான சைதன்ய ப்ரகாசம் வேறொன்றையும் எதிர்பாராமல் ஆத்மாவில் எப்பொழுதும் உள்ளது என்பது முன்னாலேயே

தீர்மானிக்கப்பட்டுள்ளது. ஆத்மா, சரீரம் முதலான ஒரு பொருளுடனும் ஸம்பந்தப்படாமல் தனித்து விலக்ஷணமாக இருப்பதால்தான் அது ஸ்வார்த்தமென்றும், சேதனமென்றும், சரீரம் இந்திரியம் முதலானவை சேர்ந்திருப்பதால் பரார்த்தமென்றும், ஜடமென்றும் சொல்கிறோம். ஆத்மாவிலும் சைதன்ய ப்ரகாசம் இச்சாதிகளால் ஒருசமயம் ஏற்பட்டு மற்றோர் சமயம் நீங்கிவிடுமேயானால் ஆத்மாவும் ஸம்ஹதம் அதாவது மற்றொன்றுடன் சேரக்கூடியது என்று ஆகி பரார்த்தமாகவும் ஜடமாகவும் ஆகிவிடும். ஆகையால் ஆத்மா நித்யமான சைதன்ய ப்ரகாச ஸ்வரூபன் என்பதைக் கட்டாயம் ஒப்புக்கொள்ளவேண்டும். ஆகவே ஆத்மா வேறொன்றால் அறியப்படாதவனாக இருந்தாலும் அவன் ஸ்வயம்ப்ரகாச ஸ்வரூபன். இதற்கு ஒருக்காலும் கொஞ்சமும் மாறுதலே கிடையாது. (100-101)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :—

ननु एवं सति असति प्रमाश्रयत्वे कथं प्रमातुः प्रमातृत्वम् ? ॥१०२॥

**ननु एवं सति**—இப்படியானால், **प्रमाश्रयत्वे असति**—ஞானத்திற்கு ஆச்ரயமாகும் தன்மை இல்லாதபோது, **प्रमातुः**—ப்ரமாதாவான ஆத்மாவுக்கு, **प्रमातृत्वं**—ப்ரமாதாவாக் இருக்கும் தன்மை, **कथं**—எப்படி ?

(அ) ஆசார்யர் சொல்கிறார்:—

उच्यते-प्रमाया नित्यत्वेऽनित्यत्वे च रूपविशेषाभावात्। अवगतिर्हि प्रमा, तस्याः स्मृतीच्छादिपूर्विकाया अनित्यायाः कूटस्थनित्याया वा न स्वरूपविशेषो विद्यते, यथा धात्वर्थस्य तिष्ठत्यादेः फलस्य गत्यादिपूर्वकस्य अनित्यस्य अगतिपूर्वस्य नित्यस्य वा स्वरूपविशेषो नास्तीति तुल्यो व्यपदेशो दृष्टः- 'तिष्ठन्ति मनुष्याः' 'तिष्ठन्ति पर्वताः' इत्यादिः। तथाऽव-गतिस्वरूपेऽपि प्रमातरि प्रमातृत्वव्यपदेशो न विरुध्यते फलसामान्यात् इति ॥

उच्यते-(பதில்) சொல்லப்படுகிறது. प्रमायाः-ஞானமானது, नित्यत्वे-நித்யமாக இருந்தாலும், अनित्यत्वे च-அநித்யமாக இருந்தாலும், रूपविशेषाभावात्-ஸ்வரூபத்தில் வித்யாஸம் இல்லாததால். प्रमा-ப்ரமை, अवगतिर्हि-ஞானமல்லவா ! स्मृतीच्छादिपूर्विकायाः-ஸ்மரணம் இச்சை முதலியவைகள் முன்னால் இருந்து பின்னால் ஏற்படுகிற, अनित्यायाः-அநித்யமான तस्याः-அந்த ஞானத்திற்கோ, कूटस्थनित्याया वा-மாறுதலடையாத நித்யமான ஞானத்திற்கோ, स्वरूप-विशेषः-ஸ்வருபத்தில் வித்யாஸம், न विद्यते-இல்லை. यथा-எப்படி, धात्वर्थस्य-தாதுவின் பொருளான, तिष्ठत्यादेः फलस्य சலிக்காமலிருப்பது முதலான பலத்திற்கு गत्यादिपूर्वकस्य-செல்வது முதலியவை முன்னால் இருந்து பின்னால் ஏற்படுகின்ற, अनित्यस्य-அநித்யமானதிற்கோ, अगतिपूर्वस्य-கதி முன்னால் இல்லாத, नित्यस्य-நித்யமாக உள்ளதிற்கோ, स्वरूपविशेषः-ஸ்வருபத்தில் வித்யாஸம், नास्ति-இல்லை. इति-என்ற காரணத்தால், 'मनुष्याः-மனிதர்கள், तिष्ठन्ति-நிற்கிறார்கள்', पर्वताः-மலைகள், तिष्ठन्ति-நிற்கின்றன' इत्यादिः-இது முதலான, व्यपदेशः-வ்யவஹாரம் तुल्यः ஸமமாக, दृष्टः-காணப்பட்டிருக்கிறது तथा-அப்படியே, प्रमातरि-ஆத்மா, नित्यावगतिस्वरूपेपि-நித்யமான ஞான ஸ்வருபனாக இருந்தாலும், फलसामान्यात्-பலன் ஸமமாக இருப்பதால், प्रमातृत्वव्यपदेशः-ப்ரமாதா என்ற வ்யவஹாரம் न विरुध्यते- விரோதப் படுகிறதில்லை, इति-என்று.

'ப்ரமாதா' என்ற பதத்திற்கு அறிகிறவன் என்று அர்த்தம். முன்னால் ஞானம் இல்லாமல் அப்பொழுதே புதிதாக ஞானம் ஏற்பட்டால்தானே அவனை ப்ரமாதா என்று சொல்லலாம். நித்யமான ஞான ஸ்வருபனான ஆத்மாவை எவ்வாறு ப்ரமாதா என்று கூறலாம்? இது சிஷ்யனின் கேள்வி. ப்ரமை என்பது ஞானம். அதனால் ப்ரகாசம் ஏற்படுகிறது. ஜடப்பொருள்களைப்பற்றிய ஞானம் புதிதாக ஏற்படுகிறது. ஆத்மா ஞான ஸ்வருபனானதால் அங்கு புதிதாக ஞானம் ஏற்படுவதில்லை. ஏற்கெனவே

இருந்தாலும் சரி புதிதாக ஏற்பட்டாலும் சரி ஞான ஸ்வரூபத்தில் வித்யாஸம் கிடையாது ஆதலால் நித்யமான ஞானத்தைக்கொண்டும் ஆத்மாவை ப்ரமாதா என்று சொல்லலாம். ப்ரமாதா என்பதற்கு ஞானமுள்ளவன் என்று அர்த்தம் 'स्था' (ஸ்த்தா) என்ற தாதுவுக்கு அசையாமல் இருக்கிறது என்று பொருள் முன்னால் அசைந்து கொண்டிருந்து ஒருசமயம் அசையாமலிருக்கும் மனிதர்களையும் அசையாமலிருக்கிறார்கள் என்று சொல்கிறோம் 'मनुष्याः तिष्ठन्ति மனிதர்கள் அசையாமல் நிற்கிறார்கள்' எப்பொழுதுமே அசையாமல் இருக்கும் மலைகளையும் அசையாமலிருக்கின்றன என்று சொல்கிறோம் 'पर्वताः तिष्ठन्ति மலைகள் அசையாமல் நிற்கின்றன' இங்கு முன்னால் அசைவு இருந்தாலும் அசைவு இல்லாவிட்டாலும் அசையாமலிருப்பது என்பது இரண்டிலும் ஸமமாக இருப்பதால் இரண்டையும் ஒரேமாதிரியாகவே तिष्ठन्ति என்று சொல்கிறோம். இது போலவே ப்ரமை முன்னால் இல்லாமல் புதிதாக ஏற்பட்டாலும் சரி அல்லது எப்பொழுதுமே இருந்தாலும் சரி ப்ரமை இருப்பதைக்கொண்டு ப்ரமாதா என்று சொல்லலாம்.

உண்மையில் விசாரித்துப் பார்த்தால் ஜடமான அந்தக்கரணமும் ப்ரமாதாவாக இருக்கமுடியாது. நித்ய ஞான ஸ்வரூபனான ஆத்மாவும் ப்ரமாதாவாக இருக்க முடியாது. அந்தக்கரணத்தில் விருத்தி ஏற்படுகிறது. அந்த விருத்தியில் சைதன்யம் ப்ரதிபலிக்கிறது. அதுவே ஞானம் என்பது. அந்தக்கரணமும் சைதன்யமும் பிரிக்க முடியாதபடி அத்யாஸத்தால் ஒன்று சேர்ந்திருக்கிறது. இதுதான் ப்ரமாதா. ஆகவே அந்தக்கரண உபாதி ஸம்பந்தத்தால்தான் ஆத்மாவும் ப்ரமாதாவாக ஆகிறான்.

अत्राह शिष्यः — नित्यावगतिस्वरूपस्य आत्मनः अविक्रियत्वात् कार्यकरणैरसंहतस्य तक्षादीनामिव वास्यादिभिः कर्तृत्वं नोपपद्यते। असंहतस्वभावस्य च कार्यकरणोपादाने अनवस्था प्रसज्येत। तक्षादीनां तु कार्यकरणैर्नित्यमेव संहतत्वमिति वास्याद्युपादाने न अनवस्था स्यादिति ॥

अत्र–இதில், शिष्यः–சிஷ்யன், आह–சொல்கிறான். नित्यावगतिस्वरूपस्य–நித்யஞானஸ்வரூபனுயும், अविक्रियत्वात्–விகாரம் இல்லாததால், कार्यकरणैः–கார்யகரணங்களுடன், असंहतस्य–சேராதிருக்கும், आत्मनः–ஆத்மாவுக்கு, वास्यादिभिः–வாஸி (இழைப்புளி) முதலிய கருவிகளுடன் (சேர்ந்துள்ள), तक्षादीनामिव - தச்சன் முதலியவர்களுக்குப்போல், कर्तृत्वं - கர்த்தாவாக இருக்கும் தன்மை, न उपपद्यते-பொருந்தாது. असंहतस्वभावस्य–ஒன்றுடனும் சேராமலிருக்கும் ஸ்வபாவமுள்ளவனுக்கு, कार्यकरणोपादाने-சரீரத்தை உபயோகிப்பதில் अनवस्था–அநவஸ்தை என்ற தோஷம், प्रसज्येत - ஏற்படும், तक्षादीनां तु-தச்சன் முதலியவர்களுக்கோவெனில், कार्यकरणैः-கார்யகரணங்களுடன், नित्यमेव-எப்பொழுதுமே, संहतत्वं-சேர்ந்திருக்கும் தன்மை (இருக்கிறது) इति-என்ற காரணத்தால், वास्याद्युपादाने-வாஸி முதலிய கருவிகளை உபயோகிப்பதில், अनवस्था–அனவஸ்தை, न स्यात्-ஏற்படாது, इति-என்று.

தச்சன் இந்த சரீரத்துடன் எப்பொழுதும் சேர்ந்திருக்கிறபடியால் சரீரத்தினுல் ஆயுதங்களை எடுத்து வேலை செய்கிறுன். தச்சன் கர்த்தா. ஆயுதம் காரணம். ஆத்மாவோ நித்யசைதன்யரூபம். மாறுதல் இல்லாதது. சரீரத்துடன் ஸம்பந்தமில்லாதது. இந்த ஆத்மா எந்த சரீரத்தால் இந்தக் கருவியை எடுக்கிறது? வேறொரு சரீரத்தைக்கொண்டு இந்த சரீரத்தை எடுப்பதாகச் சொன்னுல் அதனுடனும் ஆத்மாவுக்கு ஸம்பந்தமில்லாததால் அதை வேறொன்றுல் எடுப்பதாகச்சொல்லவேண்டும். இவ்வாறு அநவஸ்தா தோஷம் ஏற்படும். (104)

इह तु असंहतस्वभावस्य करणानुपादाने कर्तृत्वं नोपपद्यत इति करणमुपादेयम्, तदुपादानमपि विक्रियैवेति तत्कर्तृत्वे करणान्तरमुपादेयम्, तदुपादानेऽप्यन्यदिति प्रमातुः स्वातन्त्र्ये अनवस्था अपरिहार्या स्यादिति। न च क्रियैव आत्मानं कारयति, अनिर्वर्तितायाः स्वरूपाभावात्। अथान्य-

दात्मानमुपेत्य क्रियां कारयतीति चेत्, न, अन्यस्य स्वतस्सिद्धत्वा-विषयत्वाद्यनुपपत्तेः। न हि आत्मनोऽन्यत् अचेतनं वस्तु स्वप्रमाणकं दृष्टम्। शब्दादि सर्वमेव अवगतिफलावसानप्रत्ययप्रमितं सिद्धं स्यात्। अवगतिश्चेत् आत्मनोऽन्यस्य स्यात् सोऽपि आत्मैवासंहतः स्वार्थः स्यात् न परार्थः। न च देहेन्द्रियविषयाणां स्वार्थतामवगन्तुं शक्नुमः, अवगत्यव-सानप्रत्ययापेक्षसिद्धिदर्शनात् ॥ १०५ ॥

इह तु-இங்கோவெனில், असंहतस्वभावस्य-சேராமலிருக்கும் தன்மை உள்ள ஆத்மாவிற்கு, करणानुपादाने-கரணத்தை எடுக்காதவிஷயத்தில், कर्तृत्वं-கர்த்ருத்வம், नोपपद्यते-பொருந்தாது, इति-என்ற காரணத்தால், करणं उपादेयम्-கரணத்தை எடுக்கவேண்டும். तदुपादानमपि-அதை எடுப்பதும், विक्रियैव-விகாரம்தான், इति-என்ற காரணத்தால், तत्कर्तृत्वे-அது விஷயமான கர்த்ருத்வத்தில், करणान्तरं उपादेयम्-வேறு கரணத்தை எடுக்கவேண்டும். तदुपादानेपि-அதை எடுக்கும் விஷயத்திலும், अन्यत्-வேறொன்று, इति-என்று, प्रमातुः-ப்ரமாதாவுக்கு, स्वातन्त्र्ये-கர்த்ருத்வத்தில், अनवस्था-அனவஸ்தையானது, अपरिहार्या स्यात्-நீக்கமுடியாததாக ஆகும். अनिर्वर्तितायाः-உண்டுபண்ணப்படாததற்கு, स्वरूपा-भावात्-ஸ்வரூபமில்லாததால், क्रियैव-க்ரியையே, आत्मानं-ஆத்மாவை, न च कारयति-செய்விக்காது. अथ-அல்லது, अन्यत्-வேறொன்று, आत्मानमुपेत्य-ஆத்மாவினிடம் வந்து, क्रियां-க்ரியையை, कारयति-செய்விக்கிறது. इति चेत्-என்று சொல்வதேயானால், न-அல்ல, अन्यस्य-வேறு வஸ்துவுக்கு, स्वतस्सिद्धत्वाविषयत्वाद्यनुपपत्ते-தானாகவே இருக்கும் தன்மை, விஷயமாகாதிருக்கும் தன்மை முதலானது பொருந்தாத படியால். आत्मनः-ஆத்மாவைக் காட்டிலும், अन्यत्-வேறு, अचेतनं वस्तु-ஜடப்பொருள், स्वप्रमाणकं-தானாகவே ஏற்பட்டிருப்பதாக, न हि दृष्टम्-காணப்பட்டதில்லை. शब्दादि-சப்தம் முதலான, सर्वमेव-எல்லாமே, अवगतिफलावसान-சைதன்ய பலனில் முடியும், प्रत्ययप्रमितं-ஞானத்தால் அறியப்பட்டு,

**सिद्धं स्यात्**—ஸித்தமாக ஆகும். **आत्मनः**—ஆத்மாவைக் காட்டிலும், **अन्यस्य**-வேறு பொருளுக்கு, **अवगतिः**-சைதன்யம் **स्यात् चेत्**—இருக்குமேயானால், **सोपि**—அதுவும், **असंहतः**—சேராத, **स्वार्थः**—தனக்காகவே உள்ள, **आत्मैव**-ஆத்மாவாகத் தான், **स्यात्**—இருக்கும். **न परार्थः**—பிறருக்காக இருக்காது. **देहेन्द्रियविषयाणां**—தேஹம், இந்திரியம், விஷயங்கள் இவைகளுக்கு, **स्वार्थतां अवगन्तुं न च शक्नुमः**—தனக்காகவே இருக்கும் தன்மை இருப்பதாகத்தெரிந்துகொள்ளமுடியாது **अवगत्यवसान**-சைதன்யத்தில் முடியும், **प्रत्ययापेक्षसिद्धिदर्शनात्**—ஞானத்தை எதிர்பார்த்து ப்ரஸித்தமாவதை காண்பதால்.

சரீரத்துடன் சேர்ந்திருக்கும் தச்சன் கையினால் இழைப்புளியை எடுத்து வேலை செய்கிறான். ஆதலால் அவன் கர்த்தாவாகிறான். ஆத்மாவோ சரீரத்துடன் ஸம்பந்தப் படாதது. கரணத்தை எடுக்காததால் எப்படி கர்த்தாவாக முடியும் என்பது சிஷ்யனின் கேள்வி. இதற்கு ஸமாதானம்: சிலவிடங்களில் கரணத்தை எடுப்பதன் மூலம் கர்த்ருத்வம் ஏற்படலாம். இம்மாதிரியான கர்த்ருத்வம் உண்மையில் ஆத்மாவுக்குக் கிடையாதுதான். ஆனாலும் அக்ஞானத்தால் அந்தக்கரணத்திலிருந்து ஆத்மாவைப் பிரித்துத் தெரிந்து கொள்ளாததால் அந்தக்கரணத்தில் ஏற்படும் விகாரங்களை ஆத்மாவில் இருப்பதாக எண்ணி ப்ரமத்தால் ஆத்மாவைக் கர்த்தா என்று சொல்கிறோம். கரணத்தை எடுக்காமல் தான் அருகில் இருப்பதாலேயே காரியம் நடைபெறுவதன் மூலமும் கர்த்ருத்வம் ஏற்படலாம். தச்சன் தன் கைகளை மேலே தூக்கவோ சாமானை எடுக்கவோ இது முதலான காரியங்களிலும் கர்த்தாவாகிறான். இங்கு தான் இருப்பதைத்தவிர கையைத் தூக்குவது முதலான காரியங்களுக்கு வேறு கரணம் ஒன்றையும் எதிர்பார்ப்பதில்லை. இதுபோலவே ஆத்மாவும் ஒன்றுடனும் சேராமலும், கரணத்தை எடுக்காமலும் அருகில் இருப்பதால் மட்டும் காரியங்கள் நடைபெறுவதைக்கொண்டு ஆத்மாவைக் கர்த்தா என்று சொல்கிறோம்.

காரியம் இனிமேல்தான் ஏற்படப்போவதால் முன்ன தாக அதன் ஸ்வரூபமே இல்லாததால் அது ஆத்மாவைத் தூண்டுவதாகச் சொல்லமுடியாது. ஆத்மாவைத்தவிற வேருன ஜடப்பொருள்களுக்கு ஆத்மாவிஞலேயே இருப்பும், விளக்கமும் ஏற்படுவதால் அவைகளும் ஆத்மாவைத் தூண்டமுடியாது. ஆத்மாவைத்தவிற வேறு வஸ்துவுக்கு சைதன்யம் இருக்குமாஞல் அதுவும் ஆத்மாதான் வேறல்ல. தேஹம் இந்திரியம் முதலானவைகளும் குடத்தைப்போல ஞானத்தால் அறியப்படுவதால் ஜடம்தான் சேதனமல்ல. ஆகவே உண்மையில் ஆத்மா கர்த்தாவல்ல; ப்ராந்தியைக் கொண்டு ஆத்மாவைக் கர்த்தா என்று வியவஹாரம் செய்கிருேம். (105)

(அ) சிஷ்யன் கேட்கிருன் :—

ननु देहस्यावगतौ न कश्चित्प्रत्यक्षादिप्रत्ययान्तरमपेक्षते ॥ १०६ ॥

**देहस्य अवगतौ**–தன் தேஹத்தை அறிந்துகொள்ளும் விஷயத்தில், **कश्चित्**–ஒருவனும், **प्रत्यक्षादिप्रत्ययान्तरं**–பிரத்ய க்ஷம் முதலான வேறு ஞானத்தை, **ननु नापेक्षते**–எதிர்பார்ப்ப தில்லையே ?

बाढम्, जाग्रत्येवं स्यात्। मृतिसुषुप्तयोस्तु देहस्यापि प्रत्यक्षादि-प्रमाणापेक्षैव सिद्धिः, तथैवेन्द्रियाणाम्— बाह्या एव हि शब्दादयो देहेन्द्रियाकारपरिणताः — इति प्रत्यक्षादिप्रमाणापेक्षैव हि सिद्धिः। सिद्धि-रिति च प्रमाणफलमवगतिमवोचाम। सा चावगतिः कूटस्था स्वयंसिद्धा आत्मज्योतिःस्वरूपेति च ॥ १०७ ॥

**बाढं**–அப்படியேதான் (ஆஞல்) **जाग्रति**–ஜாக்ரத வஸ்தையில், **एवं**-இவ்வாறு, **स्यात्**-இருக்கலாம், **मृतिसुषुप्तयो-स्तु**–மரணத்திலும், ஸுஷுப்தியிலும், **देहस्यापि**-சரீரத்திற் கும் **प्रत्यक्षादिप्रमाणापेक्षैव सिद्धिः**-பிரத்யக்ஷம் முதலான பிர மாணங்களை எதிர்பார்த்துதான் இருப்புத்தெரிகிறது. **तथैव**-

அப்படியே, इन्द्रियाणाम्–இந்திரியங்களுக்கும். (மேலும்) बाह्याः வெளியிலுள்ளதான, शब्दाद्य एव-சப்தம் முதலியவைகள் தான், देहेन्द्रियाकारपरिणता हि–தேஹமாகவும் இந்திரியங்களாகவும் மாறி இருக்கிறதல்லவா, इति-என்பதாலும், प्रत्यक्षादिप्रमाणापेक्षैव सिद्धिः–ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களை எதிர்பார்த்துத்தான் இருப்பு அறியப்படுகிறது, सिद्धिरिति च-ஸித்தி என்று, प्रमाणफलं–பிரமாணங்களின் பயனை अवगतिं–ஞானத்தை, अवोचाम-சொன்னோம். सा च अवगतिः-அந்த ஞானம், कूटस्था–எப்பொழுதும் மாறாமலிருப்பது स्वयंसिद्धा-தானாக உள்ளது. आत्मज्योतिःस्वरूपा–ஆத்ம ப்ரகாசஸ்வரூபமானது, इति च-என்பதையும், (अवोचाम-முன்னால் கூறியுள்ளோம்.)

தேஹம், இந்திரியம் விஷயங்கள் இவைகளின் இருப்பு சைதன்யத்தால்தான் தெரிகிறது என்று சொன்னதைக் கேட்டு சிஷ்யன் கேட்கிறான். "உலகில் ஒருவராவது தன் தேஹத்தையும் தன் இந்திரியங்களையும் அறிந்து கொள்வதற்கு வேறு ப்ரமாணத்தை எதிர் பார்ப்பதில்லையே? தன் தேஹத்தைப்பற்றி யாருக்காவது ஸந்தேஹம் ஏற்படுகிறதா? தானாகத்தானே தேஹம் விளங்குகிறது" இதற்கு குரு பதில் கூறுகிறார். "ஜாக்ரதவஸ்தையில் தேஹம் தானே விளங்குவதாக நீ நினைக்கலாம் ஸுஷுப்தியிலும், மரணத்திலும் அப்படியில்லையே! அந்நிலைகளில் ஒருவருக்கும் தன் தேஹம் விளங்குவதில்லையே! தேஹம் தானாகவே விளங்குவதாயிருந்தால் எல்லா நிலைகளிலும் அது விளங்கவேண்டாமா? உண்மையில் ஜாக்ரதவஸ்தையிலும் தேஹேந்திரியங்கள் தானாக விளங்குவதில்லை. சைதன்ய பிரகாசத்தால்தான் விளங்குகின்றன. ஆத்மாவைப் பிரித்துத் தெரிந்துகொள்ளாமல் தேஹாதிகளையே ஆத்மா என்று ப்ராந்தியால் எண்ணுவதால்தான் இவைகள் தானாகவே விளங்குவதாக நினைக்கிறோம். உண்மையில் அப்படியல்ல. ப்ரமாணத்தால் ஏற்படும் ஞானத்திலுள்ள சைதன்ய ப்ரகாசத்தால்தான் தேஹாதிகள் இருப்பது நமக்குத் தெரிகிறது. (106-107)

अत्राह चोदक — अवगतिः प्रमाणानां फलं कूटस्थनित्यात्मज्योतिः-स्वरूपेति च विप्रतिषिद्धम् इत्युक्तवन्तमाह — न विप्रतिषिद्धम् । कथं तर्हि? कूटस्था नित्यापि सती प्रत्यक्षादिप्रत्ययान्ते लक्ष्यते तादर्थ्यात् । प्रत्यक्षादिप्रत्ययस्यानित्यत्वे अनित्येव भवति । तेन प्रमाणानां फलमित्युपचर्यते ॥

अत्र-இந்த விஷயத்தில், चोदकः-கேள்வி கேட்கிறவன் आह-சொல்கிறான். अवगतिः-அவகதியானது, प्रमाणानां-பிரமாணங்களின், फलं-பலன் (என்பதும்) कूटस्थनित्या आत्मज्योतिःस्वरूपा इति च-மாறுதலில்லாமல் நித்யமானது, ஆத்ம ப்ரகாசஸ்வரூபம் என்பதும், विप्रतिषिद्धम्-ஒன்றுக்கொன்று நேரெதிரிடையாக உள்ளது इति-என்று, उक्तवन्तं-சொன்னவனைப்பார்த்து, आह-(பதில்) சொல்கிறார். न विप्रतिषिद्धं-விரோதமில்லை, कथं तर्हि-எப்படியெனில்; कूटस्था-மாறுதலில்லாததாகவும், नित्या सत्यपि-நித்யமாகவும் இருந்த போதிலும், तादर्थ्यात्-அதற்காகவே ஏற்பட்டிருக்கிறபடியால், प्रत्यक्षादिप्रत्ययान्ते-பிரத்யக்ஷம் முதலான ஞானத்தில் लक्ष्यते-குறிப்பிடப்படுகிறது. प्रत्यक्षादिप्रत्ययस्य - பிரத்யக்ஷம் முதலான ஞானம், अनित्यत्वे-அநித்யமாக இருந்தால், अनित्येव भवति-அநித்யம்போல ஆகிறது. तेन-அதனால், प्रमाणानां-பிரமாணங்களின், फलमिति-பலன்என்று, उपचर्यते-உபசாரமாகச் சொல்லப்படுகிறது.

ஞானம் என்பது கூடஸ்தம், மாறுதலடையாதது, நித்யம், ஸ்வயம்ப்ரகாசம் என்று ஒப்புக்கொண்டால் அதை பிரமாணத்தாலுண்டாகும் பலனாகக் கூறமுடியாதே என்ற கேள்விக்கு ஸமாதானம் கூறுகிறார். சைதன்ய ஸ்வரூபமான ஞானம் நித்யம்தான் ஆனாலும் பிரத்யக்ஷாதி ப்ரத்யயரூபமான மனோவ்ருத்தியால் இதற்கு அபிவ்யக்தி ஏற்படுகிறது. இதற்காகவேதான் வ்ருத்தி ஏற்படுகிறது. விருத்தியால் சைதன்யத்திற்கு அபிவ்யக்தி ஏற்பட்டதும் விஷயம் நன்கு தெரியவருகிறது. மனோவ்ருத்தி உண்டாகும்பொழுது ஸ்வரூபஞானம் தோன்றியும் வ்ருத்திக்கு நாசம் ஏற்பட்டால்

ஸ்வரூப ஞானம் மறைந்தும் போவதைக்கொண்டு அநித்யம் போலவும் ப்ரமாணத்தால் உண்டாவது போலவும் உபசாரமாகக் கூறப்படுகிறது. கிணறு வெட்டியவுடன் கூபாகாசம் உண்டானது போலவும் கிணற்றை மூடியவுடன் அது நாசமாகிவிட்டது போலவும் சொல்வதில்லையா! அதுபோல்தான். (108)

(அ) இவ்வாறு குருவின் வசனங்களால் எல்லா ஸந்தேஹங்களும் நிவர்த்தியாகி ஆத்மாவையும் அனாத்மாவையும் நன்கு பிரித்துத் தெரிந்து கொண்டதை சிஷ்யன் குருவினிடம் தெரிவிப்பதுடன் "ஆத்மா ஒன்றே பரமார்த்தம், மற்றதெல்லாம் பொய்" என்பதையும் தீர்மானித்துக் கொள்கிறான்:—

यद्येवं भगवन्, कूटस्थनित्यावगतिरात्मज्योतिःस्वरूपैव स्वयंसिद्धा, आत्मनि प्रमाणनिरपेक्षत्वात्, ततोऽन्यदचेतनं संहत्यकारित्वात्परार्थम्। येन च सुखदुःखमोहहेतुप्रत्ययावगतिरूपेण पारार्थ्यं, तेनैव स्वरूपेणात्मनोऽस्तित्वं, नान्येन रूपान्तरेण। अतो नास्तित्वमेव परमार्थतः। यथाहि लोके रज्जुसर्पमरीच्युदकादीनां तदवगतिव्यतिरेकेणाभावो दृष्टः, एवं जाग्रत्स्वप्नद्वैतभावस्यापि तदवगतिव्यतिरेकेणाभावो युक्तः। एवमेव परमार्थतः, भगवन्, अवगतेरात्मज्योतिषो नैरन्तर्यभावात्कूटस्थनित्यताऽद्वैतभावश्च, सर्वप्रत्ययभेदेष्वव्यभिचारात्। प्रत्ययभेदाश्चावगतिं व्यभिचरन्ति। यथा स्वप्ने नीलपीताद्याकारभेदरूपाः प्रत्ययास्तदवगतिं व्यभिचरन्तः परमार्थतो न सन्तीत्युच्यन्ते, एवं जाग्रत्यपि नीलपीतादिप्रत्ययभेदास्तामेवावगतिं व्यभिचरन्तोऽसत्यरूपा भवितुमर्हन्ति। तस्याश्चावगतेरन्योऽवगन्ता नास्तीति न स्वेन स्वरूपेण स्वयमुपादातुं हातुं वा शक्यते, अन्यस्य चाभावात्॥ १०९॥

**भगवन्**-பகவானான குருவே, **यद्येवं**-இப்படியானால், **कूटस्थनित्यावगतिः**-மாறுதலடையாததும் நித்யமான சைதன்ய ஸ்வரூபமானது, **आत्मनि**-தன் ஸ்வரூபத்தில், **प्रमाणनिरपेक्षत्वात्**-பிரமாணங்களொன்றையும் எதிர்பாராத

தால், आत्मज्योतिःस्वरूपैव-ஆத்ம ப்ரகாச ஸ்வரூபமாகவே, स्वयंसिद्धा-தானாகவே இருப்பதாக உள்ளது. ततः-அந்த ஆத்மாவைக்காட்டிலும், अन्यत्-வேறான பொருள், अचेतनं-ஜடமாகவும், संहत्यकारित्वात्-சேர்ந்து காரியம் செய்வதால், परार्थं-பிறரின் பிரயோஜனத்திற்காக ஏற்பட்டிருப்பதாகவும் உள்ளது. येन-எந்த, सुखदुःखमोहहेतुप्रत्ययावगतिरूपेण-ஸுகம், துக்கம், மோஹம் இவற்றின் காரணமான ஞான ஸ்வரூபத்தால், पारार्थ्यं-பிறருக்காக இருக்கும் தன்மை தெரிகிறதோ, तेनैव स्वरूपेण-அந்த ஸ்வரூபத்தால்தான், अनात्मनः-ஜடப்பொருளுக்கு, अस्तित्वम्-இருப்பும் தெரிகிறது. नान्येन रूपान्तरेण-மற்ற வேறு ஸ்வரூபத்தால் அல்ல. अतः ஆகையால், परमार्थतः-உண்மையில், नास्तित्वमेव (ஜடவஸ்துவுக்கு) இல்லாத்தன்மைதான். यथाहि-எப்படி, लोके- உலகத்தில், रज्जुसर्पमरीच्युदकादीनां-கயிற்றில் தோன்றும் ஸர்ப்பம், கானலில் தோன்றும் ஜலம் முதலியவைகளுக்கு, तदवगति-व्यतिरेकेण-அதன் ஞானத்தைத் தவிற வேறாக, अभावः-இல்லாமை, दृष्टः-பார்க்கப்பட்டிருக்கிறதோ, एवं-இவ்வாறு, जाग्रत्स्वप्नद्वैतभावस्यापि-ஜாக்ரதவஸ்தையிலும் ஸ்வப்னத்திலும் காணும் த்வைதப்பொருளுக்கும், तदवगतिव्यतिरेकेण-அதன் ஞானத்தைக் காட்டிலும் வேறாக, अभावःஇல்லாமை, युक्तः-உசிதம். परमार्थतः-உண்மையாக, एवं-இவ்வாறு இருக்கும் பொழுது, भगवन्-பகவானே! आत्मज्योतिषः-ஆத்ம ப்ரகாசரூபமான, अवगतेः-ஞானத்திற்கு, नैरन्तर्यभावादेव- இடையில்லாமல் இருப்பதாலேயே, कूटस्थनित्यता-விகாரமில்லாமல் நித்யமாக இருக்கும் தன்மையும் अद्वैतभावश्च-ஒன்றாக இருக்கும் தன்மையும் ஸித்தமாகிறது. सर्वप्रत्ययभेदेषु-வெவ்வேறான எல்லா ஞானங்களிலும், अव्यभिचारात्-தொடர்ந்து இருப்பதால். प्रत्ययभेदाश्च-வெவ்வேறான விருத்திகளோவெனில், अवगतिं-அவகதியை, व्यभिचरन्ति-வியபிசரிக்கின்றன. (தொடர்ந்து இல்லாமல் மாறி மாறிப் போகின்றன.) यथा-எவ்வாறு, स्वप्ने-ஸ்வப்னத்தில், नीलपीताद्याकारभेदरूपाः-நீலம் பீதம் முதலான வடிவமுள்ள வெவ்வேறான, प्रत्ययाः-ப்ரத்ய

யங்கள், तदवगतिं-அதன் அவகதியை, व्यभिचरन्तः-வ்யபி சரிக்கிறவைகள், परमार्थतः-உண்மையில், न सन्ति-இல்லே, इति-என்று, उच्यन्ते-சொல்லப்படுகின்றனவோ, एवं-இவ் வாறு, जाग्रत्यपि-ஜாக்ரதவஸ்தையிலும், तामेव अवगतिं-அதே அவகதியை, व्यभिचरन्तः-வ்யபிசரிக்கிற, नीलपीतादिप्रत्यय-भेदाः-நீலம், பீதம் முதலான வெவ்வேருன் ப்ரத்யயங்கள், असत्यरूपाः-உண்மையற்றவைகளாக, भवितुमर्हन्ति-இருக்கத் தக்கதாகின்றன. तस्याश्च अवगतेः - அந்த அவகதியை, अवगन्ता-அறிகிற, अन्यः-வேருென்று, नास्ति-இல்லே, इति-என்ற காரணத்தால், स्वेन स्वरूपेण - தன் ஸ்வரூபத்தால், स्वयं-தாஞகவே, उपादातुं-எடுப்பதற்கோ, हातुं वा-விடுவ தற்கோ, न शक्यते-முடியாது, अन्यस्य च अभावात्-வேருென் றும் இல்லாததால்.

ஞானரூபமான ஆத்மசைதன்ய ப்ரகாசம் மாறு பாடில்லாதது. எப்பொழுதும் இருப்பது. வேறு பிரமாணங் களே எதிர்பாராமல் தாஞகவே விளங்குவது. அந்தக் கரணத்தையும் ஆத்மாவையும் பிரித்துத் தெரிந்து கொள்ளாததால் அந்தக்கரணத்தில் விருத்திகள் ஏற்படு வதைக்கொண்டு ஆத்மாவை ப்ரமாதாவாகவும் பிரமாணத் தால் ஞானம் ஏற்படுவது போலவும் அத்யாஸத்தால் நினைக்கிறபோதிலும் உண்மையில் ஆத்மா ப்ரமாதாவல்ல. அது நித்ய ஞானஸ்வரூபம். இந்த ஆத்மாவைத் தவிற மற்றவை எல்லாம் ஒன்றுக்கொன்று சேர்ந்து சேதனனுக் காக ஏற்பட்டவை. ஆகையால் அவை ஜடம். ஜடப்பொருள் தோன்றுவது சைதன்யத்தின் ப்ரகாசத்தால்தான். நன்கு விசாரித்துப்பார்த்தோமாஞல் தோற்றம் தவிற உண்மையில் பொருள்களே இல்லே. கயிற்றில் பாம்பும், கானலில் நீரும் உண்மையில் இல்லாதபோதிலும் அவைகளின் தோற்றத் திஞலேயே வியவஹாரம் நடைபெறுவதுபோல் ஜாக்ரத் திலோ, ஸ்வப்னத்திலோ காணும் பொருள்களும் வாஸ்த வத்தில் இல்லே. வெறும் தோற்றம்தான். பொய்யான இவைகளின் தோற்றத்தாலேயே ஸுகதுக்காதிகளும் எல்லா வியவஹாரங்களும் நடைபெறுகின்றன.

மாலையில் மலர்கள் வெவ்வேறாகப் பலவாக இருந்த போதிலும் அவைகளில் தொடர்ந்து இருக்கும் நார் ஒன்றாக இருப்பது போல எல்லாவற்றிலும் தொடர்ந்து இருக்கும் ஞானம் ஒன்றுதான். இதுதான் உண்மைப்பொருள். மாறி மாறிவரும் விஷயங்கள் வாஸ்தவமல்ல. எல்லாவற்றையும் அறியும் சைதன்யத்தை அறிகிறவன் வேறு யாருமில்லை. சைதன்யம் வேறென்றால் அறியப்படும்பொருளல்ல. இந்த சைதன்யத்தை நம்முடன் சேர்த்துக்கொள்வதற்கோ, நம்மைவிட்டு விலக்குவதற்கோ முடியாது. அப்படியானால் இந்த சைதன்யமேதான் நான். என்னைத் தவிற வேறாக இருக்கும் பொருளை எடுக்கவோ விடவோ முடியும். என்னையே நான் எப்படி விலக்க முடியும்? எப்படி எடுக்க முடியும்? (109)

(அ) குரு சொல்கிறார் :—

तथैवेति । एषा अविद्या यन्निमित्तः संसारो जाग्रत्स्वप्नलक्षणः । तस्याः अविद्यायाः विद्या निवर्तिका । इत्येवं त्वं अभयं प्राप्तोसि, नातः परं जाग्रत्स्वप्नदुःखमनुभविष्यसि । संसारदुःखान्मुक्तोऽसीति ॥ ११० ॥

**तथैवेति** – அப்படியேதான் என்று. **एषा अविद्या**– இது அவித்யை. **यन्निमित्तः** – எந்த அவித்யையின் காரணமாக, **जाग्रत्स्वप्नलक्षणः**–ஜாக்ரத் ஸ்வப்ன ரூபமான, **संसारः**–ஸம்ஸாரம் ஏற்பட்டுள்ளதோ, **तस्याः**– அந்த, **अविद्यायाः निवर्तिका**– அவித்யையைப் போக்குவது, **विद्या**–வித்யை, **इत्येवं**-என்றிவ்வாறு, **त्वं**–நீ, **अभयं**–பயமற்ற நிலையை, **प्राप्तोसि**–அடைந்திருக்கிறாய். **अतः परं**– இனிமேல், **जाग्रत्स्वप्नदुःखं** – ஜாக்ரத் ஸ்வப்னதுக்கத்தை, **नानुभविष्यसि**–அனுபவிக்கமாட்டாய். **संसारदुःखान्मुक्तोसीति** – ஸம்ஸார துக்கத்திலிருந்து விடுபட்டிருக்கிறாய் என்று.

(அ) சிஷ்யன் சொல்கிறான் :—

ओमिति ॥ १११ ॥

**ओमिति**-ஆமாம் என்று.

இவ்வாறு சிஷ்யன் தான் அறிந்துகொண்டதைக் கூறினதும் குருவானவர் அதை அங்கீகரித்து இதுவரை அவித்யையால் ஆத்மசைதன்யம் மறைக்கப்பட்டிருந்ததால் ஸம்ஸார ஸுகதுக்கங்களை அனுபவித்துக்கொண்டிருந்தாய். இப்பொழுது தத்வஞானத்தால் அக்ஞானம் விலகி விட்டது. அபயமான ப்ரஹ்மத்தை அடைந்துவிட்டாய். இனி ஸம்ஸார துக்கம் கிடையாது என்று சொன்னார்.

இதைக் கேட்ட சிஷ்யனும் அந்த நிலையைத்தான் அடைந்திருப்பதாகக் கூறினான். (110–111)

*கூடஸ்தாத்வயாத்மபோத ப்ரகரணம் முற்றிற்று.*

## ३. परिसंख्यानप्रकरणम् ॥

## பரிஸங்க்யான ப்ரகரணம்

(அ) இவ்வாறு இரண்டு பிரகரணங்களால் ஆத்ம தத்வத்தை நன்கு நிரூபணம் செய்து உபதேசம் செய்ததில் சிஷ்யனும் நன்கு மனனம் செய்து தக்க யுக்திகளால் ஆலோசித்துத் தீர்மானித்து ஸந்தேஹங்களைப் போக்கிக் கொண்டான். அஸம்பாவனையும் ஸம்சயபாவனையும் விலகவே ஆத்மஞானம் ஏற்பட்டுவிட்டது. அக்ஞானம் நீங்கிவிட்டதால் இனி அவன் க்ருத க்ருத்யன். செய்ய வேண்டிய காரியம் ஒன்றும் கிடையாது. இனி நிதித் யாஸனம் செய்யலாம். ஆனாலும் சிலருக்கு பூர்வவாஸனு பலத்தால் பேதபாவனை தோன்றிக்கொண்டே இருக்கும். விபரீதபாவனை அடிக்கடி ஏற்பட்டுக்கொண்டிருந்தால் தியானத்தில் அமர்ந்தாலும் காற்றில்லாத இடத்தில் தீப ஜ்வாலை அசையாமலிருப்பது போல நிச்சலமான ஞானம் ஸித்திக்காது ஆகையால் அவர்களுக்கு பேதபாவனை அடியோடு நீங்கி அத்வைத ஆத்மஞானம் திடமாக நிலை பெற்றிருப்பதற்காக பரிஸங்க்யானம் என்ற மூன்ருவது பிரகரணத்தை ஆரம்பிக்கிருர். பரிஸங்க்யானம் என்பது சிந்தித்தல். இதில் சொல்லியபடி சிந்தனம் செய்துவந்தால் பேதவாஸனை நீங்கி அத்வைத ஆத்மஞானம் நிலைபெறும்—

मुमुक्षूणां उपात्तपुण्यापुण्यक्षपणपराणामपूर्वानुपचयार्थिनां परिसंख्यानमिदमुच्यते— अविद्याहेतवो दोषाः वाङ्मनःकायप्रवृत्तिहेतवः, प्रवृत्तेश्च इष्टानिष्टमिश्रफलानि कर्माणि उपचीयन्ते इति तन्मोक्षार्थम् ॥ ११२ ॥

**उपात्त पुण्यापुण्य क्षपणपराणां**–ஸம்பாதிக்கப்பட்ட புண்ய பாபங்களை அழிப்பதில் ஈடு பட்டவர்களும், **अपूर्वानुपचयार्थिनां**–புதிய கர்மாக்கள் சேர்ந்து வளராமலிருப்பதை விரும்புபவர்களுமான, **मुमुक्षूणां**-முமுக்ஷுக்களுக்கு, **इदं परिसंख्यानं**–இந்த பரிஸங்க்யானம், **उच्यते**–சொல்லப்படுகிறது. **अविद्याहेतवः**–அவித்யையின் காரணமாக ஏற்படும், **दोषाः**–ராகம் த்வேஷம் முதலான தோஷங்கள், **वाङ्मनः कायप्रवृत्तिहेतवः**–வாக், மனம் சரீரம் இவைகளின் வியாபாரங்களுக்குக் காரணம், **प्रवृत्तेश्च**–(இந்த) வியாபாரத்திலிருந்து, **इष्टानिष्टमिश्रफलानि**–வேண்டுவது வேண்டாதது இரண்டும் கலந்தது ஆகிய பலன்களைத் தரும், **कर्माणि**-கர்மாக்கள், **उपचीयन्ते**–வளர்கின்றன, **इति**–என்ற காரணத்தால், **तन्मोक्षार्थं**–அவைகளிலிருந்து விடுதலை பெறுவதற்காக (பரிஸங்க்யானம் சொல்லப்படுகிறது.)

அத்வைத ஆத்ம தத்வத்தை உள்ளது உள்ளபடி நன்கு அறிந்துகொள்ளாமைதான் அவித்யை என்பது. இந்த அவித்யையால் பிரபஞ்சத்தை உண்மையென எண்ணி சிலவற்றில் ராகமும் சிலவற்றில் த்வேஷமும் கொள்கிறான். இந்த ராகத்வேஷங்களே 'தோஷங்கள்' எனப்படுகின்றன. இந்த தோஷங்களால் உந்தப்பட்டு வாக், மனம், உடல் என்ற முக்கரணங்களாலும் பல காரியங்களைச் செய்கிறான். இவற்றால் புண்ய பாபகர்மாக்கள் குவிகின்றன. இந்த கர்மாக்களால் நன்மை, தீமை, இரண்டும் கலந்தது என்ற மூன்றுவித பலன்களை அனுபவிக்கிறான். எல்லாவற்றிற்கும் மூலகாரணம் அவித்யை. அவித்யை நீங்கினால்தான் ராக த்வேஷங்களும், ப்ரவ்ருத்திகளும் புண்ய பாப கர்மாக்களும், மூன்றுவித பலன்களும் எல்லாம் நீங்கும். எவர்கள் ஒன்றிலும் ஆசைகொள்ளாமல் அவித்யை நீங்குவதன் மூலம்

ஏற்கனவே தன்னிடம் சேர்ந்துள்ள புண்ய பாபங்கள் தொலைந்து போவதிலும் புதிதாகக் கர்மாக்கள் தன்னிடம் சேராமலிருப்பதிலும் தீவ்ர விருப்பம் கொண்டுள்ளார்களோ அவர்களுக்கு இந்தப் பரிஸங்க்யானம் சொல்லப்படுகிறது. அவர்கள் பின்வருமாறு சிந்தனம் செய்யவேண்டும். (112)

(அ) அநாத்ம வஸ்துக்களிலிருந்து ஆத்மவஸ்துவைப் பிரித்துக் காட்டுகிறார் :—

तत्र शब्दस्पर्शरूपरसगन्धानां विषयाणां श्रोत्रादिग्राह्यत्वात् स्वात्मनि परेषु वा विज्ञानाभावः । तेषामेव परिणतानां यथा लोष्टादीनाम् । श्रोत्रादिद्वारैश्च ज्ञायन्ते । येन च ज्ञायन्ते सः ज्ञातृत्वात् अतज्जातीयः । ते हि शब्दादयः अन्योन्यसंसर्गित्वाज्जन्मवृद्धिविपरिणामापक्षयनाशसंयोगवियोगाविर्भावतिरोभावविकारविकारिक्षेत्रबीजाद्यनेकधर्माणः, सामान्येन च सुखदुःखाद्यनेककर्माणः । तद्विज्ञातृत्वादेव तद्विज्ञाता सर्वशब्दादिधर्मविलक्षणः ॥

तत्र-அதில், शब्दस्पर्शरूपरसगन्धानां-சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் ஆகிய, विषयाणां-விஷயங்களுக்கு, श्रोत्रादिग्राह्यत्वात्-காது முதலியவைகளின் மூலம் அறியப்படும் தன்மை இருப்பதால், स्वात्मनि-தன்னிடமோ, परेषु वा-மற்றவைகளிலோ, विज्ञानाभावः-சைதன்யம் இல்லை. लोष्टादीनां यथा-மண் கட்டிகளுக்குப் போல, परिणतानां-தேஹம் முதலியவைகளாக பரிணாமமடைந்த, तेषामेव-அதே சப்தாதி விஷயங்களுக்கும் (சைதன்யமில்லை) (அவை) श्रोत्रादिद्वारैश्च-காது முதலியவைகளின் மூலமாகத்தான், ज्ञायन्ते-அறியப்படுகின்றன. येन-எதனால், ज्ञायन्ते-அறியப்படுகின்றனவோ, सः-அந்த ஆத்மா, ज्ञातृत्वात्-அறிகிறவராக இருப்பதால், अतज्जातीयः- அவைகளைக் காட்டிலும் மாறுபட்ட ஸ்வபாவமுள்ளவர். ते-அந்த, शब्दादयः-சப்தம் முதலியவைகள், अन्योन्यसंसर्गित्वात् - ஒன்றுக்கொன்று சேர்ந்திருப்பதால், जन्म-பிறப்பு, वृद्धि-வளர்ச்சி, विपरिणाम-மாறுதல், अपक्षय-குறைவு, नाश-அழிவு, संयोग-சேர்க்கை, वियोग-பிரிவு,

आविर्भाव–தோற்றம், तिरोभाव–மறைவு, विकार–விகாரம், विकारि–விகாரத்துடன் கூடியிருப்பது, क्षेत्र–க்ஷேத்ரம், बीजाद्यनेकधर्माणः–பீஜம் முதலான அநேக தர்மங்களுள்ளவை. सामान्येन च–பொதுவாக, सुखदुःखाद्यनेककर्माणः–ஸுகம் துக்கம் முதலான அநேகம் காரியங்களை உண்டு பண்ணு கின்றவை. तद्विज्ञातृत्वादेव–அவைகளை அறிகிறவனாக இருப்ப தாலேயே, तद्विज्ञाता–அதை அறிகிறவனான ஆத்மா, सर्वशब्दादिधर्मविलक्षणः– எல்லா சப்தம் முதலிய தர்மங்களைக் காட்டிலும் மாறுபட்ட ஸ்வபாவமுள்ளவன்.

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் ஸூக்ஷ்மபூதங்கள் தான் எல்லாவற்றிற்கும் மூலகாரணம். இவைதான் தேஹம் முதலியவைகளாக பரிணமித்திருக் கின்றன. இவற்றில் காதால் சப்தமும் த்வகிந்திரியத்தால் ஸ்பர்சமும், கண்ணால் ரூபமும் நாக்கினால் ருசியும் மூக்கினால் வாசனையும் அறியப்படுகின்றன. காது முதலான கருவி களின் மூலம் சப்தம் முதலான விஷயங்களை அறிகிறவன் ஆத்மா. அறிகிறவன் சேதனன். அறியப்படும் விஷயங்கள் ஜடம். அறியப்படுவதனாலேயே விஷயங்கள் ஆத்மாவைக் காட்டிலும் விலக்ஷணமாகவும் ஜடமாகவும் உள்ளன என்று தீர்மானிக்கலாம். அறியப்படுவது அறிபவனாக ஆகாது. அறிபவன் அறியப்படுபவனாக ஆகமாட்டான். இவ்வாறு ஆத்மாவுக்கும் தேஹாதிகளுக்கும் வேறுபாடு உள்ளது. இம்மட்டுமா! பிறப்பு இருப்பு, வளர்ச்சி, மாறுதல், குறைவு, அழிவு என்ற ஆறு பாவ விகாரங்களும் சேர்க்கை - பிரிவு, தோற்றம் – மறைவு, விகாரம் – அத்துடன் கூடியிருப்பது, க்ஷேத்ரம் – பீஜம் இது முதலான அநேக தர்மங்களும் விஷயங்களுக்கு உள்ளன. ஸுகம், துக்கம், மோஹம் என்னும் கார்யம் சப்தாதி விஷயங்களிலிருந்து ஏற்படுகிறது. இவைகளொன்றும் ஆத்மாவுக்குக் கிடையாது. இதனாலும் ஆத்மாவும் சரீராதி விஷயங்களும் ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையானவை.

(113)

तत्र शब्दादिभिः उपलभ्यमानैः पीड्यमानो विद्वान् एवं परिसंचक्षीत ॥

तत्र–அதில், उपलभ्यमानैः–அறியப்படுகிற, शब्दादिभिः–சப்தம் முதலியவைகளால், पीड्यमानः–துன்புறுத்தப்படுகிற, विद्वान्–ஞானி, एवं–பின்வருமாறு, परिचक्षीत–சிந்திக்க வேண்டும்.

இவ்வாறு அறியப்படும் ஜடமான விஷயங்களிலிருந்து அறிகிற சேதனனை ஆத்மாவைப் பிரித்துத் தெரிந்து கொண்டு விஷயங்களை விலக்கி, சேர்த்துக்கொள்ளவோ, விலக்கவோ முடியாமல் தானாகவே விளங்கும் சுத்தமான ஆத்மவஸ்துவையே தியானிக்கும் வித்வானுக்கு ஏதாவது ஸமயத்தில் காது முதலான இந்திரியங்கள் மூலம் சப்தம் முதலான விஷயங்கள் உள்ளே புகுந்து விக்ஷேபம் ஏற்படுமானால் அப்பொழுது பின்வருமாறு சிந்திக்கவேண்டும். (114)

शब्दस्तु ध्वनिसामान्यमात्रेण वा विशेषधर्मैर्वा षड्जादिभिः प्रियैः स्तुत्यादिभिः इष्टैः अनिष्टैश्च असत्यबीभत्सपरिभवाक्रोशादिभिः वचनैर्वा मां दृक्स्वभावमसंसर्गिणमविक्रियमचलमनिधनमभयमत्यन्तसूक्ष्ममविषयं गोचरीकृत्य स्प्रष्टुं नैवार्हति, असंसर्गित्वादेव मम। अत एव न शब्दनिमित्ता हानिः वृद्धिर्वा। अतो मां किं करिष्यति स्तुतिनिन्दादिप्रियाप्रियत्वादिलक्षणः शब्दः। अविवेकिनं हि शब्दमात्मत्वेन गतं प्रियः शब्दो वर्धयेत् अप्रियश्च क्षपयेत्, अविवेकित्वात्; न तु मम विवेकिनो वालाग्रमात्रमपि कर्तुमुत्सहते इति। एवमेव स्पर्शसामान्येन तद्विशेषैश्च शीतोष्णमृदुकर्कशादि-ज्वरोदरशूलादिलक्षणैश्च अप्रियैः प्रियैश्च कैश्चित् शरीरसमवायिभिः बाह्या-गन्तुकनिमित्तैश्च न मम काचित् विक्रिया वृद्धिहानिलक्षणा अस्पर्शत्वात् क्रियते, व्योम्न इव मुष्टिघातादिभिः। तथा रूपसामान्येन तद्विशेषैश्च प्रियाप्रियैः स्त्रीव्यञ्जनादिलक्षणैः अरूपत्वात् न मम काचित् हानिः वृद्धिर्वा क्रियते। तथा रससामान्येन तद्विशेषैश्च प्रियाप्रियैः मधुराम्ललवणकटु-तिक्तकषायैः मूढबुद्धिभिः परिगृहीतैः अरसात्मकस्य मम न काचित् हानिः वृद्धिर्वा क्रियते। तथा गन्धसामान्येन तद्विशेषैः प्रियाप्रियैः पुष्पाद्यनु-

लेपनादिलक्षणैः अगन्धात्मकस्य न मम काचित् हानिः वृद्धिर्वा क्रियते, [1] 'अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत्' इति श्रुतेः ॥

शब्दस्तु–சப்தமோ வெனில், ध्वनिसामान्यमात्रेण – பொதுவான நாதமாத்ரத்தாலோ, प्रियैः-பிரியமான, षड्जादिभिः–ஷட்ஜம் முதலான, विशेषधर्मैर्वा–விசேஷ தர்மங்களாலோ इष्टैः–விரும்பப்பட்ட, स्तुत्यादिभिः–ஸ்தோத்ரம் முதலானவைகளாலோ, अनिष्टैः–அனிஷ்டமான, असत्य–பொய், बीभत्स–அருவருப்பு, परिभव–அவமதிப்பு, आक्रोशादिभिः–வசவு முதலான, वचनैर्वा–வார்த்தைகளினுலோ, दृक्स्वभावं–ஞானஸ்வரூபனும், असंसर्गिणं ஒட்டாதவனும், अविक्रियं–விகாரமற்றவனும், अचलं–அசைவில்லாதவனும், अनिधनं–அழிவற்றவனும், अभयं–பயமற்றவனும், अत्यन्तसूक्ष्मं–மிகவும் ஸூக்ஷ்மமாக (இந்திரியங்களுக்குப் புலப்படாதவனுக) இருப்பவனும், अविषयं–ஞானத்திற்கு விஷயமாகாதவனுமான, मां–என்னை, गोचरीकृत्य–இலக்காகச் செய்து, स्प्रष्टुं–தொடுவதற்கு, नैवार्हति–தகுதியுள்ளதல்ல, मम असंसर्गित्वादेव–நான் ஒன்றுடனும் ஒட்டாமல் இருப்பதனுலேயே. अत एव–ஆகையினுலேயே, शब्दनिमित्ता–சப்தத்தின் காரணமான, हानिः–குறைவோ, वृद्धिर्वा–வளர்ச்சியோ, न–கிடையாது. अतः–ஆனதால், स्तुति–புகழ், निन्दादि–தூஷணை முதலான, प्रियाप्रियत्वादिलक्षणः – ப்ரியமானதும் அப்ரியமானதுமாக இருக்கும், शब्दः–சப்தம், मां–என்னை, किं करिष्यति–என்ன செய்யப்போகிறது? शब्दं–சப்தத்தை, आत्मत्वेन गतं–ஆத்மாவாக அடைந்த, अविवेकिनं हि–விவேகமற்றவனையல்லவா प्रियः शब्दः-வேண்டிய சப்தம், वर्धयेत्–விருத்தியைச்செய்யும். अप्रियश्च–வேண்டாதது, क्षपयेत्–குறைவடையச் செய்யும் अविवेकित्वात् – விவேகமில்லாதிருப்பதால். विवेकिनः–விவேகத்துடன் கூடிய, मम–எனக்கு, वालाग्रमात्रमपि–வால் நுனிமயிர் அளவு கூட, कर्तुं-செய்வதற்கு, न तु उत्सहते சக்தி உள்ளதல்ல, इति–என்று.

1. கடோபநிஷத் 3–15.

**एवमेव**–இது போல, **स्पर्शसामान्येन**–பொதுவான ஸ்பர்சத்தாலும், **तद्विशेषैः**–அதன் விசேஷமான, **शीतोष्णमृदुकर्कशादिज्वरोदरशूलादिलक्षणैश्च**–குளிர், சூடு, மென்மை, கடினம் முதலானதும் ஜ்வரம், வயிற்றுவலி முதலான ஸ்வரூபங்களுமான, **अप्रियैः**–வேண்டாதவைகளாலும், **शरीरसमवायिभिः**–சரீரத்துடன் சேருகின்றதும், **बाह्यागन्तुकनिमित्तैश्च**–வெளிப்பட்ட புதிதாக வந்துள்ளவைகளின் காரணமாக ஏற்படுகின்றதுமான, **कैश्चित्**–சில, **प्रियैश्च**–பிரியமானவைகளாலும் **मम**–எனக்கு, **अस्पर्शत्वात्**–ஒட்டாத்தன்மையால், **व्योम्नः** ஆகாயத்திற்கு, **मुष्टिघातादिभिरिव**–முஷ்டியின் அடி முதலியவற்றால் போல, **वृद्धिहानिलक्षणा**–வளர்ச்சி குறைவு ரூபமான, **काचित् विक्रिया**–விகாரம் ஒன்றும், **न क्रियते**–செய்யப்படுகிறதில்லை. **तथा**–அவ்வாறே, **रूपसामान्येन**–பொதுவான ரூபத்தாலும், **स्त्रीव्यञ्जनादिलक्षणैः**–ஸ்த்ரீ வ்யஞ்ஜனம் முதலியது ரூபமான, **प्रियाप्रियैः**–வேண்டியதும் வேண்டாததுமான, **तद्विशेषैश्च**–அதன் விசேஷங்களாலும், **मम**–எனக்கு, **अरूपत्वात्**–ரூபம் இல்லாததால், **काचित्**–ஒரு விதமான, **हानिः**–குறைவோ, **वृद्धिर्वा**– வளர்ச்சியோ, **न क्रियते** – செய்யப் படுகிறதில்லை. **तथा**–அவ்வாறே, **रससामान्येन**–பொதுவான ரஸத்தாலும், **मूढबुद्धिभिः**–புத்தி மோஹமுள்ளவர்களால், **परिगृहीतैः**–ஸ்வீகரிக்கப்பட்ட, **प्रियाप्रियैः**–வேண்டியதும் வேண்டாததுமான **मधुराम्ललवणकटुतिक्तकषायैः**–இனிப்பு, புளிப்பு, உப்பு, உறைப்பு, கசப்பு, துவர்ப்பு ஆகிய, **तद्विशेषैः**–அந்த ரஸத்தின் விசேஷங்களாலும், **अरसात्मकस्य**–ரஸ ஸ்வபாவமற்ற, **मम**–எனக்கு, **काचित्**–ஒரு, **हानिः**–குறைவோ, **वृद्धिर्वा**–வளர்ச்சியோ, **न क्रियते**–உண்டு பண்ணப்படுகிறதில்லை. **तथा**–அவ்வாறே, **गन्धसामान्येन**–பொதுவான வாஸனையினாலும், **प्रियाप्रियैः**–வேண்டியதும் வேண்டாததுமான, **पुष्पाद्यनुलेपनादिलक्षणैः** புஷ்பம் முதலியதும் சந்தனம் முதலியதுமான ஸ்வரூபமுள்ள **तद्विशेषैश्च**- அந்த கந்தத்தின் விசேஷங்களாலும் **अगन्धात्मकस्य**–வாஸனை ஸ்வபாவமற்ற, **मम**–எனக்கு, **काचित्**-ஒரு, **हानिः**–குறைவோ, **वृद्धिर्वा**–வளர்ச்சியோ, **न क्रियते**–

செய்யப்படுகிறதில்லை, "यत्-எது, अशब्दं-சப்த மற்றது, अस्पर्शं-ஸ்பர்சமற்றது, अरूपं-ரூபமற்றது, अव्ययं-குறை வற்றது, तथा-அவ்வாறே, अरसं-ரஸமற்றது, नित्यं-எப் பொழுதும், अगन्धवच्च-கந்தமில்லாததோ" इति-என்று श्रुतेः-சுருதியினால். (115)

(அ) இதுவரை ஸாமான்யமாகவோ விசேஷமாகவோ ஏற்படும் சப்தாதி விஷயங்களால் தனக்கு வளர்ச்சியோ குறைவோ கிடையாது என்று சிந்திக்கவேண்டியதைக்கூறி விட்டு இனி தனக்கு ஏற்படும் சப்தாதி விஷயங்களின் அனுபவத்தைப்பற்றி சிந்திக்கவேண்டிய ப்ரகாரத்தைக் கூறுகிறார்:—

किं च — य एव बाह्याः शब्दादयः ते शरीराकारेण संस्थिताः, तत्परिणामरूपैस्तद्ग्राहकैश्च श्रोत्राद्याकारैः, अन्तःकरणद्वयतद्विषयाकारेण च, तेषामन्योन्यसंसर्गित्वात् संहतत्वाच्च सर्वक्रियासु। तत्रैवं सति विदुषो न मम कश्चित् शत्रुः मित्रं उदासीनो वा अस्ति। तत्र यदि कश्चित् मिथ्याज्ञानाभिमानेन प्रियमप्रियं वा प्रयुयुक्षेत क्रियाफललक्षणं तन्मृषैव प्रयुयुक्षते सः, तस्याविषयत्वान्मम, [1] 'अव्यक्तोऽयमचिन्त्योऽयम्' इति स्मृतेः। तथा सर्वेषां पञ्चानामपि भूतानामविकार्यः, अविषयत्वात्, [2] 'अच्छेद्योऽयमदाह्योऽयम्' इति स्मृतेः। याऽपि शरीरेन्द्रियसंस्थानमात्रमुपलक्ष्य मद्भक्तानां विपरीतानां च प्रियाप्रियादिप्रयुयुक्षा, तज्जा च धर्माधर्मादिप्राप्तिः, सा तेषामेव, न तु मयि अजरे अमृते अभये, [3] 'नैनं कृताकृते तपतः' [4] 'न वर्धते कर्मणा नो कनीयान्' [5] 'सबाह्याभ्यन्तरो ह्यजः' [6] 'न लिप्यते लोकदुःखेन बाह्यः' इत्यादिश्रुतिभ्यः। अनात्मवस्तुनश्च असत्त्वं परमो हेतुः। आत्मनश्च अद्वयत्वे, द्वयस्य असत्वात्। यानि सर्वाणि उपनिषद्वाक्यानि विस्तरशः समीक्षितव्यानि समीक्षितव्यानि ॥ ११६ ॥

उपदेशसाहस्र्यां गद्यप्रबन्धः समाप्तः ॥

---

1. கீதை 2-25, 2. கீதை 2-24, 3. பிருஹ 4-4-22, 4. 4-4-23, 5. முண் 2-1-2, 6. கட 5-11.

किं च-மேலும், ये-எந்த, बाह्याः-வெளிப்பட்டவைகளான, शब्दादयः-சப்தம் முதலியவைகள், शरीराकारेण-சரீர உருவமாகவும், तत्परिणामरूपैः-அதன் பரிணமமான तद्ग्राहकैः-அவைகளை அறிவதற்கு ஸாதனமான, श्रोत्राद्याकारैश्च-காது முதலியவைகளின் உருவங்களாகவும், संस्थिताः-மாறுதலடைந்து இருக்கின்றனவோ, त एव-அந்த சப்தாதிகளே, अन्तःकरणद्वय-மனது, புத்தி என்ற இரண்டு அந்தக்கரணங்களாகவும், तद्विषयाकारेण च-அதன் விஷயங்களாகவும், संस्थिताः-மாறுதல் அடைந்திருக்கின்றன. तेषां-அவை, अन्योन्यसंसर्गित्वात्-ஒன்றுக்கொன்று சேர்ந்து இருப்பதாலும், सर्वक्रियासु-எல்லாக் காரியங்களிலும், संहतत्वाच्च-சேர்ந்து வேலை செய்வதாலும், (அவை நானல்ல). तत्र एवं सति-அது இவ்விதமிருக்கும்பொழுது, विदुषः-ஞானியான, मम-எனக்கு, कश्चित्-ஒருவனும், शत्रुः-எதிரியாகவோ, मित्रं-நண்பனாகவோ, उदासीनो वा-உதாஸீனனாகவோ, नास्ति-இல்லை. तत्र-அதில், कश्चित्-ஒருவன், मिथ्याज्ञानाभिमानेन-மித்யாஞான மூலகமான தேஹாபிமானத்தால், क्रियाफललक्षणं-கர்மாவின் பல ஸ்வரூபமான, प्रियं अप्रियं वा-ப்ரியத்தையோ அப்ரியத்தையோ, यदि प्रयुयुक्षेत-பிரயோகம் செய்ய விரும்புவானேயாகில், तस्य-அதற்கு, अविषयत्वात् मम-நான் விஷயமாகாத படியால், सः-அவன், तत्-அதை, मृषैव प्रयुयुक्षते-பொய்யாகவேதான் பிரயோகம் செய்ய விரும்புகிறான். "अयं-இது, अव्यक्तः-ஸூக்ஷ்மமானது. अयं-இது, अचिन्त्यः-ஆலோசிக்க முடியாதது" इति-என்ற, स्मृतेः-ஸ்மிருதியால். तथा-அப்படியே, सर्वेषां-எல்லா, पञ्चानामपि भूतानां-ஐந்து பூதங்களுக்கும், अविषयत्वात्-விஷயமாகாத படியால், अविकार्यः-விகாரமடையாதவன் "अयं-இவன், अच्छेद्यः-வெட்டத் தகாதவன், अयं-இவன், अदाह्यः-எரிக்கத் தகாதவன்" इति-என்ற, स्मृतेः-ஸ்மிருதியினால். शरीरेन्द्रियसंस्थानमात्रमुपलक्ष्य-சரீரம் இந்திரியம் இவைகளின் அமைப்பை மட்டும் குறித்து, मद्भक्तानां-என்னிடம் பிரீதிகொண்டவர்

களுக்கும், विपरीतानां च-விரோதம் கொண்டவர்களுக்கும், यापि प्रियाप्रियादिप्रयुयुक्षा-நன்மை தீமை முதலானவற்றை ஏவுவதற்கு எந்த ஆசை ஏற்படுமோ, तज्जा-அதனுல் உண்டாகும், धर्माधर्मादिप्राप्तिः-புண்யம் பாபம் முதலான வைகளை அடைவதோ, सा-அது, तेषामेव-அவர்களுக்குத் தான். अजरे-மூப்பற்றவனும், अमृते - சாவில்லாதவனும், अभये-பயமற்றவனுமான, मयि-என்னிடம், न तु - கிடையாது. "एनं-இவனை, कृताकृते - செய்யப்பட்டதும் செய்யப்படாததுமான கர்மாக்கள், न तपतः-தபிக்கச் செய்கிறதில்லை." "कर्मणा-கர்மாவினுல், न वर्धते - வளரு கிறதில்லை, नो कनीयान्-குறைகிறவனுகவும் ஆகிறதில்லை." "सबाह्याभ्यन्तरः-உள்ளும் வெளியும் நிறைந்தவன் अजः பிறப் பற்றவன்", "बाह्यः-உலக ஸ்வபாவத்திற்கு அப்பாற்பட்ட ஆத்மா, लोकदुःखेन-உலக துக்கத்தோடு, न लिप्यते-ஒட்டுகிற தில்லை." इत्यादिश्रुतिभ्यः-இது முதலான சுருதிகளால். आत्मनश्च-ஆத்மாவானது, अद्वयत्वे-இரண்டற்ற ஒரே வஸ்து வாக இருக்கும்பொழுது, द्वयस्य असत्वात्-இரண்டு இல்லாத தால், अनात्मवस्तुनश्च असत्वं-ஆத்மாவைத் தவிர வேறு பொருள் இல்லை என்பது, परमो हेतुः-முக்யமான காரணம். यानि सर्वाणि उपनिषद्वाक्यानि-ப்ரஹ்மத்தை விளக்குகிற எல்லா உபநிஷத் வாக்யங்களும், विस्तरशः-விரிவாக, समीक्षित-व्यानि- சிந்திக்கத்தக்கவைகள், समीक्षितव्यानि - சிந்திக்கத் தக்கவைகள்.

சப்தம் முதலான விஷயங்களை காது முதலான இந்திரியங்கள் மூலம் அறியும்பொழுது மனதில் இன்பமோ துன்பமோ ஏற்படுகிறது. இன்பத்தைத் தரும் விஷயத்தில் ராகமும் துன்பத்தைத் தரும் விஷயத்தில் வெறுப்பும் கொள்கிறோம். இதற்குக் காரணமாயிருப்பவர்களிடமும் நட்போ பகையோகொள்கிறோம். இது எல்லாம் ஆத்மாவைச் சரியாக அறிந்துகொள்ளாததால்தான் ஏற்படுகிறது. உண்மையில் ஸூக்ஷ்மபூதங்களான சப்தாதிகள்தான் சரீரமாகவும் இந்திரியமாகவும் மனமாகவும் புத்தியாகவும்

ஸாக துக்கங்களாகவும் மற்றும் எல்லாமாகவும் பரிணமம் அடைகின்றன. இவைகள் ஒன்றுக்கொன்று சேர்ந்து உள்ளன. சேர்ந்தேதான் காரியங்களைச் செய்கின்றன. இவைகள் எல்லாம் அறியப்படும் பொருள்கள். இவற்றை அறிகின்ற ஆத்மாவுக்கு இவற்றுடன் ஸம்பந்தம் கொஞ்சமும் கிடையாது. இவ்வாறு அறிந்த எனக்கு நண்பன், எதிரி, உதாஸீனன் என்ற பாகுபாடு கிடையாது எவனுவது ஒருவன் அக்ஞானத்தால் சரீரத்தில் அபிமானம்கொண்டு எனக்கு நன்மையோ தீமையோ செய்வதாக எண்ணினுல் அது வாஸ்தவமல்ல. அது என்னிடம் ஒட்டாது. என் சரீரத்திற்குச் செய்யும் நன்மை தீமைகளால் ஏற்படும் புண்ய பாபங்களும் அதன் பலன்களும் அவர்களுக்கே தவிற எனக்குக் கிடையாது. நன்கு விசாரித்துப் பார்த்தோமானுல் ஆத்மா ஒன்றே உண்மையானது. ஆத்மாவைத் தவிற இரண்டாவது பொருளே வாஸ்தவத்தில் இல்லை. ஒரே ஆத்மவஸ்துவில் நண்பன், எதிரி, ப்ரியம், அப்ரியம் முதலான வேற்றுமைகள் ஏது? இவ்வாறு சிந்திக்க வேண்டும். இந்த விஷயங்களை எல்லாம் நன்கு எடுத்துக் காட்டுகிற எல்லா உபநிஷத் வாக்யங்களையும் திருப்பித் திருப்பி நன்கு பராமர்சம் செய்யவேண்டும்.

உபதேச ஸாஹஸ்ரீ கத்யபாகம் முற்றுப்பெற்றது.

